





# லைப்பாய்
# சோப்

தினசரித்தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களைப் பாதுகாக்கிறது.






# கல்கி பொருளடக்கம்

மலர் 14
இதழ் 14

1954 அக்டோபர் 31

ஜய ஆண்டு
ஐப்பசி 15



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



# உங்களுக்கு மிகப்பிடித்த வனஸ்பதி இப்போது புதிய டின்களில்

## துஷார்
வனஸ்பதி




இன்றுமுதல் புதிய துஷார் டப்பாக்களை வாங்குங்கள்! உங்கள் மனதுக்குகந்த இந்த வனஸ்பதி வைடமின்கள் பெற்று, சுகாதார முறையில் பாக் செய்யப்பட்டு 10, 5, 2 பவுண்ட் டின்களில் கிடைக்கிறது.




**இன்றுமுதல் துஷார் கொண்ட உணவு பரிமாறுக**

இலவசம் — எங்கள் தின்பண்டங்கள் செய்முறைப் புத்தகம் கேட்டுப் பெறுங்கள்.

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கர்நூல்.




மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 14

# பூகம்பத்துக்குப் பின் சூறாவளி

சில மாதங்களுக்கு முன் கிழக்கு பாகிஸ்தானில் அரசியல் பூகம்பத்தினால் ஏற்பட்ட அல்லோல கல்லோலமான நிகழ்ச்சிகளை அதற்குள் யாரும் மறந்திருக்க முடியாது.

கிழக்கு பாகிஸ்தானுக்குத் தான் எவ்விதத்திலும் சளைக்கப் போவதில்லை என்பதை இப்போது மேற்கு பாகிஸ்தான் நிரூபணம் செய்து விட்டது!

மேற்கு பாகிஸ்தானில் சென்ற வாரம் அடித்த அரசியல் சூறாவளி பாகிஸ்தான் அரசியல் நிர்ணய மகா சபையையே வேருடன் பெயர்த்துத் தலைகீழாகச் சாய்த்து விட்டது!

அது மாத்திரமா? அமெரிக்காவுக்குப் பறந்து சென்ற பாகிஸ்தான் பிரதமர் ஜனாப் முகமது அலி, போன வேகத்தைக் காட்டிலும் விரைந்து ஓடி வரும்படி செய்து விட்டது.

போன காரியத்தை முடித்துக் கொண்டு அவராகத் திரும்பி வந்து விடவில்லை; அவர் தமது அமெரிக்கப் பிரயாணத் திட்டத்தை அரை குறை அவசரக் கோலமாக முடித்துக் கொண்டு திரும்பும்படி நேர்ந்திருக்கிறது.

பாகிஸ்தானில் எழுந்த திடீர் நிகழ்ச்சிகளாகிற அரசியல் புயல் அவரை அமெரிக்காவிலிருந்து உந்தித் தள்ளிக் கொண்டு வந்து விட்டது.

* * * *

பாகிஸ்தான் பிரிக்கப்பட்ட போது அதன் தலைவர்கள் விதைத்த விஷ விதை அரசியல் சூறாவளியாகவும் பூகம்பங்களாகவும் 'பலனை'க் கொடுத்து வருகின்றன.

அவர்கள் தூண்டி விட்ட துவேஷமும் இனவெறியும் ஆரம்பத்தில் லட்சக்கணக்கான மக்களைப் பலி கொண்டன; ஒரு கோடி மக்களை இடம் பெயர்ந்து ஓடும்படி செய்தன.

பிறகு அந்தத் துவேஷமும் வெறியும் அடங்கவே இல்லை; அவை பல உருவங்களில் இன்றளவும் பாகிஸ்தானை அல்லல்படுத்தி வருகின்றன.

பாகிஸ்தான் ஏற்பட்டதிலிருந்து அங்கு ஒன்றன்பின் ஒன்றாக நிகழ்ந்த திடீர் மாறுதல்களையும் திடுக்கிடத்தக்க சம்பவங்களையும் பாருங்கள்:

பாகிஸ்தான் சர்க்காரைக் கவிழ்க்கச் சதி செய்ததாகப் பிரதம சேனாதிபதி உள்படப் பல தளபதிகள் தண்டனை அடைந்து சிறைப்பட்டார்கள்.

பாகிஸ்தான் தலைவர்கள் விதைத்த விதைதான் பிரதமர் லியாகத் அலிகானின் கோர மரணத்துக்குக் காரணமாகியது.

அவர்கள் தூண்டிய இனவெறி, பாகிஸ்தான் வெளி நாட்டு மந்திரியாக இருந்த அகமதிய வகுப்பைச் சேர்ந்த சர் ஜபருல்லாகான் மீதும் மற்றவர்கள் மீதும் பாய்ந்து ஒரு குட்டிப் புரட்சியை உண்டு பண்ணியது.

பாகிஸ்தான் பிரதமர் காஜா நாஜிமுத்தீன் பாகிஸ்தான் கவர்னர் ஜெனரலின் பேனா முனையினால் மின்னல் வேகத்தில் பதவியிலிருந்து விலக்கப் பட்டார்.

பாகிஸ்தான் ஏற்பட்ட பின் பல மாகாண மந்திரிகள் குற்றங்கள் சாட்டப் பட்டுத் திடீர் திடீரென்று பதவி இழந்தனர்.

பாகிஸ்தான் சர்க்கார் நிர்வாக ஊழல்களின் விளைவாகக் கிழக்கு பாகிஸ்தானில் செல்வாக்குடன் விளங்கிய முஸ்லிம் லீகர்கள் படுதோல்வி அடைந்து, ஐக்கிய முன்னணிக் கட்சி சர்க்கார் ஏற்பட்டது.

தொண்ணூறு சதவிகித மக்களின் ஆதரவு பெற்றுக் கிழக்கு பாகிஸ்தானில் அமைக்கப் பட்ட பஸ்லுல் ஹக் மந்திரி சபையை விலக்கி விட்டு, சர்வாதிகார ஆட்சியான கவர்னர் ஆட்சியை அமைத்ததின் மூலம் பாகிஸ்தான் சர்க்கார் அந்த மாகாணத்தில் ஜனநாயகத்தையே படுகொலை செய்தனர்; பொது மக்களின் தீர்ப்பைப் புறக்கணித்து, அமைதியின்மைக்கும் அரசியல் நெருக்கடிக்கும் விதை விதைத்தனர்.

# சமாதான வழி




*இந்தியா, சீனாவின் நெருங்கிய நட்பு ஆசியாவின் சமாதானத்துக்கு மாத்திரமல்ல, உலக சமாதானத்துக்கே அஸ்திவாரம் ஆகும் என்று ஜவாஹர்லால்ஜி சீனாவில் பேசியபோது குறிப்பிட்டார்.*

சில தினங்களுக்கு முன் பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபை, பிரதம மந்திரியைப் பதவியிலிருந்து விலக்கப் பாகிஸ்தான் கவர்னர் ஜெனரலுக்கு உள்ள விசேஷ அதிகாரத்தைப் பறிமுதல் செய்தது ஞாபகமிருக்கலாம்.

அதற்குப் பிரதியாகப் பாகிஸ்தான் கவர்னர் ஜெனரல் ஜனாப் குலாம் முகமது, ஏற்கெனவே செய்த குற்றங்கள் காரணமாகக் குறிப்பிட்ட வருஷங்கள் எந்தப் பதவியும் வகிக்கக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருந்த முன்னாள் மந்திரிகளையெல்லாம் அதாவது எதிர்ப்புச் சக்திகளையெல்லாம் அந்தக் கட்டுப்பாட்டிலிருந்து முற்றிலும் விடுதலை செய்து விட்டார்.

அதன் காரணமாக ஜனாப் குலாம் முகமதுவின் கை மிகவும் பலம் அடைந்து விட்டது.

பாகிஸ்தான் கவர்னர் ஜெனரல் அத்துடன் நிற்கவில்லை. தமக்கிருந்த விசேஷ அதிகாரத்தைப் பறிமுதல் செய்யத் துணிந்த பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபையின் மண்டையிலே ஒரே போடாகப் போட்டு விட்டார்.

மேற்படி சபை பாகிஸ்தான் மக்களின் நம்பிக்கையை அடியோடு இழந்து விட்டது என்று கூறி அதைக் கலைத்து விட்டார்.

மேலும் கவர்னர் ஜெனரல் குலாம் முகமது பாகிஸ்தான் முழுதும் நெருக்கடி நிலைமை ஏற்பட்டிருப்பதாகப் பிரகடனம் செய்துள்ளார்.

புதிதாகத் தேர்தல்கள் நடத்திப் புதிய அரசியல் நிர்ணய சபையை அமைக்க வேண்டும் என்றும் உத்தரவு பிறப்பித்துள்ளார்.

மறுபடியும் அரசியல் நிர்ணய சபை ஏற்படும் வரையில், ஜனாப் முகமது அலியின் தலைமையில் புதிதாக அமைக்கப்பட்டுள்ள மந்திரி சபை பாகிஸ்தான் நிர்வாகத்தை நடத்தி வரும்.

பழைய மந்திரி சபையில் பதவி வகித்த ஆறு பேருக்குப் புதிய மந்திரி சபையில் இடமிராமற் போய் விட்டது.

எனவே, தேர்தல்கள் நடந்து பாகிஸ்தானில் புதிய அரசியல் நிர்ணய சபை ஏற்படும் வரையில், அந்த நாட்டிலே ஏற்பட்டுள்ள பரபரப்பும் நெருக்கடியும் தணியும் என்று சொல்லுவதற்கில்லை.

பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபை மக்களின் நம்பிக்கையை இழந்து விட்டது; எனவே, புதுத் தேர்தல்கள் நடத்தி அரசியல் நிர்ணய சபையை உருவாக்க வேண்டும் என்று சில மாதங்களுக்கு முன் கிழக்கு வங்காளத்தில் ஏற்பட்ட பஸ்லுல் ஹக் சர்க்கார் வற்புறுத்தினர்.

பாகிஸ்தான் மக்களில் பெரும்பாலோர் கிழக்கு வங்காளத்தில் வசிக்கிறார்கள். அங்கு நடந்த தேர்தலில், பெருவாரியான முஸ்லிம் லீக் அங்கத்தினர்கள் தோல்வி அடைந்து விட்டார்கள். எனவே, முஸ்லிம் லீக் பிரதிநிதிகள் பெரும்பாலோராக உள்ள பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபையில் மக்களுக்கு நம்பிக்கை இல்லை என்பது நிச்சயமாகி விட்டது. ஆகையால் மேற்படி சபையைக் கலைத்து விட்டு, தேர்தல் நடத்தி, புதிய சபையை அமைக்க வேண்டும் என்று பெரும்பாலோரின் ஆதரவு பெற்ற ஹக் சர்க்கார் கூறினர்.

இந்தக் கருத்தை எல்லை காந்தி கான் அப்துல் கபார்கானும் பூரணமாக ஆதரித்தார்.

ஆனால், அப்போது அவர்களுடைய நியாயமான கோரிக்கை பாகிஸ்தான் கவர்னர் ஜெனரலின் செவிகளில் ஏறவில்லை; பாகிஸ்தான் பிரதமரின் காதில் விழவில்லை.

இப்போது கவர்னர் ஜெனரல் ஜனாப் குலாம் முகமது பாகிஸ்தான் அ. நி. சபைக்குத் தேர்

தல்கள் நடைபெற வேண்டும் என்று பிறப்பித்துள்ள உத்தரவு, பஸ்லுல் ஹக் சர்க்காரின் கோரிக்கை முற்றிலும் நியாயமானது என்பதை வெளிப்படுத்தி யிருக்கிறது.

மேற்படி உத்தரவு, கிழக்கு வங்காளத்தில் ஏற்பட்டுள்ள கவர்னர் ஆட்சி தான்தோன்றித்தனமான ஆட்சி என்பதையும் உலகம் அறிய அம்பலப்படுத்தி யிருக்கிறது.

"பாகிஸ்தான் அ. நி. சபையில் அங்கத்தினர்களிடையே பொறுமையும் பூசலும் அதிகமாகி விட்டன. எனவே, நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்பை இனி அதனிடம் விட்டு வைக்க முடியாது. ஆகையினால்தான் அதைக் கலைத்துவிட கவர்னர் ஜெனரல் முடிவு செய்தார்" என்று பிரதமர் ஜனப் முகமது அலி தமது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

பாகிஸ்தான் அ. நி. சபையைச் சிறிது காலத்துக்கு முன் வரையில் பூரணமாக ஆதரித்து வந்த பிரதமரே மேலே கண்டவாறு கூறியுள்ளாரெனில், பாகிஸ்தான் குழப்பத்தைப் பற்றி வர்ணிக்கத் தேவையில்லை அல்லவா!

பாகிஸ்தான் தலைவர்கள் துவேஷ புத்தியைக் கைவிட்டு, இன வெறியை ஒழித்து, நேர்மையுடன் நடந்து கொண்டிருந்தால், சென்ற ஏழு வருஷ காலத்துக்குள் அந்த நாட்டில் புதிய அரசியல் திட்டம் உருவாகி யிருக்கும்.

ஆனால் இப்போதோ பாகிஸ்தான் அரசியல் திட்டம் உருவாகாததுடன், அந்த அலுவலில் ஈடுபட்டிருந்த அரசியல் நிர்ணய சபைக்கே ஆபத்து ஏற்பட்டு விட்டது!

நேர்மையான பாதையை விட்டுவிட்டு, வல்லரசுகளின் ஆதரவின் மூலம் பலம் தேட முற்பட்டுள்ள சில மத்திய கிழக்கு நாடுகளைப் போல், பாகிஸ்தானிலும் இப்போது நித்திய கண்ட நிலையற்ற ஆட்சி இருந்து வருகிறது.

பாகிஸ்தான் சர்க்கார் அமெரிக்காவின் உதவியை நாடுவதைப் பாகிஸ்தான் மக்கள் ஆதரிக்கவில்லை என்பதை 'மாஞ்செஸ்டர் கார்டியன்' போன்ற பிரபல வெளிநாட்டுப் பத்திரிகைகள் மறைமுகமாகச் சுட்டிக் காட்டத் தொடங்கி யுள்ளன.

எனவே, அமெரிக்காவிட மிருந்து இராணுவ உதவி பெறுவதன் மூலம் தங்களுக்குப் பலம் தேடவும் தங்கள் செல்வாக்கை நிலைநிறுத்திக் கொள்ளவும் பாகிஸ்தான் தலைவர்கள் முயற்சிப்பதால், பாகிஸ்தான் நெருக்கடி தீர்ந்து அந்த நாட்டின் நிலைமை சீர்ப்பட்டு விடாது என்பதையே பாகிஸ்தான் நிகழ்ச்சிகள் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபணம் செய்கின்றன.

# மந்திரி ஸ்ரீ கித்வாய் மறைந்தார்

இந்திய சர்க்கார் உணவு மந்திரி ஸ்ரீ ரபி அகமது கித்வாயின் திடீர் மரணம் பொதுவாக அகில இந்தியாவையும், குறிப்பாக நேருஜி, ராஜாஜி முதலிய தலைசிறந்த தலைவர்களையும் ஆற்றொணாத் துயரத்தில் ஆழ்த்தியிருக்கிறது. சுதந்திர இந்திய சர்க்கார் ஏற்பட்ட பின் உணவு மந்திரி பதவியை வகித்த பிரமுகர்கள் தீர்க்க முடியாத உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதில் ஸ்ரீ கித்வாய் வெற்றி பெற்றார். அந்த மாபெரும் வெற்றி தேசத் திருப்பணியில் ஈடுபட்ட அவரது வாழ்க்கைக்கே சிகரமாக அமைந்தது.

சிக்கலான பிரச்னைகளைத் தீர்ப்பதில் விசேஷத் திறமை வாய்ந்தவர் என்ற புகழ் ஸ்ரீ கித்வாய்க்கு வெகு காலமாக உண்டு.

பாரத நாட்டிலே ஒத்துழையாமை இயக்கம் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில் தேசியத் தலைவர்களுக்கு வரும் கடிதங்கள் அதிகாரிகளின் கடுமையான தணிக்கைக்கு உட்படலாயின. அதனால் கடிதங்கள் மாயமாய் மறைவதும் தாமதித்து வருவதும் சகஜமாயின. அத்தகைய தொல்லைகளிலிருந்து விடுதலை பெற வழி என்ன என்ற பிரச்னை எழுந்தது. தணிக்கை அதிகாரி இரகசிய போலீசைச் சேர்ந்தவராதலால், அவரை யார் என்று கண்டு பிடித்து, அவருக்கு விண்ணப்பம் செய்து கொள்வது என்பதும் முடியாத காரியம். எனவே, ஸ்ரீ கித்வாய் அப் பிரச்னையைத் தீர்க்க ஒரு வழியைக் கண்டு பிடித்தார். கடிதத் தணிக்கையால் தங்களுக்கு ஏற்படும் தொல்லைகளை விளக்கித் தணிக்கை அதிகாரிக்குக் கடிதம் எழுதி, அக் கடிதத்தை உறையில் வைத்துத் தம்முடைய விலாசத்துக்கே அனுப்பி விட்டார். வழக்கம்போல் மேற்படி கடிதமும் தணிக்கை அதிகாரியின் கையில் சிக்கியது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. எனினும், அக்கடிதத்தின் மூலம் தமது தவறை உணர்ந்த தணிக்கை அதிகாரி, தலைவர்கள் விஷயத்தில் தாம் கையாண்டு வந்த கடுமையான தணிக்கை முறையைக் கை விட்டார்!

1921-ம் ஆண்டில் நடைபெற்ற ஒத்துழையாமை இயக்கத்தை ஒட்டிச் சட்டக் கல்லூரிப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்த ஸ்ரீ கித்வாய், தேசியப் போராட்டங்களில் ஈடுபட்டுப் பல தடவைகள் சிறை சென்றார். காங்கிரஸ் மகா சபையிலும் அவர் பல பொறுப்பான பதவிகளை வகித்துத் தேசத்துக்குத் தொண்டு புரிந்து வந்தார்.

ஸ்ரீ கித்வாய் சுதந்திர இந்திய சர்க்காரில் தபால், தந்தி இலாகா மந்திரியாக இருந்த காலத்தில் பலத்த எதிர்ப்பையும் லட்சியம் செய்யாமல் செய்த சீர்திருத்தங்களை யாரும் மறக்க முடியாது. இரவு விமானத் தபால் போக்குவரத்து, தபால் இலாக்கா சிப்பந்திகளுக்கு ஞாயிறு விடுமுறை போன்ற பல வசதிகள் செய்த தனிப் பெருமை ஸ்ரீ கித்வாய்க்கே உரியது. பிறகு உணவு மந்திரியாக இருந்தபோது பஞ்சம், லஞ்சம் எல்லாவற்றுக்கும் மூல காரணமாக இருந்த உணவுப் பொருள் பங்கீடு முறையையும் தைரியத்துடன் ரத்து செய்ய அவர் தயங்கவில்லை. ஸ்ரீ கித்வாய் தபால், தந்திப் போக்குவரத்து மந்திரியாக இருந்தபோதும், உணவு மந்திரியாக இருந்த போதும் முறையே தபால், தந்தி காரியாலயங்களுக்கும் ரேஷன் கடைகளுக்கும் திடீர் திடீரென்று விஜயம் செய்து, தபால் சிப்பந்திகளும் ரேஷன் கடைக்காரர்களும் தங்களுடைய கடமைகளை ஒழுங்காகவும் நேர்மையுடனும் செய்யும்படி தூண்டி வந்தார்.

இவ்விதம் தேசியப் போராட்டத்திலும் சுதந்திர இந்திய சர்க்கார் நிர்வாகத்திலும் முன்னணியில் நின்று நாட்டுக்கு அரும் பெரும் தொண்டு புரிந்து வந்த ஸ்ரீ கித்வாய் அவர்களின் நினைவை இந் நாட்டு மக்கள் என்றும் போற்றி வருவார்கள் என்பதில் ஐயமில்லை.

# டில்லிப் பேச்சுக்களின் பலன்

கொழும்பு, அக்டோபர் மீ 22உ

புது டில்லி ஒப்பந்தத்தை அனுசரித்து இலங்கைப் பிரஜாவுரிமைக்குத் தாக்கல் செய்துள்ள எட்டு லட்சம் இந்திய வம்சாவளியினர்களின் மனுக்களைத் துரிதமாகப் பட்டுவாடாச் செய்து முடிக்கவும் அதுவரையில் இந்த மக்கள் இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையில் பிரயாணம் செய்யவும் இலங்கை அரசாங்கம் தேவையான நடவடிக்கைகளை எடுக்க விருக்கிறது. இதற்காகப் பிரஜா பதிவு இலாகாவிலும் இமிகிரேஷன் இலாகாவிலும் புதிய பல அதிகாரிகளை நியமிக்க உத்தேசித்திருக்கிறார்கள். வழுவில் இந்தியப் பிரஜாவுரிமையை நாடுவோர்களை இந்தியப் பிரஜைகளாக இந்திய ஹைகமிஷனர் பதிவு செய்து கொள்ள வேண்டுமென்பது ஏற்பாடு. இலங்கைப் பிரஜாவுரிமை பெறுவதைவிட இந்தியப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளுவதுதான் நல்லதென்று பிரசாரம் செய்யவும், அரும் பெரும் சேவை புரிந்துள்ள இலங்கை ஜனநாயக காங்கிரஸையும் அதன் தலைவர்களையும் தூற்றவும் சில விஷமக் கும்பல்கள் இப்பொழுது கிளம்பியிருக்கின்றன. அரசாங்க ஆதரவுடன் இயங்கும் இந்தக் கும்பலின் யோக்கியதை பொது ஜனங்களுக்கு நன்கு தெரியுமாகையினால் அதை யாரும் மதிக்கவில்லை. என்றாலும், இலங்கையில் எவ்வித மான ஸ்திரந்தர உரிமைகளுமில்லாமல் அண்டிப் பிழைக்க வந்த இந்தக் கருங்காலிகள் கௌரவமாக நாட்டை விட்டு வெளியேறுவதை விட்டு, போகும் பொழுது இலங்கையைத் தவிர வேறு] தேசமறியாத இலங்கைப் பிரஜைகளான பல இந்தியத் தமிழ் மக்களுக்கும் துரோகம் செய்து விட்டுப் போக நினைப்பதை எவ்வளவு வன்மையாகக் கண்டித்தாலும் மிகையாகாது. இந்தியப் பிரஜாவுரிமையை விரும்பும் இந்திய வம்சாவளியினர்களுக்கு வழுவில் இந்திய ஹைகமிஷனரிடம் மனுப்போட்டு இந்தியப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளத் தெரியாதா! இவ்வளவு காலமும் ஒன்றரை லட்சம் பேர்கள் இந்தியா பாஸ்போர்ட் பெறவில்லையா! இதற்கு இலங்கை அரசாங்க ஆதரவுடன் பிரத்தியேகமான ஸ்தாபனங்கள் புற்றீசல்களைப் போலத் திடீரென்று முளைக்க என்ன அவசியம்! இவ்வளவு காலமும் இந்த ஸ்தாபன நிர்வாகிகள் எங்கே இருந்தார்கள்!

இரு நாடுகளுக்கு மிடையில் பெருத்த நெருக்கடியையும் மனக் கசப்பையும் விளைவித்து வந்தது, நாடற்றவர்கள் யாருடைய பொறுப்பு என்ற பிரச்னைதான். இந்த முக்கியப் பிரச்னை டில்லிப் பேச்சுக்களில் தீரவில்லை. இரண்டு வருடங்களுக்குப் பிறகு மீண்டும் ஆராய இது ஒத்தி வைக்கப் பட்டிருக்கிறது. இந்தியா சம்பந்தப்பட்ட மட்டில் நாடற்றவர்கள் ஒருபோதும் இந்தியாவின் பொறுப்பு ஆகமாட்டார்க ளென்பதை நேருஜி மீண்டும் கண்டிப்புடன் சொல்லி விட்டார். இது இருதேசப் பிரதம மந்திரிகளும் விடுவித்த கூட்டு அறிக்கையிலும் குறிப்பிடப்பட்டு விட்டது.

எனினும், நாடற்றவர்களை இந்தியப் பிரஜைகளாகுமாறு தூண்ட, இந்தியப் பிரஜைகளாகின்றவர்கள் இலங்கையில் தங்கு தடையின்றி 55 வயது வரையில் இருக்கலா மென்றும் இஷ்டப்பட்ட பொழுது இந்தியாவுக்குப் போய் வரலாமென்றும்

---

## ரேடியோ ரிப்பேர்!




ஐக்கிய நாடுகள் சபை என்னும் அகில உலக ரேடியோவை அமெரிக்காவும் ருஷ்யாவும் அடிக்கடி "ரிப்பேர்" செய்ய முயற்சிக்கிறார்கள். அதன் பலனாக, ரேடியோவுக்கு ஆபத்து வருமோ என்ற கவலை ஏற்பட் டிருக்கிறது.

இந்தியாவிலுள்ள சுற்றத்தார்களுக்குச் சுலபமாகப் பணம் அனுப்பலாமென்றும் பல சலுகைகளை வழங்குவதாக இலங்கை அரசாங்கம் ஒப்புக்கொண்டிருக்கிறது. இது தவிர இந்தியப் பிரஜைகளானவர்களை 55 வயதுக்கு முன்பே இந்தியாவுக்குத் திரும்பி விடுமாறு ஆசை காட்ட ரொக்கப் பணம் கொடுப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இந்த நடவடிக்கைகளெல்லாம் நாடற்றவர்களுக்கு இலங்கை மறைமுகமாகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டு விட்டதையே சுட்டிக் காட்டுகின்றன.

வேலை, ரேஷன், வைத்திய, கல்வி வசதி ஆகியவைகளை மறுத்து நாடற்றவர்களை இந்தியப் பிரஜைகளாகுமாறு வலுக் கட்டாயம் செய்வதென்று இலங்கை அரசாங்கம் முன்பு திட்டமிட்டிருந்தது. இப்பொழுது இந்தத் திட்டத்தை ஒத்தி வைத்திருக்கிறது. பெரும்பாலான இந்தியர்கள் இங்கு பிழைக்க வந்தவர்களென்றும், 55 வயது வரையில் இலங்கையில் பிழைக்கலாமென்பதற்கு உத்தரவாத மளித்தால் அவர்கள் இலங்கைப் பிரஜாவுரிமை கேட்காமல் இந்தியப் பிரஜைகளாயிருக்கவே விரும்புவார்களென்றும் இலங்கை அரசாங்கம் கருதுகிறது. இதனால் நாடற்றவர்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைந்து அவர்களது பிரச்னையைப் பிறகு ஆராய்வது சுலபமென்பது இலங்கையின் அபிப்பிராயம்.

இலங்கைப் பிரஜாவுரிமைக்குத் தாக்கல் செய்துள்ள சகல மனுக்களையும் அடுத்த இரண்டு வருடங்களுக்குள் பைசல் செய்து விடுவதென்றும் அதன் பிறகு நாடற்றவர்களின் நிலையை ஆராய்வதென்றும் இலங்கை ஒப்புக் கொண்டிருக்கிறது. பிரஜாவுரிமை மனுக்களையெல்லாம் எவ்வளவு துரிதமாகப் பைசல் செய்வதாயிருந்தாலும் குறைந்தது ஐந்து வருடங்களாவது பிடிக்கவே செய்யும். அதுவரையில் நாடற்றவர்களுக்கு அவர்களுடைய வேலை பாதுகாக்கப்பட்டிருக்கிறது. இதன் பிறகு இலங்கையர்களுக்கு அதிக வேலைகள் கிடைக்கச் செய்ய நடவடிக்கை யெடுக்கும் உரிமை இலங்கை அரசாங்கத்துக்கு உண்டு என்று கூட்டு அறிக்கை கூறுகிறது. ஐந்து வருடங்களுக்குப் பிறகு ஏற்படக் கூடிய பிரச்னையைப் பற்றி இப்பொழுது மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டாமென்று இரு தேச அரசாங்கங்களும் புத்திசாலித்தனமாக ஒத்தி வைத்துக் கொண்டிருக்கின்றன.

இலங்கைப் பிரஜாவுரிமைக்கு மனுக் கொடுத்து உரிமை பெறக் காத்திருக்கும் பல லட்சம் தோட்டத் தொழிலாளர் அவசரக் காரணங்களுக்காகவும் இலங்கையை விட்டுப் போக முடியாமல் இங்கேயே சிறையிருக்க வேண்டியதாயிருந்தது. இப்பொழுது இந்த நிலைமை மாறி இவர்களுக்குப் பிரயாண தஸ்தாவேஜுகள் கொடுக்க இலங்கை அரசாங்கம் சம்மதித்திருக்கிறது. சீர உழைப்புத் தொழிலாளர் இந்தியாவுக்கு வந்தால் இலங்கைக்குத் திரும்பக் கூடாதென்ற தடையை வாபஸ் பெற இந்தியாவும் சம்மதித்திருக்கிறது. சுருக்கமாக, இந்த ஒப்பந்தத்தைச் செய்து கொள்ள இரு தரப்பினரும் விட்டுக் கொடுத்துள்ளது எதிர் கால நல்லுறவுக்கு ஒரு மேலான அறிகுறி.

காங்கிரஸ் தலைவர் சொல்லியிருப்பதைப் போல, இப்பொழுது ஏற்பட்டிருக்கும் ஒப்பந்தம் பழைய நேரு-கொத்தலாவல ஒப்பந்தமேதான். இரண்டுக்குமுள்ள ஒரே வித்தியாசம், சிக்கலான இப்பிரச்னையைச் சட்டத்தினாலல்லாமல் மனிதாபிமானத்துடனேயே தீர்க்க வேண்டுமென்பதையும், பிரஜாவுரிமைச் சட்டத்தை அமுல் நடத்த நீதி நியாயமற்ற பல உத்தரவுகளைப் பிறப்பித்திருப்பது தவறுதானென்பதையும் இலங்கை இப்பொழுது உணர்ந்திருப்பதாகத் தோன்றுகிறது. இதை உணர இலங்கை அரசாங்கத் தூதுகோஷ்டி டில்லி வரையில் புனித யாத்திரை செய்ய வேண்டியிருந்தது. வாய் வார்த்தையில் காட்டும் மனமாற்றத்தை அரசாங்கம் செயல் முறையிலும் காட்டுவதாயிருந்தால் பிரச்னை தீருவது சுலபம் .—ரஜனி.

# தீபாவளிக் கொண்டாட்டம்

சென்ற வாரம் நமது நேயர்கள் புத்தாடை உடுத்தித் தீபாவளித் திருநாளை வெகு சிறப்பாகக் கொண்டாடி இருப்பார்கள்.

இதோ இந்த இதழ் அட்டையில் காணும் காட்சியைப் போன்ற சில மகிழ்ச்சியூட்டும் காட்சிகளையும் நேயர்கள் பார்த்து அனுபவித்திருக்கக் கூடும்.

ஆம், இந்த வீட்டுக்காரர் குழந்தைகளுக்காகத் துணிமணிகள், மத்தாப்புகள், பட்டாசுகள் யாவும் வாங்கி வந்தார். கூடவே ஒரு 'கல்கி' தீபாவளி மலரையும் வாங்கி வந்தார். அவ்வளவுதான் ! குழந்தைகள் 'கல்கி' மலரைப் பார்த்தவுடனே ஒருவருடன் ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு அவரிடமிருந்து மலரைப் பறித்து வாங்கிக் கொள்ள முயன்றார்கள். அப்பா தாம் ஒரு தடவை பார்த்து விட்டுத் தருவதாகச் சொல்லி உட்கார்ந்தார். "அதெல்லாம் முடியாது !" என்றான் தம்பி. அப்பா மடியிலேயே உட்கார்ந்து மலரைத் தான் வாங்கிக் கொண்டு பார்க்கலானான். உடனே அவனுடைய அக்காமார் இருவரும் அவனுடன் பார்க்க வந்து விட்டார்கள். அடுப்படியில் வேலையாக இருந்த தாயாரின் காதில் குழந்தைகளின் குதூகலக் கூச்சல் விழுந்தது. 'கல்கி' மலர் வந்து விட்டது என்று தெரிந்து கொண்டாள். அப்படியே அடுப்புக் காரியத்தை விட்டுவிட்டு, மலர் பார்க்க வந்து விட்டாள். மலரைப் பார்த்ததும், எல்லாருடைய கண்களும் எப்படி மலர்ந்திருக்கின்றன பாருங்கள் !

கூடத்தில் பொம்மைகளை வைத்து ஒரு பக்கமாக விளையாடிக் கொண்டிருந்த அந்தச் சின்னஞ் சிறு குழந்தையின் கண்களில் மலரின் அட்டையிலுள்ள வண்ண ஓவியம் பட்டு விட்டது ! அதுவும் மலரை ரஸிக்க வேகமாகத் தவழ்ந்து வரும் காட்சியைப் பாருங்கள் !

இவை எல்லாவற்றையும் விட 'இதென்னடா வம்பாகப் போய் விட்டது !' என்று அப்பா அபாரமாக முழித்துக்கொண்டு தலை சொறிகின்ற காட்சி அற்புதமாக இருக்கிறது !

இந்த அழகிய ஓவியத்தைத் தீட்டியவர் நமது ஹாஸ்ய சித்திரக்காரர் 'ரகு.'

# அமர தாரா






## அத்தியாயம் 17

## வால் அறுந்த நாய்

ஜமீன்தார் உயிரோடிருந்த போது அவருடைய குமாரரிடம் அரண்மனையைச் சேர்ந்தவர்கள் எவ்வளவு மரியாக நடந்து கொண்டார்கள் என்பதைக் காசிலிங்கம் கவனித்திருந்தார். இப்போது அந்தப் பிள்ளையே ஜமீன்தாராகி விட்டபடியால், அவரிடம் முன்னைவிட அதிக மரியாதையுடன் அல்லவா நடந்து கொள்ள வேண்டும்? அதற்கு மாறாகச் சொக்கையா அந்த இளம் பிள்ளையைக் கடிந்து கொண்டதும் கழுத்தில் கையை வைத்துத் தள்ளியதும் காசிலிங்கத்துக்கு மிக்க வியப்பையும் துயரத்தையும் உண்டாக்கின. குழந்தைகளை யாராவது கடிந்து கொண்டால், காசிலிங்கத்துக்குப் பிடிக்கவே பிடிக்காது. அதிலும் சமீபத்திலேதான் தந்தையை இழந்திருந்த பிள்ளையை அந்த மாதிரி சொக்கையா நடத்தியது பெரிதும் வெறுப்பை உண்டாக்கியது. அதுமட்டு மல்ல; சொக்கையா காசிலிங்கத்தைச் சண்டைக்கு இழுப்பதற்காகவே அந்த மாதிரி பேசியதாகவும் தோன்றியது.

ஆயினும் காசிலிங்கம் அந்தச் சமயம் சொக்கையாவுடன் சண்டை பிடிக்க விரும்பவில்லை. அவருடைய குத்தலான வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு சும்மா இருக்கவும் அவரால் முடியவில்லை.

“ஐயா! எங்களை உங்களுக்குப் பிடிக்காவிட்டால், அதற்காக அந்தக் குழந்தையை ஏன் ஹிம்சிக்கிறீர்கள்? பெரியவர்களின் சண்டை பெரியவர்களோடேயே இருக்கலாமே?” என்றார்.

அதற்குப் பிறகு அங்கு என்ன நடந்தது என்பதை யாரும் எனக்கு விளக்கமாகச் சொல்லவில்லை. மந்திர மூர்த்திக்கும் விவரம் தெரியவில்லை. சொக்கையா என் பெற்றோர்கள் இருவரையும் பற்றி மிக்க கேவலமாகப் பேசியிருக்க வேண்டும் என்பது மட்டும் நிச்சயம். என் தாயார் வீட்டுக்கு வரும்போது கண்ணில் கண்ணீர் ததும்பிக் கொண்டிருந்தது. மந்திர மூர்த்தி அதைப் பார்த்துப் பயந்து போனார். என் தாயாருக்கும் தந்தைக்கும் மனஸ்தாபம் ஏதேனும் உண்டாகி விட்டதோ என்று கவலைப்பட்டார். அப்படி ஒன்றுமில்லையென்று தெரிந்ததும் சற்று ஆறுதல் அடைந்தார்.

“சொக்கையாவின் குணம் எல்லாருக்கும் தெரிந்ததுதான். அவன் ஏதாவது உளறினால், அதைப் பெரிதாக எடுத்துக் கொண்டு நீ கண்ணீர் விட்டுக் கலங்கி விட வேண்டுமா? யாராவது கேட்டால் சிரிப்பார்கள்!” என்றார்.

“உண்மையில் என்னைப் பார்த்து இவ்வூரில் எல்லாரும் சிரித்துக்கொண்டு



தானிருக்கிறார்கள், அப்பா! சொக்கையா வாய்விட்டுச் சொன்னான். மற்றவர்கள் மனத்திலே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். என்னைக் கண்டால் முகத்தைச் சுளுக்கிக் கொண்டு வேறு பக்கம் போகிறார்கள்!'' என்றாள் சந்திரமணி.

"இல்லவே இல்லை; இது உன் கற்பனை. ஊரில் உள்ளவர்கள் நீ அவர்களுடன் சிநேகமாக இருப்பதில்லை யென்றல்லவா புகார் சொல்கிறார்கள்?''

"எனக்கு இனிமேல் யாரையும் சிநேகம் பிடித்து ஒன்றும் ஆக வேண்டியதில்லை. என்னை நடத்துவதுபோல் என்னுடைய குழந்தையையும் நடத்தினால் என்ன செய்கிறது, அப்பா! சொக்கையா சொன்ன கடும் வார்த்தைகளை மட்டும் நீங்கள் கேட்டிருந்தால்,...''

"அந்த வார்த்தைகளைக் காசிலிங்கமும் கேட்டுக் கொண்டுதானே யிருந்தான்?''

"ஆம்; ஏதோ அவர் இந்த மட்டும் ஒன்றும் செய்யாமல் பொறுமையாக இருந்தது அதிர்ஷ்டந்தான்!''

"காசிலிங்கம் உன்னை விடப் புத்திசாலி என்று நன்றாய்த் தெரிகிறது. சொக்கையாவின் வார்த்தைகளுக்கு எவ்வளவு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று அவனுக்குத் தெரிந்திருக்கிறது!''

"சொக்கையாவினுடைய வார்த்தைகள் அவர் காதில் விழவே இல்லை. வேறு ஏதோ கவனமாக இருந்து விட்டார் என்று தோன்றுகிறது. இல்லாவிட்டால், அவர் அவ்வளவு பொறுமையாக இருந்திருக்க மாட்டார். என்னாலேயே பொறுக்க முடியவில்லையே?''

இதைக் கேட்டுக்கொண்டே உள்ளே வந்த காசிலிங்கம் "அதெல்லாம் நான் அவ்வளவு கவனக் குறைவாக இல்லை; அவன் கூறிய வார்த்தைகளை நன்றாக மனத்தில் வாங்கிக் கொண்டேன். அதற்காக வருத்தப்பட வேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை. நீ வருத்தப்பட்டுக் கண்ணீர் விட்டால் உன்னைப் போல் அசடு யாரும் இல்லை!'' என்றார்.

"அப்படிச் சொல்லு, தம்பி! நானும் அதைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். சொக்கையாவின் குணம் ஊர் அறிந்தது! பாவம்! இறந்து போன ஜமீன்தாருக்கே அவனுடைய நடத்தை பிடித்திருக்கவில்லை.''

"ஆமாம், ஆமாம்! ஆனால் எங்கள் விஷயத்தில் சொக்கையா சொன்னது பற்றி நாம் அதிகமாக வருத்தப் படுவதற்கு மில்லை. உண்மையைச் சொன்னால் உடம்பெரிச்சல் பட்டு என்ன செய்கிறது? நான் சிறையிலிருந்து விடுதலையாகி வெளி வந்த மாஜி கைதி; இவள் ஒருவரும் அறியாமல் என்னுடனே வீட்டை விட்டு ஓடி வந்தவள். எங்கள் மகளுக்கு எப்படிக் குங்குமத் துறை ஜமீன்தார் தங்கப் பாண்டியன் சிநேகமாக முடியும்? எப்படி இவளை அரண்மனைக்கு அழைத்து வரச் சொல்லலாம்?''

இதைக்கேட்ட சந்திரமணிக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. "அழகாயிருக்கிறது; நீங்களே ஊரெல்லாம் விளம்பரம் செய்து விட்டு வருவீர்கள் போலிருக்கிறதே!'' என்றாள்

"நான் விளம்பரம் செய்யாமலிருந்தால், தெரியாமல் இருந்து



விடுமா? எல்லாருக்கும் தெரிந்ததை நாம் மூடி மறைக்க முயல்வதில் பயன் ஒன்றுமில்லை. நெருப்புக் கோழி தலையை மணலில் புதைத்துக் கொள்வதுபோலாகும். நாமும் தைரியமாக இருக்க வேண்டும்; நம்முடைய குழந்தைக்கும் தைரியமாக இருப்பதற்குக் கற்றுக் கொடுக்க வேண்டும்!''

"நம்மை யார் எது வேணுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். என் குழந்தையைச் சொன்னால் என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது!'' என்றாள் என்னைப் பெற்று வளர்த்த தாயார்.

"பெற்றோர்கள் செய்த பாவம் அவர்கள் குழந்தைகளின் தலையில் விடியும் என்று நீ கேட்டதில்லையா?'' என்றார் என் தகப்பனார் காசிலிங்கம்.

"நன்றாயிருக்கிறது உங்கள் பேச்சு! நீங்கள் பாவம் ஒன்றும் செய்யவில்லை, உங்கள் குழந்தையின் தலையில் விடிவதற்கு! உங்கள் குழந்தையை நீங்கள் எனக்குத் தத்துக் கொடுத்திருப்பதையும் மறந்து விட்டுப் பேசுகிறீர்கள். இந்துவைப் பற்றி யாராவது ஏதேனும் சொன்னால், அவர்களுக்குப் புத்தி கற்பிக்கும் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள்! அந்தச் சொக்கையாவை நான் சும்மா விட்டுவிடப் போவதில்லை!'' என்றார் மந்திரமூர்த்திப் பண்ணையார்.

இவ்வாறு நான் சின்னஞ் சிறு குழந்தையாயிருந்தபோதே, எனக்கு அபகீர்த்தி எதுவும் ஏற்பட்டுவிடக் கூடாதென்பதில் கவலை கொண்டிருந்த மூன்று பேரும் இப்போது இல்லை. அவர்கள் இன்றைக்கு இருந்திருந்தால், என்ன பாடு படுவார்கள்? இறைவன் அவர்களுக்கு அவ்வளவு பெரும் வேதனையைக் கொடுக்காமல் காப்பாற்றினார். ஆனால் அவர்கள் மூன்று பேரும் சேர்ந்து அநுபவிக்கக் கூடிய வேதனையை யெல்லாம் இன்று எனக்காக ஒருவரே தனிப்பட அநுபவித்து வருகிறார். என்னிடம் அன்பு கொண்டவர்களுக் கெல்லாம் தீராத துன்பம் அளிப்பதே என் ஜாதகத்தின் இயல்பு என்று தோன்றுகிறது.

* * *

அன்றைக்கு வீட்டுக்குத் திரும்பி வந்த போதும், வந்த பிற்பாடும் என் தந்தை வேறு ஏதோ ஞாபகமாக இருந்து வந்ததாகத் தோன்றியது. வாய்க்குள்ளேயே முணு முணுத்துத் தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தார்.

சொக்கையாவை எப்படிப் பழி வாங்குவது என்பது பற்றித்தான் ஒரு வேளை அவ்வளவு ஆழ்ந்து யோசிக்கிறாரோ என்று என் தாயாருக்கும் மந்திர மூர்த்திக்கும் கவலை தோன்றியது.

அவரை எப்படியாவது வாய் விட்டுப் பேசச் செய்ய வேண்டும் என்று எண்ணி மந்திரமூர்த்தி, "என்ன ஒரே யோசனையிலிருக்கிறாய், தம்பி? சொக்கையாவைப் பற்றியதா யிருந்தால், அதை என்னிடம் சொல்லு; நான் பார்த்துக் கொள்கிறேன்!'' என்றார்.

"இல்லை, இல்லை! சொக்கையாவைப் பற்றி யோசிக்கவில்லை; சொக்கையாவுடன் வந்த நாயைப் பற்றித்தான் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றார் காசிலிங்கம்.

"நாயைப் பற்றி அவ்வளவு என்ன யோசனை?'' என்றார் மந்திரமூர்த்தி.

"அவர் பரிகாசம் செய்கிறார், அப்பா!'' என்றாள் என் அன்னை.

"இல்லை, சந்திரமணி, நிச்சயமாகப் பரிகாசம் இல்லை! நீ அந்த நாயைக் கவனித்துப் பார்த்தாயா? சொக்கையா பிடித்துக் கொண்டு வந்தானே, அந்த நாயைத்தான் சொல்லுகிறேன்.''

"சொக்கையாவின் முகத்தையே நான் பார்க்கவில்லை. அவனுடைய நாயை எதற்காகப் பார்க்கப் போகிறேன்?''

"நாயைப் பார்க்காவிட்டாலும் பாதகமில்லை. அதன் வாலையாவது பார்த்தாயா? அதாவது, அதன் வாலை நறுக்கி விட்டிருந்ததைக் கவனித்தாயா?''

"போதும் உங்கள் வேடிக்கை!''

"வேடிக்கை இல்லை, சந்திரமணி! ரொம்ப முக்கியமான காரியம்! பண்ணையார்வாள்! சொக்கையாவின் நாயை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?''

"பார்த்திருக்கிறேன். பிரம்மாண்டமான இராஜபாளையத்து நாய்! ஆனால் குரைக்கவும் குரைக்காது; கடிக்கவும் கடிக்காது! அந்த நாயைக் கண்டு பயந்து தான் நீ சொக்கையாவுடன் சண்டைக்குப் போகாமல் விட்டாயா?''

"அது என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? நான் சர்க்கஸ்காரன்; புலி—சிங்கங்களுடன் பழகியவன். நாய்க்குப் பயப்பட்டு விடுவேனா? அந்த நாயின் நறுக்கி விட்ட வாலைப் பார்த்ததும் எனக்கு ஒரு வியப்பு உண்டாயிற்று. அதே மாதிரி வாலறுபட்ட நாயை வேறு எங்கேயோ பார்த்திருக்கிற நினைவு தோன்றியது.

அதை எங்கே பார்த்திருக்கிறோம் என்று யோசித்துக் கொண்டு நின்றேன். அதற்குள், அந்தச் சொக்கையா காரில் ஏறிக் கொண்டு போய் விட்டான். நாயையும் காரில் ஏற்றிக் கொண்டு போனான். கேட்டீர்களா கதையை! நாய்க்கு மோட்டார் சவாரி! மனிதர்களுக்குக் கட்டை வண்டி கூடக் கிடைப்பதில்லை!"

"எப்படியோ, போகட்டும்! வாலறுபட்ட நாயின் உதவியினால் இன்றைக்கு ஒரு கிரிமினல் கேஸ் ஏற்படாமல் போயிற்று!" என்றார் மந்திரமூர்த்தி.

அதற்கப்புறமும் காசிலிங்கம் தமக்குள் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தார். திடீரென்று "கண்டு பிடித்து விட்டேன்; எங்கே பார்த்தேன் என்று கண்டு பிடித்து விட்டேன்!" என்று உற்சாகமாகக் கூச்சலிட்டார்.

மந்திரமூர்த்தி விவரம் கேட்டதற்கு, "இரண்டு நாள் பொறுத்திருங்கள்; காட்டுகிறேன்!" என்றார்.

என் தந்தையின் அறிவே குழம்பிப் போய் விட்டதோ என்று மற்ற இருவரும் கவலை கொண்டார்கள்.

அன்றிரவு வெகுநேரம் கண் விழித்து விளக்கண்டை உட்கார்ந்து காசிலிங்கம் கடிதம் எழுதினார். மறுநாள் பொழுது விடிந்ததும் தபால் சாவடியில் கொண்டு போய்ப் போட்டு விட்டு வந்தார்.

இரண்டு நாளைக்கெல்லாம் சென்னைப் பட்டணத்திலிருந்து போட்டோ சேகர் என்னும் புது மனிதர் வந்து சேர்ந்தார். என் தந்தைக்கு அவர் பழைய நண்பர் என்று தெரிந்தது. புகைப்படம் எடுப்பது அவருடைய முக்கியமான தொழிலாகையால், போட்டோப் படங்கள் ஒட்டப்பட்ட ஆல்பம் புத்தகங்கள் நிறையக் கொண்டு வந்தார். பெரிய புகைப் படக் கருவி, சின்ன புகைப்படக் கருவி முதலியவையும் அவருடன் வந்தன.

ஒரு அறை முழுதும் அவருடைய சாமான்களே நிரம்பி விட்டன.

சேகர் வந்து சிறிது நேரத்துக்குள்ளே காசிலிங்கம் அவர் கொண்டு வந்திருந்த புகைப் படங்கள் ஒட்டிய ஆல்பங்களைப் பக்கம் பக்கமாகப் புரட்டிக் கவனமாகப் பார்த்துக் கொண்டு வந்தார்.

இரண்டு மூன்று படங்களை மட்டும் வெகு கவனமாகப் பார்த்தார்.

மந்திர மூர்த்திப் பண்ணையாரிடமும் சந்திரமணியிடமும் கொண்டு போய் அவற்றைக் காட்டினார்.

ஒரு படத்தில் ஒரு மனிதன் நாய் ஒன்றைப் பிடித்த வண்ணம் போய்க் கொண்டிருந்தான். அந்த மனிதனுடைய முதுகு மட்டுமே தெரிந்தது. நாயின் நுனி அறுந்த வால் வளைந்து நின்றது.

"பார்த்தீர்களா! இந்தப் படத்தில் உள்ள நாய்தான் சொக்கையாவின்நாய் என்று சொல்லலாம் அல்லவா?"

"சொல்லலாம்; ஆனால் அதை ருசுச் செய்ய முடியாது. நுனி வால் அறுந்த எத்தனையோ நாய்கள் இருக்கின்றன" என்றார் மந்திரமூர்த்தி.

"எனக்கு எல்லா நாய்களும் ஒரே மாதிரிதான் தோன்றுகின்றன" என்று சொன்னான் சந்திரமணி.

"இந்த மனிதனை யார் என்று உங்களால் சொல்ல முடியுமா?"

"அதை எப்படிச் சொல்லிவிட முடியும்! முகத்தைப் பார்த்தால் அல்லவா சொல்லலாம்?"

"முதுகைப் பார்த்துக் கூடச் சொல்லலாம். உங்களால் முடியவில்லை!"

"மனிதனை எங்களுக்குத் தெரிந்திருக்கவும் வேண்டுமல்லவா?"

"ஆமாம்; அந்த மனிதனைத் தெரிந்திருந்தால் தான் சொல்ல முடியும்."

"யாரிடம் இருந்தாவது சொக்கையா இந்த நாயைத் திருடிக் கொண்டு வந்து விட்டார் என்பது உங்கள் உத்தேசமோ என்னமோ? விலைக்கு வாங்கிக் கொண்டும் வந்திருக்கலாம் அல்லவா?"

"எப்படியிருந்தாலும் ஒன்றுதான். சொக்கய்யாவிடம் இந்த நாய் எவ்வளவு நாளாக இருக்கிறது? உங்களுக்குத் தெரியுமா, பண்ணையார்?"

"இந்த நாயைப் பற்றி நான் சொல்ல முடியாது. சொக்கய்யாவிடம் உள்ள வால் அறுந்த நாய் மூன்று வருஷமாக அவரிடம் இருக்கிறது. நீங்கள் இந்த ஊருக்கு வந்தபோதே இருந்தது."

"அவ்வளவுதான் நமக்கு வேண்டியது" என்றார் காசிலிங்கம்.

ஒரு நாயைப் பற்றி ஏன் இவ்வளவு ஆராய்ச்சி என்பது மட்டும் மந்திர மூர்த்திக்கும் சந்திரமணிக்கும் தெரியவில்லை. போட்டோ ஆல்பங்களில் உள்ள மற்றப் படங்களில் சந்திரமணி கவனம் செலுத்தினான். காசிலிங்கம் சர்க்கஸ் கம்பெனியில் இருந்த போது எடுத்த அநேக படங்கள் அந்த ஆல்பங்களில் இருந்தன. சந்திரமணி அவற்றை மிக்க ஆர்வத்துடன் பார்த்தான். ஏதோ ஒரு

படத்தைப் பார்த்துச் சந்திரமணி சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்த போது, காசிலிங்கம் ஒரு போடு போட்டார்.

"நான் மறுபடியும் சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்து விடலாம் என்று பார்க்கிறேன். சாண்டோ சிவராம் சர்க்கஸ் கம்பெனி இப்போது திருவனந்தபுரத்தில் ஆடிக் கொண்டிருக்கிறதாம்."

இதைக் கேட்டதும் சந்திரமணி கண்ணீர் விட்டு அழத் தொடங்கி விட்டாள்.

"என்னையும் குழந்தையையும் மலை மேலிருந்து அருவியில் பிடித்துத் தள்ளி விட்டு அப்புறம் உங்கள் சர்க்கஸுக்குப் போய்ச் சேருங்கள்!" என்று விம்மிக் கொண்டே கூறினாள்.

"இவ்வளவு நாள் என்னோடு கை கொடுத்து நின்று விட்டுக் கடைசியில் நீயும் ஒரு பெண் பிள்ளைதான் என்று காட்டி விட்டாய். நான் சர்க்கஸில் சேரா விட்டால் வேறு என்ன செய்வது? பிழைப்புக்கு என்ன பண்ணுவது? ஏற்கெனவே எனக்கு யாரும் வேலை கொடுக்கத் தயங்குகிறார்கள். கிடைத்த வேலையும் அந்தப் புண்ணியவான் ஈசுவர மூர்த்தி



யினால் போய்விட்டது. இனிமேல், சிறையிலிருந்து வெளியே வந்த கைதிக்கு யார் வேலை கொடுப்பார்கள்? சர்க்கஸ் ஒன்றிலேதான் பூர்வோத்தரத்தைப் பற்றிக் கேட்க மாட்டார்கள். நான் உத்தியோகம் செய்து சம்பாதிக்காமல் பண்ணையார் வீட்டில் உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருக்கும் வரையில், சொக்கையாவைப் போல் யாராவது ஏதேனும் சொல்லிக்கொண்டு தானிருப்பார்கள். அவர்கள் பேரில் கோபித்துக் கொள்வதிலும் பிரயோஜனமில்லை'' என்றார் காசிலிங்கம்.

''இதென்ன தம்பி, இத்தனை நாளைக்குப் பிறகு என்னை வேற்றுமைப்படுத்திப் பேசுகிறாய்? நீ மட்டுந்தானா உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கிறவன்? மிராசுதார்—பண்ணையார் என்று சொல்கிற நாங்கள் எல்லாரும் அப்படித்தானே! பணம்—சம்பாத்தியம் என்கிற விஷயத்தையே மறந்துவிடு. என்னுடைய வேலைகளைப் பார்ப்பதற்கே இன்னும் நாலு பேர் வேண்டும்......''

''அதெல்லாம் சரியல்ல, பண்ணையார்வாள்! அப்படியெல்லாம் என்னை நானே ஏமாற்றிக் கொள்ளத் தயாராயில்லை. முன்னம் உங்களிடம் கொடுத்த மூவாயிரம் ரூபாயும் என்னுடைய வழக்குக்கே செலவாகியிருக்கும். இவளுடைய மாமன்மார்களுக்கு நீங்கள் கொடுத்த மூவாயிரம் ரூபாய் வேறு பாக்கி இருக்கிறது. என் குடும்பத்தை நீங்களே வைத்து நிர்வகிக்க வேண்டும் என்று நான் எப்படி எதிர்பார்க்கலாம்? எங்களுக்கு ஏற்பட்ட கஷ்ட காலத்தில் குல தெய்வம் மாதிரி வந்து கைகொடுத்து உதவினீர்கள். உங்களுடைய தயாள குணத்தை நெடுகிலும் சோதனை செய்யக் கூடாது, பாருங்கள்!''

''விடிய விடிய இராமாயணம் கேட்டுவிட்டு, 'இராவணன் எனக்குச் சித்தப்பன்' என்று உறவு கொண்டாடுவதுபோலிருக்கிறது உன் பேச்சு. அது போனால் போகட்டும்; உன் மனைவியின் சொத்துக்களை அவளுடைய மாமன்மார்கள் அக்கிரமமாக வைத்து அனுபவித்துக் கொண்டிருக்கிறார்களே! அந்தச் சொத்தைத் திருப்பி வாங்க முயற்சி செய்தால் போகிறது!''

''ஆமாம்; அதையல்லவா முதலில் செய்ய வேண்டும்?'' என்றாள் சந்திரமணி. அவளுடைய அழுகையும் விக்கலும் நின்று போயிருந்தன.

''அதை எப்படிச் செய்வது? 'கழுதையே! கழுதையே! நீ நேற்றுச் சாப்பிட்ட காகிதத்தைத் திருப்பிக் கொடு!' என்றால் கொடுத்து விடுமா?''

''அவர்கள்மேல் வழக்குப் போடலாம் என்றுதான் முன்னமிருந்து சொல்லிக் கொண்டிருக்கிறோமே?''

ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டுக் காசிலிங்கம் கூறினார். ''வழக்குகள் தொடர்வதில் என்னுடைய நம்பிக்கை குன்றி விட்டது. கோர்ட்டுகளில் நியாயம் வெற்றி பெறும் என்பதிலும் எனக்கு நம்பிக்கை இல்லை. நம்முடைய வக்கீல் எவ்வளவோ கஷ்டப்பட்டு ஒன்றை நிரூபிக்கிறார். எதிராளி மாஜிஸ்ட்ரேட்டுக்கு ஒரு 'டின்னர்' கொடுத்து விட்டு அவனுடைய கட்சியை ஜயித்துக் கொண்டு போய் விடுகிறான்! நீதியும் நியாயமும் எங்கே? நாங்கள் இனிமேல் வழக்குத் தொடுத்தால், இன்றைக்குச் சொக்கையா சொன்ன வார்த்தைகளைக் கோர்ட்டில் வக்கீல் பகிரங்கமாகச் சொல்வார். சந்திரமணி சட்டப்படி என்னுடைய மனைவிதானா என்று கேட்கத் தொடங்குவார். அதை என்னால் பொறுக்க முடியாமற் போய் விடும். சொக்கையாவிடம் நான் பொறுமையாக இருந்ததுபோல் ஒவ்வொரு தடவையும் இருக்கமாட்டேன். ஸிவில் வழக்கிலிருந்து கிரிமினல் வழக்கு வேறு ஏற்படும். பண்ணையாரே! இனி எது எப்படியானாலும் இந்த ஜன்மத்தில் நான் சிறைச்சாலைக்கு மறுபடியும் போவதில்லை என்று வைத்திருக்கிறேன்'' என்றார்.

''யார் போகவேண்டும் என்று சொன்னார்கள்? ஒரு தடவை ஒன்று நடந்து விட்டால், அதேமாதிரி மறுபடியும் நடக்குமா? சந்திரமணி சொத்து வழக்கைப் பூராவும் என்னிடம் விட்டு விடலாம்.''

''அது எப்படி விடமுடியும், பண்ணையார்வாள்! சந்திரமணியை அழைத்துக் கொண்டு வந்த நான் என்னுடைய கடமையைச் செய்யவேண்டாமா? சந்திரமணியின் தாயாருக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டாமா? கோர்ட்டுக்கு வழக்காடப் போகாமல் இவளுடைய சொத்தைத் திரும்பப் பெறுவதற்கு நான் வழி கண்டு பிடித்தாக வேண்டும்!''

என் தந்தை காசிலிங்கம் மனத்திற்குள் ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தாரே, அந்த விஷயம் என்ன என்பது என் தாயாருக்கும், மந்திரமூர்த்திக்கும் இப்போது சிறிது விளங்கிற்று. அதைப் பற்றி அச்சமயம் அதிகம் பேச வேண்டாம் என்று விட்டு விட்டார்கள்

அத்தியாயம் 18

# குறுக்கே வந்த குதிரை

மறுநாள் போட்டோக்காரர் சேகரும் என் தந்தையும் எங்களைப் பலவிதமாகப் படம் எடுப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். இதில் என் தாயாரும், மந்திரமூர்த்தியும் கூட உற்சாகம் காட்டினார்கள்.

என்னுடைய படத்தை எடுத்து வட நாட்டில் பிரபலமான ஒரு பத்திரிகைக்குப் போட்டோக் கலைப் போட்டிக்கு அனுப்பப் போகிறதாகச் சேகர் சொன்னதும், எல்லாருக்குமே உற்சாகம் அதிகமாகி விட்டது. என் படத்தைப் போட்டிக்கு அனுப்பினால், எனக்குத் தான் முதல் பரிசு கிடைக்கும் என்று என் பெற்றோர்களுடன் சேர்ந்து மந்திரமூர்த்தியும் வற்புறுத்தினார்.

நாங்கள் இருந்த பங்களாவின் வாசலில் தெருவீதி மிகவும் ரம்யமாக இருந்தது. பங்களாவின் வெளி வேலியில் செடிகளும் கொடிகளும் அடர்த்தியாகப் படர்ந்து மலர்களும் பூத்துக் குலுங்கின. சாலையின் இன்னொரு பக்கத்தில் வான ளாவிய மரங்கள் நின்றன. வேலி ஓரமாக எங்களை உட்கார வைத்து விட்டுச் சேகரும் என் தகப்பனாரும் வீதியின் எதிர்ப்பக்கம் நின்று புகைப்படக் கருவிகளை ஒழுங்கு செய்து படம் எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

என்னை மட்டும் தனியாக உட்கார வைத்தும், நிற்க வைத்தும் படம் எடுத்தார்கள். அம்மாவின் மடியில் என்னை உட்காரச் சொல்லிப் படம் எடுத்தார்கள். மந்திரமூர்த்தியின் அருகில் உட்கார வைத்துப் படம் எடுத்தார்கள். எங்கள் மூன்று பேரையும் சேர்த்து ஒன்றாகப் படம் எடுத்தார்கள்.

அம்மா ஆரம்பத்திலிருந்து அப்பாவையும் எங்கள் அருகில் உட்கார வைத்துப் படம் எடுக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தாள். என் தந்தை, "ஆகட்டும், கடைசியில் பார்த்துக் கொள்ளலாம்" என்று சொல்லிக் கொண்டிருந்தார். சேகர் பெரிய காமிராவில் படம் எடுத்தபோது, என்னுடைய தந்தை தோளில் தொங்க விட்டுக்கொள்ளக்கூடிய சிறிய காமிராவில் எங்களைப் படம் எடுத்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று முன்னொரு தடவை மோட்டார் சைக்கிள் சத்தம் கேட்டது போல் இப்போது குதிரை ஓடி வரும் சத்தம் கேட்டது. மலைச் சாரலில் உள்ள ஊரான படியால் குங்குமத் துறையின் வீதிகள் அவ்வளவு ஒழுங்காகவும் நேராக நெடுந்தூரம் பார்க்கும்படியும் இருப்பதில்லை. மேடு பள்ளங்களும் மூலைத் திருப்பங்களும் அதிகம். யாருடைய குதிரை வருகிறது, எந்தப் பக்கத்திலிருந்து வருகிறது என்று யோசிப்பதற்குள் குதிரை வெகு சமீபத்தில் வந்து விட்டது; அதன் பேரில் சொக்கையா ஆரோகணித் திருந்தார்.

அம்மாவும் நானும் மந்திரமூர்த்தியும் இருந்த வேலி ஓரத்துக்கும், புகைப் படக் கருவிகளுடன் சேகரும் காசிலிங்கமும் நின்ற இடத்துக்கும் நடுவில் நிறைய இடம் இருந்தது. குதிரை அதன் வழியாகப் போயிருக்கலாம். சொக்கையா வேண்டுமென்றுதான் செய்தாரோ, என்னமோ தெரியாது. சேகர் புகைப் படக் கருவியின் பின்னால் நின்று, முகத்தைக் கருப்புத்துணியால் மூடிக்கொண்டு, படம் எடுப்பதற்குக் கோணம் சரியாக அமைந்திருக்கிறதா என்று பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு வெகு சமீபமாகக் குதிரையைச் சொக்கையா செலுத்தினார். குதிரையின் தலையா, உடம்பா, காலா எது பட்டது என்று கூடச் சொல்ல முடியாது. கண்மூடித் திறக்கும் நேரத்தில் குதிரை அப்பால் போய் விட்டது. பெரிய புகைப்படக் கருவி அதன் கால்கள் முறிவுற்று, கீழே விழுந்து தகர்ந்தது. சேகரும் ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய், "ஐயோ! அப்பா!" என்று சொல்லிக் கொண்டே கீழே விழுந்தார். சாய்ந்த புகைப் படக் கருவியின் ஒரு கால் காசிலிங்கத்தின்பேரில் பட்டது. அவர் தாமும் கீழே விழுந்து விடாமலும், கையில் இருந்த சிறிய காமிரா சிதறி விழுந்து உடையாமலும் தப்புவதற்காக வெகு பாடுபட்டுச் சாமர்த்தியமாகச் சமாளித்துக் கொண்டார்.

கொஞ்ச தூரத்துக்கு அப்பால் சொக்கையா குதிரையை நிறுத்தி விட்டுத் திரும்பிப் பார்த்தார். காமிராவுக்கு நேர்ந்த கதியைப் பார்த்து அவர் மிக்க குதூகலம் அடைந்திருந்ததாக அவருடைய முகக் குறி காட்டியது.

வெளிப்படையாக, "அடாடா! நடு வீதியில் நின்று போக்குவரவைத் தடை செய்துகொண்டு படம் எடுக்கலாமா? இதுவே குதிரையாயிராமல், மோட்டார்



# தீபாவளியன்று

மட்டுமல்ல
என்றென்றைக்குமே
நீங்கள் ஆனந்தமாக
உல்லாச சவாரி செய்ய






# ஆம்ஸ்ட்ராங்

## நேர்த்தியான சைகிள்கள்



விநியோகஸ்தர்கள்,
**ராயல் சைகிள் & மோட்டார் கம்பெனி,**
13/14, பிராட்வே, சென்னை - 1

கிளை ஆபீஸ்,
**தி பயோனியர் சைகிள் ஹவுஸ்,**
47/49, மேல கோபுர வீதி, மதுரை

RCZ-6

வண்டியா யிருந்தால், என்ன ஆகியிருக்கும்! போகட்டும்; ஒருவருக்கும் காயம் ஒன்றும் படவில்லையே?'' என்றார்.

சாந்த மூர்த்தியான மந்திரமூர்த்திக்குக்கூட அப்போது கோபம் வந்திருந்தது.

"இங்கே யாருக்காவது காயம் பட்டால் என்ன குடி முழுகி விடும்! மருந்து போட்டால் ஆறிப் போகிறது! உங்கள் குதிரைக்கு ஒன்றும் காயம் படவில்லையே! அதைக் கவனமாகப் போய்ப் பாருங்கள்!'' என்றார். இவ்விதம் சொல்லி விட்டுக் கோபச் சிரிப்புச் சிரித்தார்.

"பண்ணையார்வாளுக்கு என் பேரில் கோபம் போலிருக்கிறது. நான் என்ன செய்யட்டும்? நடு வீதியில் நின்று கொண்டு நானா படம் பிடிக்கச் சொன்னேன்? அப்படிப் பிடிப்பதா யிருந்தால், சிவப்புக் கொடியும் அபாய அறிவிப்பும் போட்டு விட்டாவது படம் பிடிக்க வேண்டும்!'' என்றார் சொக்கையா.

பிறகு, தரையிலிருந்து மெதுவாகச் சமாளித்துக் கொண்டு எழுந்த சேகரைப் பார்த்து, "காமிரா உம்முடையதுதான் போலிருக்கிறது!'' என்றார்.

"ஆமாம்; ஆயிரம் ரூபாய்க்கு வாங்கிய காமிரா சுக்கு நூறாய்ப் போய் விட்டது!'' என்றார் சேகர்.

"பண்ணையார் சொன்னது சரிதான்; குதிரையின் விலை அதிகம்!'' என்றார் மாப்பிள்ளை ஜமீன்தார் சொக்கையா.

பிறகு, "உம்மை எங்கேயோ பார்த்ததாக நினைவு வருகிறதே? பார்த்திருக்கிறேனா?'' என்று கேட்டார்.

"நான் உங்களைப் பார்த்திருக்கிறேன். இந்த ஊரிலேயேதான்! மூன்று வருஷத்துக்கு முன்னால்!'' என்றார் சேகர்.

"ஆமாம், ஆமாம்! இப்போது நன்றாய் நினைவு வருகிறது. ஒரு நாள் மலை மீது நாம் சந்தித்தோம். சாயங்காலம் அரண்மனைப் பக்கம் வாருங்கள். என்னிடம் ஒரு பழைய காமிரா இருக்கிறது. அதை வேணுமானால் தங்களுக்குத் தருகிறேன்!'' என்றார் சொக்கையா.

"நானும் இவரும் இன்று உங்களைப் பார்க்க வருவதாகத்தான் இருந்தோம். சாயங்காலம் அவசியம் வருகிறோம்!'' என்றார் காசிலிங்கம்.

சொக்கையா புதிதாக அப்போதுதான் பார்ப்பவர் போல் அவரை முறைத்துப் பார்த்துவிட்டு, "வாருங்கள்! நான் எப்போதும் தயாராகவே இருக்கிறேன். அருவிக் கரையில் நம்முடைய பேச்சு தடைப்பட்டு விட்டதல்லவா?'' என்று சொல்லி விட்டுச் சிரித்தார். சிரித்துக் கொண்டே என் தாயார் இருந்த இடத்தை நோக்கினார். என் அன்னையின் முகத்தில் தீப்பொறி பறந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்து இன்னொரு தடவை உரக்கச் சிரித்து விட்டுச் சொக்கையா குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு போய் விட்டார்.

• • •

அன்று மத்தியான மெல்லாம் காசிலிங்கமும் சேகரும் தனியாக உட்கார்ந்து கொண்டு சதியாலோசனை செய்பவர்களைப் போல் பேசிக் கொண்டிருந்தார்கள். காமிரா உடைந்து போனதைப் பற்றி அவர்கள் அதிகமாகக் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. எடுக்க வேண்டிய படங்களை யெல்லாம் சின்னப் புகைப்படக் கருவியிலேயே எடுத்துக் கொண்டார்கள். அவர்களுடைய பேச்சில் வாலறுந்த நாயும், சொக்கய்யாவின் குதிரையும் அடிக்கடி வந்தன. வேட்டைத் துப்பாக்கியை எடுத்து ஒருவர் ஏதோ ஒரு மிருகத்தின் பேரில் குறி பார்ப்பது பற்றியும் பேசினார்கள். இந்தக் காட்சிகள் எல்லாம் சேகர் கொண்டு வந்திருந்த போட்டோக் களஞ்சியப் புத்தகத்தில் இருந்தனவென்று தெரிந்தது.

மந்திரமூர்த்திக்கும் என் அன்னைக்கும் அவற்றின் முக்கியம் என்னவென்பது தெரியவில்லை. அந்தச் சமயம் அவர்கள் அதைப் பற்றி அதிகமாகச் சிந்திக்கவும் இல்லை. பின்னால் நடந்த சம்பவங்களைக் கொண்டு மந்திரமூர்த்திப் பண்ணையார் சில விஷயங்களை ஊகித்தார். அவற்றைப் பிற்காலத்தில் என்னிடமும் விவரமாகச் சொன்னார். அந்த ஊகங்கள் எவ்வளவு தூரம் உண்மையானவை என்பது இன்றைக்கும் எனக்குத் தெரியாது. ஆனால் என் தந்தையின் காரியங்களுக்கு அப்போதுதான் பொருள் ஏற்படுவதாயிருந்தது. பின்னால் என் வாழ்க்கையில் நேர்ந்த சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் ஊகிப்பதும் சாத்தியமா யிருந்தது.

• • •

அன்று சாயங்காலம் காசிலிங்கமும் சேகரும் ஜமீன்தாரின் அரண்மனைக்குப் போய்ச் சொக்கய்யாவைப் பார்த்து விட்டு வந்தார்கள். திரும்பி வரும் போது வெகு உற்சாகமாக வந்தார்கள். எந்தக் காரியத்துக்காகச் சென்றார்களோ, அக் காரியத்தில் பூரண வெற்றி அடைந்தவர்கள் போல் தோன்றினார்கள்.

என் தந்தை சொக்கையாவின் குதிரையின் பேரில் ஏறிக் கொண்டு வருவதைப் பார்த்து மந்திர மூர்த்தியும் சந்திரமணியும் பிரமித்துப் போனார்கள். சேகர், சொக்கையாவின் காரிலேயே வந்தார். அவரை விட்டு வாசலில் கொண்டு வந்து இறக்கி விட்டு, சொக்கையா காசிலிங்கத்திடமும் சேகரிடமும் மிகவும் பவ்யமாகப் பேசி விட்டுப் போனார். இது என் அன்னைக்கு எவ்வளவு வியப்பையும் அருவருப்பையும் அளித்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை யல்லவா?

"இது என்ன அதிசயமான மாறுதல்? சொக்கையாவுடன் கட்டிப் புரளுவீர்கள் போலிருக்கிறதே! ஜமீன்தாருடைய சிநேகமே நமக்கு வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருந்தோம். அவர் இந்தச் சொக்கையாவைக் காட்டிலும் எவ்வளவோ நல்லவர். எந்தப் பாவியோ அவரைச் சுட்டுக் கொன்று விட்டான். அந்தக் கொலை பாதகத்தை உங்கள் பேரில் சுமத்தப் பார்த்த சொக்கையாவிடம் உங்களுக்கு என்ன சிநேகிதம்? அவனுடன் எப்படிச் சிரித்துப் பேசுகிறீர்கள்? மூன்று நாளைக்கு முன்பு அவன் அருவிக்கரையில் நம்மைப் பற்றிப் பேசியதை மறந்து விட்டீர்களா?" என்று சந்திரமணி கேட்டாள்.

"ஆமாம், அதை மறந்து விட்டேன்! போனதை யெல்லாம் எதற்காக ஞாபகம் வைத்துக் கொண்டிருக்க வேண்டும்? அதனால் என்ன லாபம்?"

"லாபந்தானா உலகத்தில் பெரியது? லாபத்தைக் கருதியா நாம் இவ்வளவு கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளானோம்? மந்திர மூர்த்தியிடம் நேற்று, 'உங்களுக்கு எவ்வளவு என்று கடன் படுவது? நானே சம்பாதித்துப் பிழைக்க வேண்டாமா?' என்று சொன்னீர்கள். நீங்கள் போவதைப் பற்றி எனக்கு வருத்தமாயிருந்தாலும், உங்கள் பேச்சு எனக்கு மகிழ்ச்சி அளித்தது. இன்றைக்கு இந்தத் தூர்த்தன் சொக்கையாவின் குதிரை மேல் ஏறிக் கொண்டு வருகிறீர்களே?"

"இல்லை, சந்திரமணி! அது இனிமேல் சொக்கையாவின் குதிரை இல்லை. என்னுடைய சொந்தக் குதிரை. எனக்கே கொடுத்து விட்டான்!"

"தெய்வமே! சொக்கையா விடமா குதிரை தானம் பெற்று வந்தீர்கள்? எனக்குக் கொஞ்சமும் பிடிக்க வில்லை!"

"உனக்குப் பிடித்திருப்பது அவசியமில்லை, சந்திரமணி! எனக்கு மட்டும் பிடித்திருக்கிறது என்கிறாயா? இல்லை!"

"பின் எதற்காக அவன் குதிரை மேல் ஏறினீர்கள்?" என்றாள் சந்திரமணி.

"சொல்லுவது முழுவதையும் கேள்! அவசரப்படாதே! சொக்கய்யா எனக்குத் தானமாகக் குதிரையைக் கொடுத்து விடுவானா? என்னால் அவனுக்குக் காரியம் ஆக வேண்டி யிருக்கிறது; அதற்காகக் கொடுத்தான். நேற்று அவன் நடத்தைக்கும், இன்று நடத்தைக்கும் வித்தியாசம் நீயேதான் பார்த்தாயே!"

"அந்தப் பொல்லாத அயோக்கியனுக்கு உங்களால் என்ன காரியம் ஆகவேண்டும்? அப்படி யிருந்தாலும், நீங்கள் அவனுக்கு அதைச் செய்து கொடுக்கக் கூடாது! அவனுடைய குதிரையும் நமக்கு வேண்டியதில்லை."

"அப்படிப் பார்த்தால் இந்த உலகத்தில் நாம் வாழ்க்கையே நடத்த முடியாது, சந்திரமணி! திருடர்களுக்கும் கொலைகாரர்களுக்கும் வக்கீல்கள் வக்காலத்து வாங்கிக் கொண்டு பேசுகிறார்கள்; பணமும் வாங்கிக் கொள்ளுகிறார்கள். அவர்கள் செய்வது குற்றமா? அது போலத்தான் என் காரியமும். உலகில் வாழ வேண்டுமானால், யார் நல்லவன், யார் கெட்டவன் என்று பார்த்துக் கொண்டிருக்க முடியாது. நல்லவனோ, கெட்டவனோ, நமக்குக் காரியம் ஆக வேண்டியிருந்தால் பார்த்துக் கொண்டு போக வேண்டியதுதான்."

**எ**ன் தந்தையின் பேச்சின் போக்கே மாறி யிருப்பதை என் அன்னை கவனித்தாள். அவருடைய குணமே மாறி விட்டதோ என்று பயம் அடைந்தாள்.

"அப்படியானால் நல்லவர், கெட்டவர் என்று பார்த்துச் சிநேகம் செய்வது அவசியம் இல்லையா? இந்த உத்தமர் மந்திர மூர்த்தியின் உதவியைப் பெறுவதற்கு நாம் எவ்வளவு யோசனை செய்தோம்?"

"அதெல்லாம் அநாவசியந்தான்!"

"நல்லவர்—கெட்டவர் பார்க்க வேண்டாம் என்றால், நல்லது—கெட்டது என்றும் பார்க்க வேண்டாமா? நியாயம்—அநியாயம், பாவம்—புண்ணியம், நேர்மை—அக்கிரமம், என்று ஒன்றுமே பார்க்க வேண்டியதில்லையா?"

"உலகத்தில் வெற்றி பெற வேண்டுமானால், இவை ஒன்றும் பார்க்கக்கூடாதுதான். நீயும் நானும் உன் அன்னையின் மனப்பூர்வமான அநுமதிபெற்று,முருகன் சந்நிதியில் கலியாணம் செய்து கொண்டோம். நாம் யாருக்கும் எந்தக் கெடுதலும் நினைக்கவில்லை. ஆனால் நம்மை அடியோடு கெடுப்பதற்கு மற்றவர்கள்

ஏன் முயல வேண்டும்? ஈசுவர மூர்த்தியின் வீட்டில் நான் ஒரு தவறும் செய்யவில்லை. நடந்தது நடந்தபடி கோர்ட்டில் சத்தியமாகச் சொன்னேன். என்ன பயன் கிடைத்தது? ஆறு மாதம் கடுங்காவல்! சிறையில் நோயாளியாகி மெலிந்திருந்த ஒரு கைதியை வார்டர் அடித்தான். நான் குறுக்கிட்டு அந்த அடியைத் தாங்கிக் கொண்டேன். பலன் என்ன கிடைத்தது? இன்னும் ஒரு வருஷம் கடுங்காவல்! சந்திரமணி! நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். என்னுடைய காரியம் நிறைவேறுவதற்காக நான் யாரை வேணுமானாலும் பயன்படுத்திக் கொள்வேன். எதை வேண்டுமானாலும் செய்வேன். நல்லது—கெட்டது என்று பார்க்க மாட்டேன். அதற்காக நான் நரகத்துக்குப் போகவேண்டி வந்தாலும் போவேன். ஆனால் நீ என்னைப்போல் ஆகவேண்டாம். எப்போதும்போல் பாவ புண்ணியம் பார்த்து நடந்து கொள்! கணவன் புண்ணியம் செய்தால் அதில் பாதி மனைவிக்கு உண்டு என்றும், கணவன் பாவம் செய்தால் அதில் மனைவிக்குப் பங்கு கிடையாது என்றும் நம்முடைய சாஸ்திரங்கள் சொல்கின்றன. ஆகையால் என்னால் ஒரு கெடுதலும் உனக்கு விளையாது!"

இந்தப் பேச்சு சந்திரமணிக்கு நன்றாகப் புரியவும் இல்லை; பிடிக்கவும் இல்லை. காசிலிங்கம் தன்னை நிராகரிக்கத் தீர்மானித்து விட்டதாக எண்ணி ஓவென்று அழுது விட்டாள். காசிலிங்கம் அவளைச் சமாதானப்படுத்த ரொம்பவும் கஷ்டப்பட வேண்டியிருந்தது. அவளிடம் தமக்குள்ள அன்பு என்றைக்கும் மாறாது என்று ஆயிரந்தடவை சத்தியம் செய்து கொடுத்தார். தாம் ஆண் பிள்ளையாகையால், இன்னொருவரை நம்பியே உயிர் வாழ முடியாது என்றும், ஜீவனத்துக்கு ஏதேனும் வழி தேடவேண்டும் என்றும், அதற்காகத்தான் அவளை விட்டுப் பிரிய வேண்டியிருக்கிறதென்றும் சொன்னார்.

"முதலில் சர்க்கஸ் கம்பெனிக்குத்தான் போகிறேன். அங்கே காரியம் அனுகூலமானால் உனக்கு உடனே எழுதுகிறேன். அனுகூலமாகா விட்டாலும் எழுதுகிறேன். அடிக்கடி உன்னையும் குழந்தையையும் வந்து பார்த்துக் கொள்வேன்" என்று பலமுறை உறுதிகூறினார்.

ஒரு வாரத்துக்குப் பிறகு காசிலிங்கம் மந்திரமூர்த்தியிடமும் சந்திரமணியிடமும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார். சொக்கையாவின் குதிரைமேல் ஏறிக் கொண்டு சென்றார். சந்திரமணி, கண்ணில் நீர் ததும்ப, விருப்பமில்லாமல் விடை கொடுத்து அனுப்பினாள்.

குங்குமத்துறையில் மந்திரமூர்த்தியின் வீடு நல்ல உயரமான இடத்தில் அமைந்திருந்தது. அதன் மச்சிலிருந்து பார்த்தால், குங்குமத் துறையிலிருந்து போகும் சாலைகள் கீழே இறங்கி இறங்கி வளைந்து வளைந்து வெகுதூரம் வரையில் போவதைப் பார்க்கலாம்.

சந்திரமணி மச்சின் பேரில் ஏறி நின்று கொண்டு குதிரை கண்ணுக்கு மறைந்து வெகு நேரம் வரையில் அத்திக்கையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

என்னையும் இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு என் தந்தையின் குதிரை தெரியும் வரையில் காட்டிக் கொண்டிருந்தாளாம். ஆனால் அது ஒன்றும் எனக்கு ஞாபகமே இல்லை. அப்போது எனக்கு மூன்று வயதுக்கும் குறைவுதானே!

• • •

மந்திரமூர்த்தி புத்தகம் படிப்பதில் விசேஷ ஆர்வம் உள்ளவர். ஆங்கிலப் புத்தகங்களும் தமிழ்ப் புத்தகங்களும் ஏராளமாக வாங்கி மூன்று அலமாரிகள் நிறைய அடுக்கி வைத்திருந்தார்.

அவர் வைத்திருந்த தமிழ் நூல்களில் "ஆனந்த மடம்" என்னும் புத்தகமும் ஒன்று. அந்தப் பிரசித்தி பெற்ற பங்கிம் சந்திரரின் பெருங்கதையில், ஒரு அருமையான பாடல் வருகிறது.

"புரவியில் ஏறி, என் இன்னுயிர்க் காதல!
போவதும் எங்கேயோ?"

என்று அது ஆரம்பமாகிறது.

பிற்காலத்தில், எனக்குக் கொஞ்சம் நினைவு தெரிந்த பின்னர், என் தாயார் அடிக்கடி இந்தப் பாடலின் அடியை மிகவும் உருக்கமாகப் பாடுவாள்; பாடிக் கொண்டே கண்ணீர் பெருக்குவாள்.

எதற்காக அம்மா அவ்வாறு பாடிக் கொண்டு அழுகிறாள் என்பது வெகு காலம் எனக்குத் தெரியாமலிருந்தது. பண்ணையார் மந்திர மூர்த்தியைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். என் தந்தை காசிலிங்கம் குதிரைமேல் ஏறிச் சென்ற காட்சியை எண்ணும்போதெல்லாம் என் அன்னைக்குப் பொறுக்க முடியாத துக்கம் வந்து விடுமாம். துக்கத்தை ஆற்றிக் கொள்வதற்காகவே அந்தப் பாடலைப் பாடுவாளாம்!

(தொடரும்)

## உங்கள் வாழ்க்கையை

# மலச் சிக்கல்

## ஒரு பாரமாக்க வேண்டாம்.



தலைநோவுகள், உடம்பெரிச்சல், பசி மந்தம், ஜீரணக்கோளாறு, மேனியழகு மங்குதல், இவையெல்லாம் தீராத உதரப்பைகளில் அசுத்தமிருப்பதன் நேரடியான விளைவாகும். மலச் சிக்கல் உங்கள் வாழ்க்கையே ஒரு சுமையாகக் கருதும்படி செய்ய விடக்கூடாது. ப்ரூக்லாக்ஸை உட்கொண்ட மாத்திரத்தில் புதிய ஜீவசக்தியுண்டாகும் ருசிமிகுந்த இந்த சாக்லேட் பேதி மருந்து குடலின் வேலையை சகஜமாக ஊக்கி கழிவுடைப் பொருள்களை நிச்சயமாக வெளிப்படுத்துகிறது. இன்றிரவே ஒரு சாக்லேட் சாப்பிட்டு, காலை எவ்வளவு புத்துணர்ச்சியுடன் சக்தியுடன் விளங்குகிறீர்களென்பதை பாருங்கள்.

அசல் ப்ரூக்லாக்ஸ் என்று கேட்டு கவனித்து வாங்குங்கள்!




OMS.19

**ப்ரூக்லாக்ஸ்**
**ஒரே இரவில்**
உங்களை குணமாக்கும்
(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேட்டரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜண்டுகள்: ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-டி, அரண்மனைக்காரத் தெரு,
மதராஸ்-1

---

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல், குலேக்கட்டி வியாதிகளுக்கு

## வழக்கமான மாதாந்திர விஜயம்

நோயாளிகளின் சௌகரியத்தை முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்குறித்த ஊர்களுக்கு அதனதன் எதிரே குறித்த தேதிகளில் பிரதி மாதமும் விஜயம் செய்வதால் அவரிடம் ஆலோசனை பெறலாம்.

**ஆலோசனை நேரம்: காலை 9-11 மணி; மாலை 3-5 மணி**

| இடம் | தேதி | | இடம் | தேதி | |
|---|---|---|---|---|---|
| கரூர் | 1 | காலை | திருநெல்வேலி ஜங்ஷன் | 10 | காலை & மாலை |
| சேலம் | 2 | காலை & மாலை | திருநெல்வேலி டவுன் | 11 | காலை |
| ஈரோடு | 3 | காலை | ஸ்ரீ வைகுண்டம் | 11 | மாலை |
| திருப்பூர் | 3 | மாலை | அம்பாசமுத்திரம் | 12 | காலை |
| கோயமுத்தூர் | 4 | காலை & மாலை | தென்காசி | 12 | மாலை |
| [illegible]லக்காடு | 5 | காலை | திருவனந்தபுரம் | 13 | காலை & மாலை |
| [illegible]மலைப்பேட்டை | 5 | மாலை | ராஜபாளையம் | 14 | காலை |
| ப[illegible]னி | 6 | காலை | ஸ்ரீ வில்லிபுத்தூர் | 14 | மாலை |
| தி[illegible]டுக்கல் | 6 | மாலை | | 2 முதல் 3 மணி வரை | |
| மதுரை | 7 & 8 | காலை & மாலை | காரைக்குடி | 15 | காலை & மாலை |
| கோயில்பட்டி | 9 | காலை | தேவகோட்டை | 16 | காலை |
| தூத்துக்குடி | 9 | மாலை | புதுக்கோட்டை | 16 | மாலை |

இடமும் ஆலோசனை நேரமும் வழக்கப்படியே

விவரங்களுக்கு எழுதவும்:

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை-4 ★ திருச்சிராப்பள்ளி (தெப்பக்குளம்) ★ கும்பகோணம் (பெரிய தெரு)



# மழலை மொழி

பேராசிரியர் அ. சீனிவாசராகவன்

குற்றாலத்தில் நடந்த சம்பவம். பல நாட்களாகி விட்டன. என்றாலும் இன்று நடந்தது போல் மனத்திலே, வண்ணம் மங்காமல் பதிந்து நிற்கிறது.

குற்றால நாதர் கோயிலை அடுத்து, ஈசான மூலையில் உள்ள வீட்டு வாசலில், அறிஞர்கள் சிலர் உட்கார்ந்து அளவளாவிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேச்சைக் கேட்டு இலக்கிய தர்சனம் பெறக் கூடும், பெற வேண்டும் என்ற ஆசையோடு என்னைப் போன்ற சிலரும் அங்கே வந்திருந்தார்கள். ஆழமான தத்துவக் கருத்தை வெளியிடும் கம்பனுடைய பாடல் ஒன்றைப் பற்றி இலக்கிய ரஸிகர் ஸ்ரீ டி. கே. சி. அவர்கள் அருமையான சில வார்த்தைகள் பேசினார். பின்பு 'பாட்டைப் பார்ப்போம்' என்று சொல்லி விட்டு, பாட்டைப் பாடினார்.

**"பேதி யாதுநிமிர் பேத உருவம் பிறழ்கிலா**
**ஓதி ஓதிஉணருந் தோறும் உணர்ச்சி உதவும்**
**வேத வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா**
**ஆதி தேவர் அவர்எம் அறிவினுக்(கு)**
**அறிவரோ"**

பாட்டைக் கேட்டு விட்டு, அதில் உள்ள சுவையை, ஆழ்ந்த தத்துவத்தை, ஸ்ரீ டி. கே. சி.யின் விளக்கத்தைத் துணையாகக் கொண்டு பருகியிருந்தோம். சிறிதுநேரத்துக்குஒருவரும் பேசவில்லை. கூட்டத்தில் நிலவிய அமைதி வெள்ளத்தை, வார்த்தை மதகினால் சிந்தனை வாய்க்காலுக்குத் திருப்பியது ஒரு குரல்:

"ஆகவேதான் வயது வந்தவர்களே கவிதையைப் பயில வேண்டும் என்கிறேன்."

பேசியவர் தலைவர் ராஜாஜி; சிக்கலான கருத்தை விளக்குவதிலே தன்னேரில்லாத் தத்துவ ஆற்றல் படைத்தவர். 'என்ன சொல்லப் போகிறார், கேட்போம்' என்ற ஆவலோடு திரும்பினேன். விஷயத்தைத் தொடர்ந்து பேசினார்:

"............ஆசிரியத் தொழிலிலே ஈடுபட்டவர். நான் சொல்வதை ஒப்புக்கொள்ள மாட்டார். ஆனால் குழந்தைகளுக்குக் கவிதை புரியாது. கவிதையை உணர்ந்து அனுபவிப்பதற்கு நிறைந்த உலக அனுபவம் வேண்டும். குழந்தைகள் தலையில் கவிதையைக் கொண்டு போய்ச் சுமத்துவது பாபம்."

இதிலிருந்து நீண்டதொருவிவாதம்தொடங்கியது. அங்கே இருந்த அறிஞர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். சொல்லின் பயனுக்குத் தலைசிறந்த எடுத்துக் காட்டான கவிதையைப் பயிலா விட்டால் ஒருமொழியைப் பயில்வது எப்படி என்பது ஒரு கட்சி. இலக்கியப் பயிற்சியை இளமையிலேயே பெற்றுவிட்டால், பின்னர் பெறுவது சாத்தியமா? சாத்தியமில்லா விட்டால் இலக்கியமும் கவிதையும் தருகின்ற கற்பனை, உணர்ச்சி



"உங்களைத்தானுங்க, இது என்ன மாதம்?"
"இதுவா ...... ரேடியோ மாதம்!"

---

வன்மை, ஆன்ம பக்குவம் இவற்றைப் பெறுவது எப்படி என்பது இன்னொரு கட்சி. உலக அனுபவத்தைப் பெறுவதற்கே கவிதை சிறந்த சாதனமல்லவா, கவிதை என்பது மனித அனுபவத்தின் சொல் வடிவந்தானே என்பது வேறொரு கட்சி. இப்படியாக அன்று "குழந்தைகளுக்குக் கவிதை பயன்படுமா, அதைப் போதிக்கலாமா?" என்ற பிரச்னையின்மீது பல கோணங்களிலிருந்து ஒளி விழுந்தது. இன்று கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் "மலரும் மாலையும்" என்ற நூலில் 'மழலை மொழி' என்ற பகுதியைப் படித்துக் கொண்டிருந்தபோது, குற்றாலத்தில் நடந்த விவாதம் நினைவுக்கு வந்தது.

இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. "மழலை மொழி" என்பது குழந்தைகளுக்காகவே பெரும்பாலும் எழுதப்பட்டது. குழந்தைகளுக்காக எழுதியது என்றதும்,

**"அ என்பதோர் அத்திப்பழம்**
**ஆ என்பவன் ஆசைப்பட்டான்"**

என்பன போன்ற வாசகப் புத்தகப் பாட்டுக்கள் ஞாபகத்துக்கு வரலாம். "சரிதான், கவிமணியவர்கள் தன்னுடைய கவிதையை மூட்டை கட்டி ஒதுக்கி வைத்து விட்டு,

**'சின்னச் சின்ன சிற்றெறும்பே**
**சிங்காரச் சிற்றெறும் பே**
**உன்னைப் போல நானுமே**
**உழைத்திட வேணுமே'**

என்பது போன்ற வறண்ட நீதிப் பாட்டுக்களையோ, ஒவ்வொரு எழுத்துக்கும் ஒரு அடியாக நின்று எழுத்துக்களைக் கற்பிக்கும் பாட்டில்லாத பாட்டுக்களையோ, எழுதி இருக்கிறார் போல் தோன்றுகிறது" என்று 'மழலை மொழி'யைப் பயிலாதவர்கள் நினைக்கலாம். ஆனால், 'மழலை மொழி'யைப் படித்த இலக்கிய ரஸிகர்களுக்கு இவ்வாறு தோன்றாது. அவர்களுக்கு,

**"செங்கதிர் பொங்கி வருவதுண்டு—நல்ல**
**செந்தாமரைகள் மலர்வதுண்டு"**
**"விண் மணி யாழியில் வீழ்வதுண்டு—வாசம்**
**வீசு மந்தாரை மலர்வதுண்டு"**
**"முல்லை அரும்பு விரிவதுண்டாம்பலின்**
**மொட்டுகள் மெல்ல அவிழ்வதுண்டு"**

முதலிய அடிகளும்,

**"பசிய புல் நுனியினில் பதித்த வெண்**
**பனித்துளி தானோ நீ பாராய் [முத்தமோ**
**பைங்கிளி எழுந்தோடி வாராய்"**

என்பன போன்ற பகுதிகளும் உடனே ஞாபகத்துக்கு வரும். இவை யெல்லாம் **"நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கு மாங்கே பொசியுமாம்"** என்ற நீதிப் பாடல் வகையைச் சேர்ந்தவையல்ல. இவற்றிலே தமிழ் வளம் இருக்கிறது; அழகுணர்ச்சியின் மணம் வீசுகிறது; கவிதைப் பண்பு அமைந்து கிடக்கிறது. குழந்தைகளுக்கு எளிதிலே விளங்கக்கூடிய சொற்கள்; குழந்தை மனத்துக்குகந்த எளிய சந்தம். இவற்றை இந்தப் பாடல்களிலே காண்கிறோம். கவிதைதான், ஆனால் குழந்தைகளுக் கேற்ற கவிதை. அப்படியானால் குழந்தைகளுக்கும் விளங்கக் கூடிய கவிதை இருக்கும் போலிருக்கிறதே!

ஆம், இருக்கிறது. கவிதை குழந்தைகளுக்கு விளங்கும். ஆனால் ஒரு நிபந்தனை: கவிஞன் மட்டும் குழந்தை உள்ளத்தை அறிந்து அதற்கான மழலை மொழியில் பேச வேண்டும். இதைக் கவிதைப்பண்பு குன்றாமல் சாதிப்பது எப்படி? சாதிக்க முடியுமா?

அன்று ரயில் வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது நடந்தது. காரைக்குடிக்கும் கோட்டையூருக்கும் இடையிலே வண்டி ஏதோ காரணமாக நின்றது. வெளியே எட்டிப் பார்த்தேன். இருபுறமும் கருவேல மரங்கள் அடர்ந்த காட்டு வெளி. என் அருகில் இருந்த சிறுவன்—ஐந்து வயதிருக்கும்—வழியில் எனக்கு நண்பனானவன்—"என்ன அண்ணா, எட்டிப் பார்க்கிறாய்?" என்று கேட்டான்.

"வண்டி நின்று விட்டதே, என்ன காரணம் என்று பார்க்கிறேன்" என்றேன்.

பையன் நகைத்தான்.

"இது தெரியாதா, அண்ணா? ரயிலுக்குக் காலில் கருவேல முள் தைத்து விட்டது. அதற்காக நின்று விட்டது. முள்ளை எடுத்து விட்டுக் குண்டு குண் டென்று ஓடும், பாருங்கள்" என்றான்.

பையனுடைய ஒளி வீசும் விழிகளையும், வெளியே முட்கரங்களை மாலைக் காற்றில் ஆட்டி நின்ற கருவேல மரங்களையும் பார்த்து விட்டு, "தம்பி, எனக்கு வயதாகி விட்டது. தெரியவில்லை" என்று சொன்னேன்.

குற்றாலக் குறவஞ்சி அடிகள் என் மனத்தில் உதயமாயின.

"தேனருவித் திரை யெழும்பி
வானின் வழி ஒழுகும்
செங்கதிரோன் பரிக்காலும்
தேர்க்காலும் வழுக்கும்"

என்று பாடினார் திரிகூட ராசப்ப கவிராயர். "என்ன அருமையான கற்பனை, கவிதைக் கண் படைத்தவருக்கல்லவா இது தோன்றும்! குற்றால மலையின் நிமிர்ந்த தோற்றத்தையும், தேனருவியின் கம்பீர வனப்பையும் இதைவிட அருமையாக உணர்த்திவிட முடியுமா?" என்றெல்லாம் புகழ்ந்து பேசுகிறோம். செங்கதிரோனுடைய பரிக்காலும், தேர்க்காலும், தேனருவியின் உச்சியிலே வழுக்குமானால், ரயிலுக்கு ஏன் கருவேல முள் தைக்கலாகாது? ஆனால் ஒன்று; கவிதைக் கண் இருந்தால்தான் இரண்டையும் காணமுடியும்.

## பெண் கேட்கும் படலம்!



சினிமா நட்சத்திரங்களைப்போல் இனி மணப் பெண்ணும் இரவல் குரலில் பாடலாம்!

குழந்தைப் பருவத்திலே எல்லோருக்கும் கற்பனைப் பார்வை இருக்கிறது. குழந்தைகள் தரையைக் கீறித் தவள வெண் மாடங்கள் அமைத்து விடுவார்கள்; தலையணைமேல் ஏறி உலகம் முழுவதும் சவாரி செய்து திரும்பி விடுவார்கள். அவர்கள் கையிலே களிமண் யானை நீர் குடிக்கும்; மரப்பாச்சி மருந்து கேட்கும்; வளர்ந்த புல் காண்டபமாகும்; தென்னையின் கூந்தல் தெய்வ லோகத்துக்குச் செல்லும்; மரகதப் பொன் ஏணியாகி விடும். ஆனால் வயது உயர, உயர, இந்தக் கற்பனை வன்மை குன்றி விடுகிறது. ஆங்கிலக் கவிஞன் வர்ட்ஸ்வர்த் சொன்னதுபோல், உலக வாழ்க்கையின் இருள் சூழச் சூழ, குழந்தையின் கண் முன்னே தெய்வ ஒளி போர்த்தி நின்றன; உலகம் சோபை இழந்து விடுகிறது. வர்ட்ஸ்வர்த் சொன்னான்:

"ஒரு காலத்தில் சோலையும், புல் வெளியும், வானும் என் கண்ணில் தெய்வ ஒளி போர்த்து நின்றன; கனவின் புதுமையும், சோபையும் அவற்றில் இருந்தன. ஆனால் இன்று அந்த ஒளி மங்கி விட்டது. அதன் காரணம் உலக வாழ்க்கை என்ற சிறைச் சாலையின் இருள் என்னைச் சுற்றிக் கவிந்து விட்டது. எல்லாப் பொருள்களும் பொலிவிழந்து சாதாரணம் என்ற வண்ணமற்ற பாகுபாட்டில் அமுங்கி விட்டன."

அருள் பெற்ற ஒரு சிலர் மட்டும் எத்தனை வயதானாலும் குழந்தையின் கற்பனை விழியால் இந்த உலகத்தைப் பார்த்து, வற்றாத அதன் சுவையைப் பருகும் பேறு படைத்தவர்கள். அவர்களுள் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஒருவர். அவருடைய கவிதையில் பல இடங்களில் இளமையிலே பயிராகும் கற்பனையை நாம் காணலாம். குழந்தைகளுக்கு இயல்பாக உள்ள கற்பனைக்கும், வயது வந்த பிறகு நாம் செய்யும் கற்பனைக்கும் முக்கியமான வித்தியாசம் ஒன்று உண்டு. தாமரையைப் போன்ற முகம், இடிந்த வீட்டைப் போன்று சிதைந்து தளர்ந்த உடல் என்ற முறையிலே பேசுவது வயதானவர்களின் கற்பனை வழி; அதாவது, பொருள்களுக்குள்ளே இருக்கின்ற ஒற்றுமைப் பகுதிகளைப் பகுத்தறிவுக்குச் சமாதானம் ஏற்படும் முறையிலே தொகுத்து, ஒரு பொருளைக் கொண்டு, இன்னொரு பொருளின் தோற்றத்தையோ, தன்மையையோ, தெளிவாக்க முற்படுவது. குழந்தையின் கற்பனை வழியோ வேறு விதமானது. அதற்குத் தாமரையே முகம், குவளையே கண், நாலைந்து புல் முளைத்த வீட்டுக் கொல்லைப்புறமே காடு, செம்மண் பட்டை கண்ணும்புப் பட்டை அடித்த பழம்பானையே புலி, இருளே பேய்—அதாவது உபமானம், உபமேயத்தோடு ஒன்றி விடும்; "ஒரு பொருள்" இன்னொரு பொருளின் குறியீடாக அமைந்து, பின்பு குறியீடு என்ற உணர்வும் அற்று, குறியீடாக நிற்கும் பொருளே குறிக்கும் பொருளாகி விடும். இந்த வகையிலே போகிறது கவிமணியின் கற்பனை. ஆகவே,

"மேட்டு நிலங்களிலே—தினைக் கதிர்
விம்மி விளைகையிலே
காட்டு மயில் வரவும்—குகனுமென்
காதல் விளைப்பாரடி"

என்று அவரால் பேச முடிகிறது. காட்டு மயில் வந்த உடனே குகனுடைய நினைவு மட்டும் அவருக்குத் தோன்றவில்லை; குகனே நேரில் தோன்றிக் காதல் விளைக்கிறான். அது போலவே கூனற் பிறையைக் கண்டதும், சிவனுடைய திருக்கோலத்தை அவர் தெளிகிறார்; மாமலைச் சாரலிலே அசைந்து, அசைந்து செல்லும் யானைக் கூட்டத்திலே, கணபதியையே கண்டு விடுகிறார்.



நாட்டிய கலையகம் என்று ஸ்ரீமதி கிரிஜா பக்கிரிஸ்வாமி அவர்களால் நடத்தப்பட்டு வரும் ஸ்தாபனத்தின் ஆண்டு விழா புதுடில்லியில் சமீபத்தில் நடைபெற்றது. பன்னிரண்டு வயதுக்குட்பட்ட சிறுமியர் பரத நாட்டியக் கலையைப் பயின்று சுமார் ஒன்றரை மணி நேரம் சபையோரை மகிழ்வித்தனர். ஐந்து வயது சிறுமிகள் கூட அலாரிப்பு ஸ்வச்சமாகச் செய்தது வியக்கத்தக்கதாக இருந்தது.

ஒரு படுசுட்டிப் பஞ்சாபிப் பெண், ஐந்தே வயது நிரம்பியவள், அலாரிப்பின்போது கழுத்தையும் கைகளையும் அசைத்துக் கொண்டு, 'தித்தை திதை' என்று சலங்கொலிக்க நடனமாடியது கண் கொள்ளாக் காட்சியா யிருந்தது. தலைமை வகித்த ரயில்வே மந்திரி கனம் ஓ. வி. அளகேசன் அவர்கள் அனைவரையும் வெகுவாகப் பாராட்டி உற்சாகமூட்டினார். — 'கப்பு'.

---

"மாமலைச் சாரலிலே—மதமிகு
வாரணக் கூட்டத்திலே
காமலர் சிந்திடவே—கணேசர் என்
கண்முன்னே நிற்பார் அடி"

இது குழந்தைகளுக்கென எழுதிய பாடல் அன்று. என்றாலும் குழந்தைகளுக்குரிய நிரம்பிய கற்பனை வளமும், குழந்தைகளும் புரிந்து கொள்ளக் கூடிய எளிமையும் கொண்ட பாடல். குழந்தைகளுக் கென்றே எழுதிய பாடல் ஒன்றைப் பார்ப்போம். "பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணம்" என்று தொடங்குகிறது பாட்டு. பொம்மைக் கல்யாணம் குழந்தையின் உலகத்தில் நடைபெறும் நித்திய சம்பவம். 'பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணம்' என்ற உடனே ஓடி வராத குழந்தைகள் உண்டா? குழந்தையின் உற்சாகம்,

"பூலோக மெல்லாம் கொண்டாட்டம்"

என்று கவிஞர் கூறியவுடன் கரை புரண்டு ஓடுகிறது. குழந்தைக்கு இயல்பாக உள்ள இசை உணர்ச்சி,

"பாவைக்கும் பாவைக்கும் கல்யாணம்
பகலும் இரவும் வேலையாம்"

என்ற திருப்பத்தில்—முதல் இரண்டு அடிகளே வேறு சொற்களில் திரும்பி வரும் மாயத்தில்—துள்ளிக் குதிக்கத் தொடங்குகிறது. பொம்மைக் கல்யாணம் என்றால் சாதாரணமா? இரவும் பகலும் வேலையாம். 'ஆமாம்' என்று மெல்ல ஆடுகிறது குழந்தை. கவிஞர் உற்சாகமாய்ப் பாடுகிறார்:

"கொட்டகை போடுது சிலந்தி
கூரை கட்டுது கறையான்
கோலம் போடுது நண்டு"

குழந்தையின் மனம் அது விரும்பும் அச்சத்தோடு—ஆம், குழந்தை எந்த உணர்ச்சியையும், அச்சத்தைக் கூடச் சுவையாக மாற்றி அனுபவிக்கும் — சிலந்தியை, கறையானை, நண்டை எண்ணுகிறது, பார்க்கிறது. சிலந்தி வலை—மென்மையும் அழகும் வடிவான அந்த அற்புதம் — கல்யாணக் கொட்டகையாக, எழில் மண்டபமாகி விடுகிறது. கறையான் குவிக்கும் சர மண் கூரையாகி விடுகிறது. நண்டு அந்த மண்ணின்மேல் கோடிழுத்துச் செல்லும் அந்தப் பயங்கரக் கோமாளி, அடே, கோலமல்லவா போடுகிறது! குழந்தை எழுந்து கைதட்டி ஆடுகிறது. கவிஞர் சிரித்துக் கொண்டு பாடுகிறார். இப்போது குழந்தையின் தோழர்களான காக்கையும், கிளியும், கோழியும் ஒன்றன்பின் ஒன்றாக வருகின்றார்கள். சோலையிலிருந்து குழந்தையைப் பரவசமாக்கும் குயிலும், மயிலும், வண்டும் வந்து சேர்ந்து கொள்ளுகின்றன.

"கண்ணுக்கு மை காக்கை கூட்டுது:
கழுத்துக்கு ஆரம் தத்தை கட்டுது:
கொண்டைக்குப் பூ கோழி வளர்க்குது:
குயில்கள் இனிய குரலில் பாடும்
மயில்கள் நல்ல நடனம் ஆடும்.
வண்டினம் எல்லாம் வந்து கூடி
வாய்க்கினிய அமுதம் வைக்கும்."

'ஆமாம், ஆமாம். எல்லோரும் வாருங்கோ, கல்யாணம் பாருங்கோ' என்று கூத்தாடு

கிறது குழந்தை. இப்போது கவிஞர் குழந்தையுடன் சேர்ந்து கொள்ளுகிறார்:

**"ஊராரே! நீர் வாரீரோ?**
**வந்து மணமும் காணீரோ?**
**கண்டு வாழ்த்திப் போகீரோ?"**

சுற்றியுள்ள பொருள்களில் தெய்வ உலகத்தின் சோபையைக் கண்டு, அதை மணல் வீட்டாலும், பொம்மைக் கலியாணத்தாலும் வெளியிட முற்படும் குழந்தையின் உள்ளத்திற்கு, இங்கே இந்தப் பாடலில் கவிஞர் குரல் தந்து விட்டார். கவிதை மழலை மொழியாகியது; மழலை மொழி கவிதையாக வடிவெடுத்து விட்டது.

ஆழ்ந்த தத்துவக் கருத்துக்கள் அமைந்த பாடல்கள் பல கவிமணி எழுதி இருக்கிறார். அழகிய தமிழில், இலக்கிய மரபு குன்றாமல், ஆழமும் தெளிவும் ஒன்றாகச் சமைந்த எளிமையோடு எத்தனையோ கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் அவர் வடிவாக்கி இருக்கிறார். அருமையான சாதனைதான். என்றாலும் அவருடைய 'மழலை மொழி'க்குத் தனிச் சிறப்பு உண்டு. அதன் மூலமாகக் குழந்தைகளுக்குக் கவிதை தருகிறார் என்பது மாத்திரம் இல்லை. பெரியவர்களாகிச் சிறுமையில் அழுந்தி, கற்பனை ஒளி குன்றி, குருடராய் அலையும் மனிதர்களை அவர்களது இளம் பிராயத்துக்கு, அழகும் கற்பனையும் அமைந்த அந்த விசாலமான உலகத்துக்கு, கவிஞர் அழைத்துச் செல்லுகிறார். 'மழலை மொழி' குழந்தைகளுக்குக் கவிதை. நமக்கோ—வயது வந்த நமக்கோ — அது, சிறுமையி லிருந்து நம்மை விடுவிக்கும் சுதந்திர நாதம்.

# நாடகக் கலை வளர்க!

நம் நாட்டில் தொன்று தொட்டு நாடகக் கலை அரசர்களாலும், அரசாங்கங்களாலும் பேணிப் போற்றி வளர்க்கப்பட்டு வந்திருக்கிறது. ஆனால் சில ஆண்டுகளுக்கு முன்னால் இந்த நாடகக் கலைக்கு ஒரு பேராபத்து வந்தது. அந்தக் கலை இருக்குமிடமே தெரியாமல் வெள்ளித் திரை மறைத்து விட்டது. நாடக மேடை அடியோடு மறைந்து விடுமோ என்ற நிலைமையும் ஏற்பட்டது. நல்ல காலமாக அப்படி ஒன்றும் நடக்க வில்லை. நாடகக் கலைக்கு வந்த ஆபத்து சமீப காலத்தில் நீங்கிற்று என்றால் அக்கலையில் இடைவிடாது ஈடுபட்டு உழைத்த ஒரு சில திடமான கலைவாணர்களும், அக் கலையில் ஆர்வமுள்ளவர்களுமே இதற்குக் காரணம்.

நாடு சுதந்திரம் பெற்றதும், மற்றெல்லாத் துறைகளிலும் இருப்பது போல், நாடகத் துறையிலும் ஓர் எழுச்சியும், புத்துணர்ச்சியும் பிறந்திருக்கிறது. நமது இந்திய சர்க்காரே அருங்கலைகளை வளர்ப்பதில் இப்போதும் ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். இதற்காக ஒரு ஸ்தாபனமே ஏற்படுத்தி யிருக்கிறார்கள். சங்கீதம், நாட்டியம், நாடகம் இவற்றைப் போஷித்து வளர்க்க "**சங்கீத நாடக அக்கடமி**" என்ற பெயரில் ஒரு ஸ்தாபனம் இயங்குகிறது. சங்கீத வளர்ச்சியிலும் நாடக வளர்ச்சியிலும் ஈடுபட்டுள்ள இந்த ஸ்தாபனம் ஒரு தேசிய நாடக விழாவை அடுத்த மாத இறுதியில் டெல்லியில் நடத்தத் தீர்மானித்திருக்கிறது. இந்தியாவில் உள்ள பல பிரதேசங்களி லிருந்து பொறுக்கி யெடுக்கப்பட்ட சில நாடகங்களை டெல்லியில் நடித்துக் காட்டச் செய்து அவற்றுள் சிறந்ததற்குப் பரிசு வழங்கிக் கௌரவிப்பார்கள். டெல்லியில் நடிக்கத் தகுந்த நாடகங்களைப் பொறுக்கி எடுக்கும் பொறுப்பு அந்தந்த மாகாணங்களைச் சேர்ந்தது. இந்த விழாவை நடத்தும் பொறுப்பை நாடக வளர்ச்சியில் ஈடுபட்டுள்ள "தியேட்டர் ஸெண்டர்" என்ற அகில இந்திய நாடகக்குழு ஏற்றுக் கொண்டிருக்கிறது. சென்னையிலும் இதையொட்டி நவம்பர் 1-ந் தேதி முதல் 6-ந் தேதி வரையில், அண்ணாமலை மன்றத்தில் இந்நாடக விழா நடைபெறுகிறது.

இந்த விழாவை யொட்டிச் சென்னை அண்ணாமலை மன்றத்தில் ஆறு நாடகங்கள் நடித்துக் காண்பிப்பார்கள். இவற்றில் சில பிரபல நடிகர்கள் பங்கெடுத்துக் கொள்வார்கள். இந்த ஆறில் சிறந்த நாடகம் ஒன்றை டெல்லியில் நடைபெறும் விழாவில் நடிப்பார்கள். பரிசு பெற்றால் அது சென்னையின் பெருமை.

நமது மதிப்புக்குரிய கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்களே இதில் சிரத்தை யெடுத்துக் கொண்டு நாடக விழாக் கமிட்டித் தலைவராக இருந்து வருகிறார். சென்னை நாடகப் பிரியர்களும் ரஸிகர்களும் பெருவாரியாக இவ் விழாவை ஆதரித்து வெற்றி பெறச் செய்ய வேண்டும்.

இந்த விழாவில் வசூலாகும் தொகை (செலவு போக) பூராவும் நமது பிரதம மந்திரியின் வெள்ள நிவாரண நிதிக்குச் சமர்ப்பிக்கப்படும்.

●

**கிராமவாசியின் பயம்!**

திருச்சி நிலையத்தில் ஒரு சமயம் கிராமவாசி ஒருவரை ரேடியோ நாட்டுப் பாடல் நிகழ்ச்சிக்காகக் கிராமத்திலிருந்தே அழைத்துக் கொண்டு வந்தார்கள். ஒத்திகையின்போதெல்லாம் சரியாகப் பாடி வந்த அக்கிராமவாசி மைக்ரபோனின் எதிரே இருந்ததும் பாட மறுத்து விட்டார். காரணம் அவருடைய குரல் அந்தக் கருவி வழியாக இழுக்கப்பட்டு உலகம் முழுதுமே பரவுகிறது என்று சொல்லப் பட்டதுதான். "நான் இதுவரை போட்டோ எடுத்ததில்லை. அது என் உடம்பை இழுக்கும் என்று எனக்குத் தெரியும். ஆனால் உங்கள் கருவி என் குரலையும் சேர்த்து, உயிரையே இழுத்து விடுகிறதே!" என்று கிராமவாசி வாதாட ஆரம்பித்தார். அவரைப் பாடச் சொல்லவே முடியவில்லை. கடைசியில் அவர் பாடிய முறையை ஸ்வரப்படுத்தி நிலைய வித்வான்களே அந்த மெட்டைப் பாடினார்கள்!




அஜீரணம் வாழ்வையே துன்பமயமாக்கி விடுகிறது; வயதுக்கு மிஞ்சிய வயோதிகத் தோற்றமும் உண்டாக்கிவிடுகிறது. மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் துரிதமான நிவாரணம் தருகிறது. ஏனெனில் அது ஒரு அபூர்வச் சிறப்புடைய பௌடர்; சாஸ்திரீகமான தயாரிப்புத் திட்டப்படி பக்குவமான பொருட்சேர்க்கையுள்ள இந்தப் பௌடர் மூன்று வேலைகள் செய்கிறது—மிருதுவான இரைப்பைக்குச் சமனமூட்டுகிறது; வயிற்றுப் புளிப்பை மாற்றுகிறது; வலியையும் நிறுத்துகிறது.

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் என்று பெயரைச் சொல்லிக் கேளுங்கள். ஒவ்வொரு பாக்கெட்டிலும் Alex C. Maclean "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்ற உண்மைக் கையெழுத்தும் தத்ரூபமாக அச்சிடப் பட்டுள்ளதா என்று நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள்.




# மக்ளீன்

## பிராண்ட் ஸ்டமக் பவுடர்

**எப்பொழுதும் கையில் ஒரு பாட்டில் வைத்திருங்கள்.**

## ஒரு டோஸ்

அஜீரணத்தாலேற்படும் வயிற்று வலி, உடற்பருமன், இருதய எரிச்சல், வயிற்று மந்தம், வாந்தி இவற்றை சடுதியில் குணப்படுத்தும்.

MSY. 9-TAM



# முதல் உதவி

எஸ். விஜயராகவன்

சரோஜா சொல்லுகிறாள் :

“மணி காலாயிடுத்துடீ, சரோ! எழுந்திரு ; படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டு வா!” என்று தொண்டை கிழியக் கூவினாள் அம்மா. நான் தூங்கிக் கொண்டிருக்கிறேன் என்று அவள் நினைத்துக் கொண்டாளோ என்னவோ? இரவு முழுவதும் இமை மூடாது இன்பக் கனவுகளிலே இணைந்து கிடந்த என் மன நிலையை அவள் எப்படி அறிவாள்?

நேற்றிரவு பத்து மணியாகியும்கூட ‘அவர்’ வராததை நினைக்கையில், என்னை ஏமாற்றம் தான் அழுத்திக் கொண்டிருந்தது. விடிந்தால் எனக்குத் தலை தீபாவளி! ஒருவேளை அவர் வராமலே இருந்து விடுவாரோ என்ற பயம்! முடிவில் இரவு பதினொரு மணிக்குத் ‘தட தட’ வென்று வாசற் கதவு தட்டப்படும் சத்தம் கேட்கையில், நான்தான் முதலில் படுக்கையிலிருந்து வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருந்தேன்.

தொடர்ந்து அப்பாவும், “மாப்பிள்ளையாகத் தானிருக்கும்!” என்று சொல்லிக் கொண்டே கதவைத் திறக்கப் போனார். சற்றுப் பொறுத்து. “வாங்கோ, மாப்பிள்ளை! வாங்கோ...வாங்கோ!” என்ற அப்பாவின் மகிழ்ச்சி ததும்பும் வரவேற்புக் குரலைக் கேட்டதும்தான் என்னுடைய உயிர் உடலுக்குத் திரும்பியது.

அவர் வந்து விட்டார்!

ஆனால் ஏனோ நான் என்னையறியாமல் தாண்டிக் குதித்துப் பக்கத்து அறைக்குள்ளே ஓடிப் பதுங்கிக் கொண்டேன். இது வரையிலும் யாருடைய வரவை எதிர்நோக்கி ஏங்கித் தவித்தேனோ, அந்த இனியவர் வந்து விட்டதும் ஏனோ அவருடைய எதிரே செல்லக்கூட எனக்குத் துணிவு பிறக்கவில்லை!

“இன்றைக் கென்று ரயில் மூன்று மணி நேரம் ‘லேட்’! அகாலத்திலே உங்களுக்கெல்லாம் தொந்தரவு!” என்று சிரித்துக் கொண்டே மொழிந்தார் அவர். அப்பப்பா, என்ன சாகஸம்! இந்த மட்டும் இப்போதாவது வந்தாரே என்றல்லவா நான் மகிழ்ந்து கொண்டிருக்கிறேன்?

தொடர்ந்து அப்பாவுடன் உள்ளே சென்று ஏதோ சாப்பிட்டு விட்டுத் திரும்பிய அவர் மாடி அறைக்குச் சென்று விட்டார். அங்கே தான் அப்பா அவருக்குப் படுக்கை விரித்திருந்தார். ஆனால் கூடத்திலிருந்த அந்த அரை மணி நேரத்திற்குள் அவரது அழகிய நயனங்கள் தாம் எத்தனை முறை எதையோ தேடுவது போலச் சுற்றிச் சுற்றி அலை பாய்ந்து ஏமாந்து விட்டன?

நன்றாக ஏமாறட்டும்! இரண்டு நாட்கள் முன்னதாகவே. வந்து விடுங்கள் என்று வருந்தி வருந்தி நான் எழுதியிருந்தும், ‘மாப்பிள்ளை ஜம்பத்துடன்’ அவர் மட்டும் கணக்காகக் குண்டு போட்டாற் போல் சமயத்துக்கு வந்து குதிக்கலாமோ?

அவர் மாடிக்குப் போகும் வரையில் நான் வெளியே தலையைக் காட்டவில்லை. ஆனால் ஆசை ததும்பிய என் விழிகள் மட்டும் உள்ளே அறையில் இருட்டிலிருந்தபடியே கதவு இடுக்கின் வழியாக அவரை அப்படியே ‘விழுங்கி’க் கொண்டிருந்தன. பாவம்; ரயிலில் வசதியாகப் பிரயாணம் செய்ய முடியவில்லையோ என்னவோ? மிகவும் களைத்துச் சோர்ந்தவர் போல் காணப்பட்டார் அவர். எப்போதும் அலை அலையாகப் படிந்திருக்கும் அவரது அழகிய கிராப்புச் சிகை கலைந்து ‘காமா சோமா’ வென்றிருந்தது; பலகை போல் அகன்றிருக்கும் அவருடைய மார்பை




மூடியிருந்த 'ஸில்க்' சட்டையும் நன்றாகக் கசங்கிப் போயிருந்தது......

"சரோ! இன்றைக்குக் கூடவா இன்னமும் உனக்குத் தூக்கம்? நன்றாயிருக்குடீ? மாப்பிள்ளை கீழே இறங்கி வந்து பார்த்தால் சிரிக்கத்தான் போகிறார்!"

மறுபடியும் அம்மா கூக்குரலிடுவது காதில் விழுந்தது; அவசரமாக எழுந்து படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டு, நேராக நிலைக் கண்ணாடியருகில் சென்றேன். ஒரு கணம் அதன் முன்னே நின்று மேல் புடவையைச் சரிப்படுத்திக் கொண்டு, முன் தலைமயிரையும் கோதி வகிடிட்டுக் கொண்டு மெல்ல வெளியே வந்தேன். அங்கே கூடத்தின் மத்தியில் நான் கண்ட காட்சி!

எதிர் எதிராகக் கோலமிட்ட இரண்டு மணைப் பலகைகள்; நடுவே பெரிய படிக் கோலத்தில் வெற்றிலை பாக்கு, புஷ்பம், மஞ்சள் இத்யாதி களைத்தாங்கிய வெள்ளித் தட்டு; அடுத்து மற்றொரு வெள்ளித் தட்டில் புது வஸ்திரங்கள், பட்டாக மத்தாப்புக்கள்! இவற்றின் மங்களத் தன்மையை நிறைவு படுத்தும் வகையில், அருகில் வெள்ளிக் குத்துவிளக்கு ஒன்று ஐந்து முகங்களுடன் சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தது.

கண் நிறைந்த இக் காட்சியை ஒரு கணம் நின்று ரசித்த பின், பல் துலக்கி முகம் கழுவிக் கொள்வதற்காகக் குழாயடிக்குச் சென்றேன். அங்கிருந்து ஐந்தே நிமிஷத்துக்குள் நான் திரும்புகையில், 'அவர்' வந்து கிழக்குப் பார்த்த மணையில் சர்வ சகஜமாக 'ஜம்' மென்று புது மாப்பிள்ளை மாதிரி உட்கார்ந்திருந்தார்! இந்த ஆண் பிள்ளைகளுக்கே வெட்கம் எங்கே தெரிகிறது?

இப்போது நான் வசமாக மாட்டிக் கொண்டுவிட்டேன்; அவரது பார்வையில் படாமல் எப்படி நான் தப்பி உள்ளே ஓட முடியும்? "என்னடீ சரோ, அங்கேயே நிக்கறே? இங்கே வா: மாப்பிள்ளையை முதலில் நமஸ்காரம் பண்ணிவிட்டு மணையிலே பக்கத்தில் உட்காரு!"

அம்மா உத்தரவிட்டு விட்டாள்; இனித் தப்புவதற்கு வழியில்லை! எனவே தலையைக் குனிந்து கொண்டே நான் அவரை நெருங்குவதற்குள், "கௌரீ கல்யாணம்......வைபோகமே......!" என்று தன் கீச்சுக்குரலில், ஹார்மோனியத்தின் ஐந்தாறு கட்டைகளை ஏக காலத்தில் அழுத்தியது போலப் பாட ஆரம்பித்துவிட்டாள் அம்மா.

எனக்குச் சிரிப்பு பொங்கிக் கொண்டு வந்தது; அடக்க முடியாமல் 'கபக்' கென்று வாய் விட்டுச் சிரித்து விட்டேன்.

"என்னம்மா சிரிப்பு இப்போ? உட்காரு—" என்றார் தூரத்தில் விசுப் பலகையில் அமர்ந்திருந்த என்னுடைய அப்பா.

நான் மணையில் தலை குனிந்தவாறே பூப் போல உட்கார்ந்ததும், அம்மா என் கையிலே கொஞ்சம் மஞ்சளைக் கொடுத்து 'அவ'ருக்கு நலங்கிடச் சொன்னாள். அவ்வளவுதான்; உலகத்திலுள்ள நாணமெல்லாம் திரண்டு வந்து என்னைத் தீண்டி விட்டதுபோல் என் உடல் வெட்கிக் கூசியது. அவரோ தயாராகக் காலையும் நீட்டி விட்டார்! கடைந் தெடுத்தாற் போன்றிருந்த அவரது உரமான பாத மலர்களைத் தொடுகையில் என் மெய் சிலிர்ப்பியது; விரல்கள் நடு நடுங்கின; உடம்பெல்லாம் மயிர்க் கூச்சல்!

எப்படியோ நலுங்கு முடிந்தது; ஆனால் அம்மா அத்துடன் விட்டாளா? கையில் எண்ணெயை எடுத்து அவர் தலையிலே கொஞ்சம் தேய்க்கச் சொன்னாள். சாஸ்திரமாம்! அவருடைய முன் தலையில் நான் வார்த்த எண்ணெய், அகன்ற நெற்றியில் வழிய ஆரம்பித்தது. பிரயாசையுடன் அதைப் பின் தலைக்கு ஒதுக்குகையில், என் விரலில் வழவழப்பாக ஏதோ தட்டுப்பட்டது; ஆம், காலணா அளவுக்கு அவரது நடு மண்டையில் ஒரு காய வடு!

ஏதோ மின்சார இயந்திரத்தின் விசையை முடுக்கி விட்டாற் போல், அத் தழும்பில் என் விரல் பட்டதும், என் உள்ளமும் உணர்வும் தடுமாறின; உடல் முழுவதும் புல்லரிப்பு! என்னையறியாமல் என்னுடைய விழிகள் அவர் இனிய முகம் நோக்கித் தாழ்ந்தன.

அதே சமயம் அவரும் என் மீது பார்வையை ஓட்டியதை நான் எதேச்சையாகக் கருதவில்லை. நானும் அவரும் ஒன்று; வீணையும் நரம்பும் மாதிரி! நளினமான என் விரல்கள் அவரது அங்கத்தின் மீது நடம் புரிகையில், அவருடைய இதய நாதம் ஒலிக்கத் தொடங்கியது இயற்கைதானே?

எங்களது கண்கள் கலந்து சங்கமித்தன.

"வலிக்கிறதா?" என்று என் சலனமற்ற விழிகள் அன்புடன் அவருடைய கண்களைக் கேட்டன, நயன பாஷையிலே!

"அதெப்படி வலிக்கும் சரோ...? அது நமது இன்பமயமான வாழ்க்கையின் காதல் சின்னமல்லவா?"

என்று பதிலளித்தன அவருடைய அந்தப் பொல்லாத கண்கள்.

என் தளிர்க் கைகள் மட்டும் தொடர்ந்து யந்திரம் மாதிரி அவர் அங்கத்தின் மீது வினையாடிக் கொண்டிருந்தன. ஆனால் என் உள்ளம் ...? சரியாக ஒரு வருஷம் பின்னோக்கிச் சென்று அப்படியே 'பிரேக்' போட்டாற் போல் நிலைத்து நின்றது......

**சந்திரன் சொல்லுகிறான்:**

இன்றைக்குப் போல் அன்றும் தீபாவளிதான்! ஆனால் அதை நான் கொண்டாடிய விதமே அலாதி. மாணவர் விடுதியில் தங்கி இன்ஜினீயரிங் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த தடிப் பிரம்மச்சாரியான நான் இன்றைக்குப் போல, சரோவுடன் அதைக் கொண்டாடியிருக்க முடியுமா?

வழக்கப்படி விடுதியிலேயே சக மாணவர்களுடன் கூடத்தான் அப் பண்டிகையைக் கொண்டாடுவதாகத் திட்டம் போட்டிருந்தேன். ஆனால் தீபாவளிக்கு முதல் நாளிரவு திடீரென்று மாம்பலம் சாதுல்லாத் தெருவிலிருந்த என் தூர பந்து ஒருவர் என்னைத் தேடி வந்தார்; மறுநாள் தீபாவளிக்கு அவருடைய வீட்டுக்கு வரும்படி என்னை வற்புறுத்தி அழைத்தார்.

நான் என்னென்னவோ 'சாக்குப் போக்கு'கள் காட்டியும் அவர் விடவில்லை. இறுதியில் விடியற்காலை நான்கு மணிக்கெல்லாம் மங்கள ஸ்நானத்துக்கே நான் அவர் வீட்டில் தவறாது ஆஜராகி விட வேண்டுமென்று ஏற்பாடாயிற்று.

அதேமாதிரி காலை மூன்றரை மணிக்கெல்லாம் எழுந்து மாம்பலத்துக்குப் புறப்பட்டேன். சாதுல்லாத் தெருவின் முனையை அடையும்போது விடியற்காலை மணி மூன்றே முக்கால் இருக்கும்!

அமாவாசை இருட்டு தெருவிலே அடையாய்க் கப்பிக் கிடந்தது. காலைத் தடுக்கிய அக் காரிருளில் எனக்கு ஒன்றுமே சரியாகத் தெரியவில்லை. உறவினரின் வீட்டை எப்படிக் கண்டு பிடிப்பது? தட்டுத் தடுமாறிக் கவனமாகப் பார்த்துக் கொண்டே தெருவின் வலது சாரி வீடு

குரலைக் குறைத்தார்!



களின் ஆளோடி மீது வெகு வேகமாக நடந்து போய்க்கொண் டிருந்தேன்.

நடுவே ஒரு பெரிய மாடி வீடு; அதைத் தாண்டுகையில், 'பொத்'தென்று ஏதோ என் தலை மீது மேலே இருந்து விழுந்தது. தொடர்ந்து—பட்!......படார்!......படீர்!......படார்! என்ற சத்தம்.

அடுத்தடுத்து என் தலை மீதும், உடல் மீதும் பட்டாசுக் கட்டுகள் நிறைய வெடித்தன; கட்டன. உச்சந் தலையில் மயிர் வேறு பொசுங்கி, நெருப்புப் பொறி தலையையும் எட்டிச் 'சுரீர்' என்று பாய்ந்தது.

"அம்மா!" என்று பயங்கரமாக அலறி விட்ட நான் தலையைப் பிடித்துக் கொண்டு கீழே தரையில் உட்கார்ந்து விட்டேன்.

அந்த வீட்டிலிருந்து வெளியே ஓடி வந்த ஒரு பெரியவர் என்னைச் சிரத்தையுடன் தூக்கி நிறுத்தினார். பிறகு என் தோளை அணைத்தவாறு உள்ளே அழைத்துப்போனார். அங்கே கிடந்த சாய்வு நாற்காலி யொன்றில் அமர்த்தித் தலைக் காயத்தை ஆராய்ந்தார்.

"கவலைப் படாதீர்கள், ஸார்! நல்ல வேளையாக நெருப்புக் காயம் சின்னதாகத்தான் இருக்கிறது!" என்று கூறி விட்டு, உள் பக்கம் திரும்பி, "யாரங்கே......? வெட்டுக் காய மருந்தும், பினாஸ்திரியும் சீக்கிரம் கொண்டு வா!" என்று குரல் கொடுத்தார்.

மறு நிமிஷமே கையில் மருந்துடன் இளம் பெண் கொடி ஒருத்தி தோன்றினாள்.

"சரி......சரி......நீயே கொஞ்சம் மருந்தை எடுத்துத் தடவேன்; எனக்கு மூக்குக் கண்ணாடி யில்லை!" என்றார் பெரியவர்.

உடனே அந்தப் பெண்ணின் ஒரு தளிர்க் கரம் என் மண்டையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டது; மற்றொரு வளைக் கரம் காயத்தின்மீது மருந்தைத் தடவ ஆரம்பித்தது.

ஆஹா! எவ்வளவு இதமாக இருந்தது அந்த அபூர்வ சிகிச்சை! அந்த இன்பத்துக்கு இடையூறு ஈர்க்காதபடி அவள் அப்படியே மருந்தைத் தடவியபடி இருக்கக் கூடாதா?

**சரோஜா சொல்லுகிறாள்:**

அதெப்படி முடியும்? அப்பா வேறு அருகிலே நின்று கொண்டிருந்ததால், என் முதலுதவி அவருக்கு இதமான சுகத்தை யளிக்கிறது என்று தெரிந்தும் கூட அளவோடு நிறுத்திக் கொண்டேன்.

உடனே அவரும் விழிகளை மலர்த்தி என்னைப் பரவசத்துடன் பார்த்தார். அப் பார்வையில் தான் எவ்வளவு அன்பு கனிந்திருந்தது? எத்தனை நன்றியுணர்ச்சி பெருக்கெடுத்து ஓடியது? ஆனால், அவரது இந்த நிலைமைக்கு நான்தான் மூலகாரணம் என்று தெரிந்தால், அவர் என்ன நினைப்பாரோ?

அதை அறியும் சந்தர்ப்பம் அண்மையிலேயே எனக்குக் கிட்டியது; அப்பாதான் பேச்சை ஆரம்பித்தார்: "மன்னிக்கணும், ஸார்! இந்த விபத்துக்குக் காரணம் என் பெண் சரோஜாதான். ஒரு பட்டாசுக் கட்டை முழுசாக அல்லவா கொளுத்திப் போட்டிருக்கிறாள்? மூதேவி!"

"பாவம், அவளை ஏன் திட்டுகிறீர்கள்? வேண்டுமென்றா அப்படிச் செய்திருப்பாள்? ஏதோ என்னுடைய போதாதகாலம்......"

என்ன பரந்த மனப்பான்மை, பண்புள்ள இருதயம், அன்பு நிறைந்த உள்ளம்!

தொடர்ந்து, அவரைப் பற்றிய பூர்வோத்திரங்களை யெல்லாம் விசாரித்தார் அப்பா. சந்திரன்! எவ்வளவு அழகான பெயர்! அவருக்கு இன்னமும் கல்யாணம் ஆகவில்லை என்றதைக் கேட்கையில் நான் ஏன் அப்படிப் பெருமூச்சு விட்டுத் தீர்த்துக் கொண்டேன் என்று இன்று வரை எனக்குப் புரியவில்லை.

கடைசியில், "சந்திரன்! இந்த உடம்புடன் நீங்கள் எங்கும் வெளியே போகக் கூடாது; அடுத்த அறையிலே படுத்துக் கொள்ளுங்கள். உங்கள் உறவினருக்குச் சேதி யனுப்புகிறேன்......" என்றார் அப்பா.

அவர் எங்கே இப்போதே போக வேண்டுமென்று பிடிவாதம் செய்வாரோ என்று பயந்தேன். அவர் யோசிப்பது போல் ஒரு கணம் என்னைப் பார்த்தார். மறு விநாடியே, "சரி......சாயங்காலம் போகிறேன். உங்கள் உதவிக்கு மிகவும் நன்றி!" என்றார்.

எனக்கு 'அப்பாடா......!' என்றிருந்தது.

**சந்திரன் சொல்லுகிறான்:**

'அப்பாடா...!' என்றில்லாமல் வேறு எப்படி யிருக்கும்? அதுவும் சரோவே தன் தளிர்க் கரங்களால் உள்ளே கட்டிலின் மீது விரித்த படுக்கையில் படுக்கும் போது! என் சௌகரியத்தைக் கவனித்த பின்புதான் அவர்கள் எல்லோரும் உள்ளே தீபாவளி ஸ்நானத்துக்காகப் பின் கட்டுக்குச் சென்றார்கள். ஆனால் அரை மணிக்கெல்லாம் ஒரு கையில் தட்டு நிறையப் பட்சணங்களும், மற்றொன்றில் காப்பி டம்ளரும் ஏந்திக் கொண்டு, ஒயிலாக நடந்தவாறு என் அறைக்குள் நுழைந்தாள் சரோஜா. நான் மெல்ல எழுந்து உட்கார்ந்தேன்.

"முடிந்த அளவுக்குச் சாப்பிடுங்கள்!" என்று தட்டை என்னெதிரே வைத்து விட்டு, "என்னால்தான் உங்களுக்கு இவ்வளவு கஷ்டம்! என்னைத் தயவுசெய்து மன்னிப்பீர்களா?" என்றாள். அப்போது சரோவின் கண்களிலே இரு முத்துக்கள் துடித்தன.

என் நெஞ்சம் பாகாய் உருகியது. "வருத்தப் படாதே, சரோ எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை. ஆனால்..." என்று மெதுவாக இழுத்தேன், அவள் ஆவலைத் தூண்ட.

"ஆனால்? சொல்லுங்களேன்!"

"ஒரு சின்னக் கவலை, சரோ!"

"கவலையா?" என்று பரிவுடன் என்னை நோக்கினாள், நீரில் நீந்திய விழிகளுடன்.

"ஆமாம், சரோ! என் தலையில் காயம் பட்ட இடத்தில் சின்ன வழுக்கை உண்டாகி விடும்; இனி மேல் எந்தப் பெண் என்னை மணக்க முன் வருவாள்?"

டாக்டர் வி. நடேசன் (அஸிஸ்டெண்ட் சர்ஜன் ரிடையர்ட், திருக்கோவிலூர்) அவர்கள் "ஹாரஸ்கோப் எக்ஸ்சேஞ்" சேவையைப் பாராட்டி எழுதிய கடிதத்தில் கீழ்க்கண்டபடி குறிப்பிட்டுள்ளார்கள் :

"..........'ஹாரஸ்கோப் எக்ஸ்சேஞ்ச' ஓர் ஒப்பற்ற ஸ்தாபனம். இந்தப் பரோபகாரமான தொண்டைச் செய்ய முன் வந்தவர்களை மனமாரப் பாராட்ட விரும்புகிறேன். வெகு சமீப காலத்தில் ஆரம்பிக்கப்பட்டதாயினும் இந்த ஸ்தாபனம் பலருக்கு உபகாரம் செய்வதில் வெகு வேகமாய் முன்னேறி வருகிறது. இந்த ஸ்தாபனத்துக்கு எல்லாவித உற்சாகமும் ஊக்கமும் அளிக்க வேண்டியது மிக அவசியமாகும்......."

இப்படிப் பலபேர்களின் நன்மதிப்பைப் பெற்றுள்ளது "ஹாரஸ்கோப் எக்ஸ்சேஞ்". தென் இந்திய ஸ்மார்த்த, வைஷ்ணவ, மாத்வ பெற்றோர்கள் கலியாண வயது வந்த தங்கள்பெண் அல்லது பிள்ளை ஜாதகங்களை முழு விவரங்களுடன் கீழ்க் கண்ட விலாசத்திற்கு அனுப்புங்கள். சொற்ப செலவில் உங்களுக்குத் தகுந்த பெண் அல்லது பிள்ளையின் ஜாதகத்தை அனுப்பிவைக்கிறோம்.

★

**HOROSCOPE EXCHANGE**

**Post Box No. 1834, MADRAS-1**

---

கலியாசர் டாகூர் மகாத்மாவின் பெருமையையும் அவர் ஆற்றிய அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் மிகவும் அழகாக விளக்கியிருக்கிறார்

விலை அணா எட்டு

(தபால் செலவு தனி)

★

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபால் செலவு தனி)

★

கிடைக்குமிடம் :

**கல்கி காரியாலயம்**

கீழ்ப்பாக்கம் :: சென்னை

---

Godrej ரெஜிஸ்டர்டு கோத்ரெஜ

# ஸிந்தால்

ஜீ-11 ★ (ஹெக்ஸாக்ளோரோபீன்) உடைய சோப் இது ஒன்றேதான்.

ஆகையால் —

இதுஒன்றே உண்மையான சரும அழகுசோப்;

இது ஒன்றே உண்மையான துர்நாற்றத்தை அகற்றும் சோப்

முகத்திற்கும் கேசத்திற்கும் மிகச் சிறந்தது. கண்களுக்கு தீங்கற்றது. மிகவும் இதமுள்ளதா யிருப்பதால் குழந்தையின் சருமத்திற்கு மிகச் சிறந்தது. வேர்க்குரு, கரும் பொட்டுகள், பருக்கள், கொப்புளங்கள், கரப்பான், கால் புண் ...... முதலியவைகளை குணப்படுத்துகிறது.

ஸிந்தால் எல்லோருக்கும் எல்லாவற்றிலும் சிறந்தது!




ரம்மியமான வாசனையுடைய நுரை



ஜீ-11 உடைய கோத்ரெஜ் ஸோப் டாலிக் தினந்தோறும் உபயோகித்து வந்தால், பொடுகை வர வொட்டாமல் தடை செய்கிறது.

★ முதலில் கண்டு பிடிக்கப்பட்டதும் ருசுவாக்கப்பட்டதும், குணமளிக்கக்கூடியதும் எரிச்சலை உண்டு பண்ணாததும், கிருமிகளை கொல்லக்கூடியதும், துர்நாற்றத்தை அகற்றுவதுமான சோப்பு ரசாயனம்.

சரோ 'கபக்'கென்று சிரித்துவிட்டாள். சிற்றோடையின் மெல்லொலியைப் போலிருந்த அந்தச் சிரிப்பைத் தொடர்ந்து, "அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம்! எங்கப்பா தான் வலையை விரித்து வைத்து விட்டு எந்த மாப்பிள்ளை அதில் விழுவார் என்று பார்த்துக் கொண்டிருக்கிறாரே! உன்னை இத்தனை நாழியாக அதுதான் பேச்சு" என்றாள்.

"ஆனால் ஒரு சந்தேகம், சரோ! கல்யாணம் ஆன பிறகும் வருஷா வருஷம் தீபாவளியன்று ஒரு பட்டாசைக் கொளுத்தி என் மேல் போட மாட்டாயே? வருஷத்துக்குக் காலணா அளவுக்கு வழுக்கை விழுந்தால், சீக்கிரமே அடியேன் தலை மொட்டையாகி விடுமே!" என்றேன் நான் கேலியாக.

**சரோஜா சொல்லுகிறாள்:**

கேலி நிறைந்த அந்தக் கேள்வியை இப்போது நினைக்கையிலேகூடக் 'களுக்' கென்று எனக்குச் சிரிப்பு வந்து விட்டது. சிரித்தேன்.

"என்னடி சரோ, குழந்தையாட்டமா சிரித்துக்கொண்டே நிக்கறே? நீ என்னைய் தேய்க்கிற அழகு நன்றாயிருக்கு! போதும், போ! இனிமேல் மாப்பிள்ளையே தேச்சுக்கு வார். நீயும் பக்கத்திலே மணையில் உட்கார்!" என்று அம்மா அதிகாரம் செய்தாள்.

நான் அவர் அருகிலே சென்று அமரிக்கையாக அமர்ந்தேன். அம்மா தன் விசித்திரத் தொனியிலே மறுபடியும் பாடிக் கொண்டு, எங்களுக்கு 'ஆரத்தி' எடுத்தாள்.

# பரதநாட்டிய மகா வித்வான்

பரத நாட்டியக் கலைக்குப் புத்துயிர் அளித்து, அந்தக் கலையை வளர்த்து வந்தவர்களில் நாட்டிய கலாநிதி பந்தணை நல்லூர் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையவர்கள் மிக முக்கியமானவர்.

பிள்ளையவர்களுக்குத் தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் முதலான மூன்று பாஷைகளிலும் பாண்டித்தியம் உண்டு. அரங்க நாட்டிய சாஸ்திரம், பரதவர்ணவம், ஆதி பரதம், அர்ஜுன பரதம், நந்திபரதம், பரதரஸ பிரகரணம், நிருத்த ரத்னாவளி, நிருத்தன நிர்ணயம், அபிநய தர்பணம், ஹஸ்த லக்ஷண தீபிகை, சங்கீத தர்பணம், சங்கீத நிருத்தாவளி, சங்கீத ரத்னாகரம் முதலான சாஸ்திரங்கள் எல்லாம் நன்றாய் ஆராய்ச்சி செய்தவர். தெலுங்கில் சில வர்ணங்களும் கீர்த்தனங்களும் சாஹித்யம் செய்திருக்கிறார்கள். ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் ஸ்ரீ தீக்ஷிதர் கீர்த்தனங்களும் ஸ்ரீமான் பிள்ளையவர்களுக்குப் பாடாந்தரம் உண்டு. ஸ்ரீ பிள்ளையவர்களுக்கு அநேக மேதையான சிஷ்யர்கள் உண்டு. அதில் அண்ணாமலை சர்வ கலாசாலையிலும், சென்னை சர்வ கலாசாலையிலும் சங்கீத புரபசராகவும், பிரின்ஸிபாலாகவும் இருந்து காலம் சென்ற தஞ்சை சங்கீத கலாநிதி ஸ்ரீ பொன்னையா பிள்ளையவர்கள் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையின் பிரதம சிஷ்யரும் சொந்த மருமகனுமாவர்.



நாட்டிய கலாநிதி ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுக்கு இரு பக்கங்களிலும் நிற்பவர்கள் அவரது குமாரர் ஸ்ரீ முத்தையா பிள்ளையும் கடைசி சிஷ்யை குமாரி லக்ஷ்மி ராஜமும்.

தற்காலம் பிரபலமான நாட்டிய ஆசிரியர்களாக இருந்துவருபவர்களில் பந்தணை நல்லூர் ஸ்ரீ சொக்கலிங்கம் பிள்ளையவர்களும் திருவானப்புத்தூர் ஸ்ரீ சாமிநாத பிள்ளையவர்களும் பிள்ளையவர்களின் முக்கிய சிஷ்யர்களாவார்கள். பின்னை அவர்களின் ஒரே குமாரரான ஸ்ரீ முத்தையா பிள்ளையவர்கள் மகாமேதையாக இருக்கிறார்கள்.

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் சுமார் எழுபது ஆண்டுகளாகப் பரத நாட்டியக் கலையின் அபிவிருத்திக்காக அரும் பாடுபட்டுத் தொண்டாற்றி வந்திருக்கிறார்கள். ஸ்ரீ பிள்ளையவர்கள் தமது எண்பத்தாறாவது ஆண்டு தொடக்கத்தில் அக்டோபர் 14உ இறைவனடி சேர்ந்தார்கள்.

ஸ்ரீ பிள்ளையவர்களின் மறைவு பரத நாட்டியக் கலையின் அபிவிருத்திக்கு ஒரு பெரிய நஷ்டம்.

ஸ்ரீ பிள்ளையவர்களின் பிரிவால் அளவிலாத் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் அவருடைய ஏக புத்திரர் ஸ்ரீ முத்தையா பிள்ளையவர்களுக்கும் அவர்கள் குடும்பத்தார்களுக்கும் எண்ணற்ற சிஷ்யர்களுக்கும் பரத நாட்டிய ஆசிரியர்கள்—ரசிகர்கள் சார்பாக மனமார்ந்த அனுதாபத்தையும் மரியாதையையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

— நாட்டிய கலாகேசரி வழுவூர் ராமையாப் பிள்ளை

# நிகழ்ச்சிக் கதம்பம்

சோமு

ரேடியோ நிகழ்ச்சிகளில் ஒரு முக்கியமான அங்கமாக அமைந்துள்ளது, கிராம நிகழ்ச்சி.

நம்முடைய பாரத நாடு முழுதும் கிராமங்கள் நிரம்பி யிருக்கின்றன. எங்கோ ஒரு கோடியில் இருந்து கலப்பையுடனும், மண் வெட்டியுடனும் காலத்தைக் கழிக்கும் ஒரு கிராமவாசிக்கும் அரசியலிலே மற்ற எல்லாரையும் போன்ற பொதுஜனப் பொறுப்பு இருக்கிறது. எழுத்துக் கல்வி கணிசமாக இல்லாத நமது நாட்டில், கிராம மக்களுக்குக் கல்வி புகட்டி அவர்களுடைய தொழிலின் களைப்பை மறந்து அவர்கள் களிக்கும்படி செய்ய வேண்டிய பெரும் பணி ரேடியோவுக்கு உண்டு.

கிராமத்து மக்களுக்கு ரேடியோவின் தொடர்பை ஏற்படுத்திக் கொடுக்க, ராஜ்ய அரசாங்கங்கள் அங்கங்கே பஞ்சாயத்துக்கள் மூலம் ஒலிபெருக்கிகள் அமைத்து, பூங்காக்களில் அவர்கள் இருந்து கேட்பதற்குரிய வசதிகளைச் செய்திருக்கிறார்கள். டெல்லியில் இந்தப் பணியை அகில இந்திய ரேடியோ ஸ்தாபனமே செய்கிறது. இந்த வேலைக்குத் துணையாக, ராஜ்ய அரசாங்கங்களுக்கு நுட்பம் கூற, டெல்லியில் அகில இந்திய ரேடியோவின் ஒரு கிளை இலாகா நிறுவப்பட்டு இயங்கி வருகிறது.

கிராம நிகழ்ச்சியின் முக்கிய நோக்கம், விவசாயிகள் தங்கள் சாகுபடியை எப்படி அதிகப்படுத்துவது, நாட்டின் உணவுத் தேவைக்கு எப்படி யெல்லாம் ஈடு கட்டுவது என்பதை எடுத்துச் சொல்வதுதான். இதற்கு அனுசரணையாக ஆடு மாடுகளின் வளர்ப்பு, கோழிகளைப் பேணுவது முதலியன குறித்து யோசனைகளும் இந்த நிகழ்ச்சியில் கேட்கலாம். இவற்றோடு கிராம மக்களின் சுகாதார நிலையை மேம்படுத்துவதற்கும், ஆரோக்கியத்தைப் பாதுகாப்பதற்கும் அவர்களுக்குப் பல யோசனைகள் கூறப் படுகின்றன. இவை மட்டும் போதுமா? நமது பாரத நாட்டின் பண்பாட்டிற்கும், கலைகளுக்கும் அடிப்படையாக இருப்பதே நம்முடைய கிராமங்கள்தானே. எனவே, கிராம மக்களுக்கு அவர்களுடைய கலாசாரத்தை நினைவு படுத்துகிற முறையில் கிராமப் பண்பாட்டைச் சித்திரிக்கும் பல இசை நிகழ்ச்சிகளும் நாடகங்களும் நடைபெறுகின்றன.

இந்த நிகழ்ச்சிகளில் அவ்வப்போது கிராமத்து மக்களே ரேடியோ நிலையத்துக்கு வந்து தங்கள் அனுபவங்களை எடுத்துச் சொல்லுகிறார்கள். கிராம விழாக்களில் நடிக்கும் குழுவினர் பலர் தங்கள் இசை மரபுகளையும், நாட்டுப் பாடல் நாடகங்களையும் இந்த நிகழ்ச்சியிலே ஒலி பரப்பி வருகிறார்கள். கிராம வில்லுப் பாட்டு, காமன் பாட்டு, ஒயில், கும்மி முதலியவற்றை விசேஷமாகக் குறிப்பிட வேண்டும்.

செய்தி அறிக்கை என்பது எல்லாருக்கும் பொதுவான முறையில், அந்தந்த மொழிகளில், டெல்லியிலிருந்து ஒலி பரப்பான போதிலும், சென்னை நிலையத்தில் தமிழிலும் தெலுங்கிலும், நமது ராஜ்யச் செய்திகளுக்கு முக்கியம் கொடுத்துப் 'பிராந்தியச் செய்திகள்' ஒலிபரப்பாவது நமக்குத் தெரியும். இவை தவிர, கிராம நிகழ்ச்சிகளின் மத்தியிலும் கிராமத்து மக்களின் சம்பாஷணையிலேயே செய்திகள் வழங்கப் படுகின்றன.

கிராம மக்களுக்கு என்று தனியான ஒலி பரப்பு இருப்பது போலவே, மாதருக்கு என்றும், குழந்தைகளுக்கு என்றும், தனித் தனியே நிகழ்ச்சிகள் நடக்கின்றன. மாதர் நிகழ்ச்சியில் மாதரும், குழந்தைகள் நிகழ்ச்சியில் குழந்தைகளுமே, முக்கியமாகக் கலந்து கொள்கிறார்கள். ஆனாலும், குழந்தைகளுக்குக் குழந்தைகளேதான் நிகழ்ச்சி நடத்த வேண்டும் என்பதில்லை. இது போலவே மாதருக்கு மாதரேதான் ஒலிபரப்ப வேண்டும் என்பதும் இல்லையல்லவா? பார்க்கப் போனால், சில விஷயங்களைக் குழந்தைகளுக்குப் பெரியவர்கள்தான் எடுத்துச் சொல்ல முடியும். இது போலவே மாதருக்கும் சில விஷயங்களை ஆடவர்கள் எடுத்துச் சொன்னால் விசேஷப் பொருத்தம் உண்டு அல்லவா! இதை யொட்டி இம்மாதிரி விசேஷ நிகழ்ச்சிகளும் அவ்வப்போது நடைபெற்று வருகின்றன.

வானொலி மண்டலம் 4



மாதர் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

இவை யெல்லாம் இருக்கட்டும். நாட்டின் பல பாகங்களிலும் நடக்கும் முக்கியமான விழாக்களையும் பண்டிகைகளையும் வீட்டிலோ பூங்காவிலோ இருந்து கொண்டே கேட்டனுபவிக்க வேண்டாமா? இந்த ஆசையைப் பூர்த்தி செய்கின்றன, அஞ்சல் நிகழ்ச்சிகள். திருவையாறு தியாகராஜ உற்சவம், சென்னை இசை விழா, கம்பன் திருநாள், பாரதி விழா, தமிழ் விழா முதலிய நிகழ்ச்சிகள் ஆண்டு தோறும் விழா — வர்ணனைகளோடு அஞ்சல் செய்யப்பட்டிருக்கின்றன. இவை தவிரச் சுதந்திர தின விழா, சர்வோதய நிகழ்ச்சிகள் முதலியன பிற நிலையங்களின் மூலமும் அஞ்சல் ஆகின்றன.

சரி; முதுமையும் தளர்ச்சியும் காரணமாக ரேடியோ நிலையத்துக்கு வர முடியாத நிலையில் இருக்கும் பெரியார்களின் அறிவுரைகளை நேயர்கள் கேட்க விரும்புவது இயல்பே யல்லவா? புத்தேரி சென்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் கவிதைகளை ஒலிப்பதிவு செய்ததும், அவர்களோடு ஒரு ரேடியோ அறிமுக நிகழ்ச்சி நடத்தி ஒலி பரப்பியதும் இங்கே குறிப்பிடலாம். இது போலவே, ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களின் கம்பராமாயண விளக்கங்கள் பன்னிரண்டை அவர்களின் மறைவுக்குச் சில மாதங்கள் முன்பு திருக் குற்றாலத்தில் உள்ள அவர்கள் இல்லத்தில் ஒலிப்பதிவு செய்து, சென்ற மாதம் வரை அச் சொற்பொழிவுகள் வரிசையாக ஒலிபரப்பாயின.

மாதருக்கும், குழந்தைகளுக்கும் நிகழ்ச்சிகள் அமைந்தது போல, பள்ளி மாணவருக்கு என்றும் தனியான 'கல்வி ஒலிபரப்புக்கள்' நடக்கின்றன. ஆரம்பப் பள்ளி, மத்தியதரப் பள்ளி, உயர் நிலைப் பள்ளி என்று மூன்று பாகுபாடுகளில் இந்த ஒலி பரப்பு நடக்கிறது. இது சம்பந்தமாக ராஜ்யக் கல்வி இலாகாவோடும், பள்ளிக்கூடங்களோடும் ரேடியோ நிர்வாகம் நேரான தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறது.

தொழிலாளர்களுக்கு என்று நடைபெறும் நிகழ்ச்சிகளையும் இங்கே குறிப்பிட வேண்டும். தொழிலாளர்களுக்குத் தேவையான விஷயங்களும், தொழில் முறைகளின் வாழ்க்கைச் சித்திரங்களும், பல அனுபவ உரைகளும் இதில் கேட்கலாம். பல்வேறு தொழில்களில் உள்ள அன்பர்களும் இந் நிகழ்ச்சியில் உற்சாகத்தோடு கலந்து கொள்கிறார்கள்.

ரேடியோவில் ஹிந்தி கற்றுக் கொடுப்பது பலருக்கும் தெரியும். இந்தப் பாடங்கள் நிகழ்ச்சிப் பத்திரிகைகளிலும் படிப்பதற்கென்று பிரசுரமாகின்றன. தேசிய மொழியைக் கற்கும் முயற்சியில் இது நமது மக்களுக்குப் பெருந் துணையாக உதவுகிறது.

தமிழ் நாட்டு முக்கிய விழாக்களில் இப்பொழுதெல்லாம் 'கவி அரங்கம்' ஒரு சிறந்த அம்சமாக நடந்து வருகிறதல்லவா? இலக்கியச் சிறப்புப் பெற்ற தமிழ்க் கவி அரங்குகளுக்குப் புத்துயிர் தந்த பெருமை ரேடியோவுக்கே உண்டு. முதன் முதலாக, 1942-ம் ஆண்டு தமிழ் வருஷப் பிறப்பன்று, முதலாவது கவி அரங்கம் திருச்சி ரேடியோ நிலையத்தில் கூடியது. இதைத் தொடர்ந்து பல கவி அரங்குகள் ரேடியோவிலும் பிற விழாக்களிலும் இப்பொழுது நடைபெற்று வருகின்றன.

ஒலிப்பதிவு என்றதும் இங்கே சொல்ல வேண்டிய விஷயம் ஒன்று. அஞ்சல்களின் போதும், மற்றும் பல சந்தர்ப்பங்களிலும் அகில இந்திய ரேடியோவினால் ஒலிப்பதிவு செய்யப்பட்ட பெரியார்களின் பேச்சுக்களும், பெரிய வித்துவான்களின் பாடல்களும் ஒலித்தட்டுக்களில் பத்திரமாகப் பாதுகாக்கப் பட்டு வருகின்றன. டெல்லி நிலையத்திலிருந்து ஒலி பரப்பான காந்திஜியின் பிரார்த்தனைச் சொற்பொழிவுகள், பின்னர் இசைத் தட்டுக் கம்பெனியாரால் பிரதி செய்யப்பட்டு, இன்று மக்களுக்கு இசைத் தட்டுக்களாகக் கிடைக்கின்றன அல்லவா? இது போலவே, வேறு பல ஒலிப்பதிவுகளும் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற் சில சிரஞ்சீவத்தன்மை வாய்ந்த அரிய இலக்கியச் செல்வங்களாகத் திகழ்கின்றன.

வானொலி மண்டலம்—5.

## ஐந்தொகை

தமிழ் நாட்டு வியாபாரிகள் கணக்கு எடுக்கும் பொழுது ஐந்தொகை என்று பார்த்து, லாபத்தைக் கணிப்பதுண்டு. அது போலத் தமிழ் நாட்டில் அகில இந்திய ரேடியோ நிலையத்தினால் இந்தப் பதினாறு ஆண்டுகளில் என்ன சாதிக்க முடிந்தது என்ற ஐந்தொகைக் கேள்வி நம் மனத்தில் எழுவது இயல்பு. தமிழ் மொழிக்கும், தமிழரின் கலைகளுக்கும் இந்த ஸ்தாபனம் என்ன நன்மையைச் செய்திருக்கிறது, எவ்வகையில்

முன்னேற்றம் அளித் திருக்கிறது என்று நாம் கேட்கக் கூடும்.

தமிழ் நாட்டில், இந்தியாவின் மற்றப் பகுதிகளைப் போலவே, அன்னிய மொழி, அன்னியக் கலைகளின் ஆதிக்கத்தினால், தமிழ் மொழியினிடத்தும் தமிழ்க் கலைகளிடத்தும் பற்று என்பது குறைந்து விட்டது; நீண்ட நாளாகவே குறைந்து விட்டது. எனவே, தமிழ் நாட்டு ரேடியோ நிலையங்கள் என்றாலும், மங்கிய இந்தப் பற்றையும் அபிமானத்தையும் புதுப்பிக்கக் கூடிய சாதனங்கள் இவை என்று எதிர்பார்ப்பது நியாயந்தான்.



சிறுவர் நிகழ்ச்சி நடக்கிறது.

ஆனால் இந்தப் புனர் அமைப்பு வேலையானது நீண்டகால முயற்சியினால் நிறைவேற வேண்டியதாகும். ரேடியோ வந்து பதினாறு வருஷத்தில் இந்திரஜாலத்தைச்செய்துவிடமுடியுமா? ஆனாலும் ஓரளவுஇந்த வகையிலே ரேடியோ சில காரியங்களைச் சாதித்தே இருக்கிறது.

தமிழில் 'நாட்டுப் பாடல்கள்' பல நூற்றுக் கணக்கில் சென்னை திருச்சி இரண்டு நிலையங்களாலும் சேகரிக்கப்பட்டு, அவ்வப்போது ஒலிபரப்பாகி வருகின்றன. இவை தவிரப் பூர்வீகமான இசைப் பண்போடு கூடிய கோபால கிருஷ்ண பாரதியார், முத்துத் தாண்டவர், மாம்பழக் கவிராயர், மாரி முத்தாப் பிள்ளை முதலிய சாகித்ய கர்த்தாக்களின் பாடல்கள் பல இன்று ஒலிபரப்பின் மூலம் முன்னைவிட அதிகமாக வழக்கத்தில் வந்திருக்கின்றன. இன்றையத் தமிழ்சாகித்ய கர்த்தாக்கள் பலரும் தங்கள் கவனங்களை ரேடியோவுக்கு அனுப்பி ஒத்துழைத்து வருகிறார்கள். இவை தவிர, தேவாரம், திவ்யப் பிரபந்தம், திருப்புகழ் முதலிய பண்ணமைந்த பாடல்கள் பலவற்றிற்கு ரேடியோ ஒரு புதிய வேகத்தையே கொடுத் திருக்கிறது. இவற்றோடு பழந் தமிழ் நூல்களிலிருந்து மூவாயிரம் கவிகள் வரை தேர்ந்தெடுத்து அவற்றிற்கு மெட்டமைத்து "சென்டு" போன்ற நிகழ்ச்சிகளிலும், இலக்கிய நாடகங்களிலும் அவை ஒலிபரப்பாகின்றன.

பாரதியாரின் அருமையான பாடல்கள் முன்னைவிட இப்பொழுது நன்கு பரவியிருப்பதற்கு ரேடியோவும் வித்வான்களும் நன்கு ஒத்துழைத்தது ஒரு முக்கிய காரணம்.

தமிழ் இலக்கியம் சம்பந்தமாக மாலை நேரங்களிலும், கல்வி ஒலிபரப்புக்களிலும் அநேக சொற்பொழிவுகள் ஒலிபரப்பாகி அவை நிரந்தரமான புத்தக வடிவில் வந்து வழங்குகின்றன. ரசிகமணி டி. கே. சி., பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை, பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, பேராசிரியர் மு. ராகவ ஐயங்கார், அறிஞர் அண்ணாதுரை போன்ற பலரின் ரேடியோப் பேச்சுக்கள் இன்று நூல் வடிவிலும் நிற்கின்றன.

இவை தவிர ராஜாஜி, கல்கி ஆசிரியர் போன்ற பிரபல ஆசிரியர்கள் எழுதி வெளியிட்ட சிறுகதைகளிற் சில, நாடக உருவில் ஒலிபரப்பாகியிருக்கின்றன. இவற்றிலே பல, ஒலிப் பதிவுகளாகவும் ரேடியோ நிலையத்தில் கவனமாகப் பாதுகாக்கப் பட்டு வருகின்றன.

இந்தியாவில் முதன் முதலாக ஒலி பரப்பு என்ற விஞ்ஞானப் புதுமையைச் செய்து காட்டிய பெருமை சென்னை ரேடியோ கிளப் ஸ்தாபனத்தாருக்கு உரியது. இந்த ஸ்தாபனத்தை நிறுவி 1924-ம் ஆண்டு மே 16உ யன்று முதன் முதலாக இப்படத்தில் காணும் கருவிகள் மூலம் ஒலியை வான மண்டலத்துக்கு அனுப்பிய பெருமை ஸ்ரீ சி. வி. கிருஷ்ணசாமி செட்டி அவர்களைச் சாரும்.



இவை தவிர, கிராமங்களுக்கு என்றும், மாதருக்கு என்றும், குழந்தைகளுக்கு என்றும், மாணவருக்கு என்றும், நடக்கிற நிகழ்ச்சிகளின் மூலம், ரேடியோ இலக்கியம் மேலும் மேலும் வளர்ந்து வருகிறது. விஞ்ஞானத்தைத் தமிழிலே கூறும் முறையும் இவற்றால் முன்னேறி வருகிறது.

சொல்ஆக்கம் என்ற துறையிலும் ரேடி













யோவின் தொண்டைக் குறிப்பிட வேண்டும். வானொலி, நிகழ்ச்சி அஞ்சல், இசைச் சித்திரம், கலையகம், முன்னோட்டம், ஒலி மலர், ஒலிப்பதிவு, ஒலிபரப்பு முதலியன ரேடியோவின் மூலமே ஆட்சிக்கு வந்த சில அழகான சொற்கள்.

இப்படியெல்லாம் 'ஐந்தொகை' எடுத்தாலும், நேயர்கள் அவ்வப்போது தங்கள் கருத்துக்களை நிலையங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமல்லவா? இதற்காகவே ரேடியோத் தபால் பெட்டி நிகழ்ச்சியும், ரேடியோக் கடித ஆராய்ச்சி இலாகாவும் இருக்கின்றன. இவற்றின் ஆராய்ச்சி மூலம் கிடைத்துள்ள விவரப்படி பார்த்தால், குறைகள் அங்கங்கே நேர்ந்தாலும் அவற்றை நிவர்த்திப்பதில் நேயர்களின் கடிதங்களும் ஆலோசனைகளும் பெரிதும் உதவியிருக்கின்றன என்று தெரிகிறது. என்றாலும் நமது மொழிகளுக்கும் நமது கலைகளுக்கும் இன்னும் செய்ய வேண்டிய சேவை எவ்வளவோ இருக்கிறது. ரேடியோவின் எதிர்காலத் திட்டங்கள் அனைத்தும் உருவாகி அவற்றிற்குரிய வசதிகளும் கிடைத்த பிறகே, ரேடியோவின் சேவையைச் சரியானபடி விமர்சனம் செய்யக்கூடிய நாள் ஏற்படும். இந்தியா போன்ற கல்வி அறிவு குறைந்த ஒரு நாட்டில், ரேடியோ மூலம் கல்வி புகட்டும் முயற்சியில் நம்பிக்கையும் ஆர்வமும் பெருக வேண்டியது முதலாவது அவசியமாகும். நமது கிராமங்களில் எல்லாம் மின்சாரம் பரவி, ரேடியோக்களின் எண்ணிக்கையும் அதிகரிக்க வேண்டும். நமது தமிழ் நாட்டுக் குடும்பங்களில், குடும்பத்தோடு ஒரு அங்கமாய் ரேடியோ விளங்க வேண்டும். இந்த விதமாக ரேடியோ என்ற சாதனம் பரவுமானால், அதன் சேவையும், பயனும் பல மடங்கு அதிகரிக்கும். நிகழ்ச்சிகளின் வகையும் தொகையும் விரிவடையும். மக்களும் ஒலிபரப்பு சாதனத்தைப் பெரும் அளவில் உபயோகிக்க நல்வாய்ப்பு கிட்டும்.

இப்படியெல்லாம் பலவிதத்திலும் ரேடியோவின் வளம் பரவக் கூடிய நல்ல நாளை எதிர்பார்ப்போம். அதற்குக் "காற்றெனும் வானவன்" துணை செய்வானாக!

---

1. சென்னை கவர்னர் கனம் ஸ்ரீபிரகாசா அவர்கள் சாந்தோமிலுள்ள அகில இந்திய ரேடியோவின் புதிய ஸ்டுடியோவுக்கு விஜயம் செய்து பார்வையிடுகிறார். கவர்னருக்கு அருகே நிற்பவர் சென்னை நிலையத்தின் நிர்வாகஸ்தர் ஸ்ரீ என். என். மூர்த்தி. 2. அகில இந்திய ரேடியோ ரசிகர்களை மகிழ்வித்து வரும் சங்கீத மணிகள் முசிரி ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர், ஷெனாய் வாத்தியம் ஸ்ரீ பிஸ்மில்லா கான், காரைக்குடி வீணை ஸ்ரீ சாம்பசிவய்யர். 3. நாடகங்களும் கச்சேரிகளும் நடைபெறும் ரேடியோ நிகழ்ச்சி அறை. 4. நாதஸ்வர சக்கரவர்த்தி திருவாவடுதுறை ஸ்ரீ டி. என். ராஜரத்தினம் பிள்ளையவர்கள் நாதஸ்வரக் கச்சேரி செய்கிறார். 5. ரேடியோ மாதத்தையொட்டிச் சென்னை மியூஸியம் தியேட்டரில் நடைபெற்ற விசேஷ நிகழ்ச்சிகளுக்கு ஏராளமான பொது மக்கள் கூடியிருந்தார்கள். 6. பேராசிரியர் கே. சுவாமிநாதன் அவர்கள் தலைமையில் ரேடியோக் கவி அரங்கம் நடைபெற்றது.

# ரேடியோ முன்னேற்றம்!


1 ரேடியோவின் இசையிலே விவசாயி தம் களைப்பை மறக்கலாம்!


② சமையலறையில் ரேடியோவை வைத்துவிட்டால், மனைவியின் சமையல் இன்னும் நன்றாக இருக்கலாம்!


③ இனி, வீட்டுக்கு இரண்டு தொட்டில்கள் வேண்டும். ஒன்று குழந்தைக்கு; மற்றொன்று ரேடியோவுக்கு!


④ மாமியார்களுக்கென்று தனியாக ரேடியோ விநியோகித்தால், அவர்கள் குரலையே அதில் கேட்கலாம்!
“ஆல் இந்தியா ரேடியோ இப்பொழுது “மாமியார்ச் சண்டை” என்ற நாடகம்.


⑤ காரியாலயங்களில் தூங்கும் பழக்கமுள்ளவர்களுக்கு, அவர்கள் விழித்திருக்கப் பல வால்வுள்ள ரேடியோ ஒன்றை இலவசமாக வழங்கலாம்!


⑥ ரேடியோ இசையினாலே, பால்காரர் குவளையில் தண்ணீர் வைத்துக் கொள்ளாமலே பசுக்கள் நிறையப் பால் கொடுக்கலாம்!

# உங்கள் பற்களுக்கு இந்த சிறப்பு மிகுந்த பராமரிப்பு அவசியம்!

## ஆக்டிவ் க்ளோரோபில் மற்றும் கோலினுஸ்' நுரை

. . . இவ்விரண்டும் பற்களின் ஆரோக்கியத்திற்கு சிறந்த மார்க்கம்!

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினுஸ்' உங்கள் பற்களை வெண்மையாக்குவதுமட்டுமின்றி, பல் சிதைவிற்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளுக்கு ஆரோக்கியமூட்டுகிறது. உங்கள் வாய் மணிக்கணக்கில் புதுமணங்கமழ விளங்குகிறது!

அற்புதமான 'கோலினுஸ்'. நுரையில்தான் இதன் ரகசியம் அடங்கியுள்ளது. அது ஆக்டிவ் க்ளோரோபிலை வாயில் பிரஷ் நுழைய முடியாத ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும் எடுத்துச் செல்கிறது.

**உங்கள் பணத்திற்கு மிகுந்த பயன் தருவது**

'கோலினுஸ்' நுரையினால் அதிசயிக்கத் தகுந்த சிக்கனமும் கிடைக்கிறது. ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது. ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினுஸ்' பச்சை டூத்பேஸ்டை வாங்கத்தவறாதீர்கள்.



'கோலினுஸ்' புன்னகையில் ஆரோக்கியம் ததும்புகிறது

உங்கள் குழந்தைகளுக்கு **இலவசம்**

"நகைமுகனும் அவனுடைய பிராணி நண்பர்களும்" என்ற ரஸமான சித்திரக் கதைக்கு இப்பொழுதே எழுதுங்கள்:

நகைமுகன்
இலாகா "50F"
த. பெ. 541
பம்பாய்



Kolynos
Chlorophyll

GK. 216 (9)



# அம்மான் அளித்த செல்வம்

ரா. பாலகிருஷ்ணன்

நான் ரங்கபாஷ்யத்தைத் தேடிச் சென்ற சமயம் அவர் வீட்டில்தான் இருந்தார். இருந்ததோடு மட்டுமில்லை. மனைவியிடம் இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தார். இந்தச் சமயம் பார்த்து வந்தோமே என்று திரும்பிப் போக எண்ணுகையில், "இதோ பார்! சும்மா நீ பாட்டுக்குப் பேசிக் கொண்டே போனால் புண்ணியமில்லை. உன் மகன் என்ன, அறியாத பிள்ளையா! வயசு ஆகவில்லையா! அவன் செய்து விட்டு வந்திருக்கிற காரியத்துக்கு நீ பரிந்து பேச வந்து விட்டாயே!" என்று மனைவியிடம் கூறிக் கொண்டிருந்தவர் தற்செயலாகத் திரும்பவே, நான் வந்திருப்பதைக் கவனித்து விட்டார்.

"வாங்க, ஐயா! சத்தத்தைக் கேட்டுப் பயந்து விட்டீர்களா! ரகசியம் எதுவுமில்லை. இப்படி உட்காருங்கள்" என்று என்னை வரவேற்றார். அவர் முகத்தில் சற்று முன்பிருந்த கடுமை இப்போது இல்லை. நான் உட்கார்ந்து கொண்டதும் அவர் தொடர்ந்து பேசினார்.

"என் மகனைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தேன். சுத்த உதவாக்கரைப் பயல்! பிழைக்கிற வழியே தெரியவில்லையே!" என்றார் பாஷ்யம்.

"மணவாளனைப் பற்றியா பேசுகிறீர்கள்! தங்கமான பையனாச்சே!" என்றேன். பாஷ்யத்தின் முகம் சிணுங்கியது.

"நீங்கள் ஒருவர்தான் அவனை நல்லவனென்று சொல்லுவீர்கள்! என் மைத்துனர் தீனதயாளுவுக்கு இவனை வியாபாரத்திலே பழக்கிவிட ஆசை. அவர் கடையிலேயே இருந்து பழகி வியாபாரத்தின் நெளிவு சுளுவுகளையெல்லாம் தெரிந்து கொண்டு நல்ல பையனாக இருக்க வேண்டுமென்று அவருக்கும் ஆசை. நான் கூட அதைப் பற்றி அவனிடம் சொல்லியிருக்கிறேன். தம் மகளை மணவாளனுக்குக் கட்டிக் கொடுத்து வியாபாரத்தையும் இவன் கையில் ஒப்படைத்து விடலாம் என்று அவருக்கு ரொம்ப நாளாகவே எண்ணம். ஆண் வாரிசு இல்லாத குடும்பம், பாருங்க! தீனதயாளுவின் அந்தரங்கத்தை வெளிப் படையாகக் கூட அவனிடம் சொல்லி விட்டேன். பையன் அவர் மகளைக் கட்டிக் கொள்ளச் சம்மதிக்கிறானேயொழிய, கடைக்குப் போக முடியாது என்று பிடிவாதமாயிருந்து வந்தான்.

"போன வாரம் தீனதயாளு என்னிடம் வந்து, 'நான் நாகூர் வரைக்கும் போக வேண்டும். திரும்பி வர இரண்டு நாள் ஆகும். மணவாளனைக் கடைக்கு அனுப்பி வையுங்கள்' என்று கேட்டுக் கொண்டார். கணக்குப் பிள்ளையை நம்பித் தம் கடையை விட்டு விட்டுப் போவதற்கு மனமில்லாமல்தானே மணவாளனைப் பார்த்துக் கொள்ளச் சொன்னார்! அதிலே என்ன ஐயா, தப்பு! சாவிக்கொத்தை வாங்கிக் கொண்டு கடைக்குப் போனால் வியாபாரத்தைக் கவனித்து விட்டு வரவேண்டியவன்தானே இவன்!" என்றார் ரங்கபாஷ்யம்.

"அப்படியானால் மணவாளன் கடைக்குப் போனானா! என்ன நடந்தது!"

அவர் உள்ளத்தில் கனிந்துகொண்டிருந்த, நெருப்பின் ஜ்வாலை, அவர் முகத்தில் படர்ந்தது. "போனான், ஐயா! போனான்! ஏன் அனுப்பினேம் இவனை என்று ஆகிவிட்டது இப்போது! கடையிலே இவன் கவனிக்க வேண்டிய காரியம் என்ன! சாமான் எதுவும் திருட்டுப் போகாமலிருக்கிறதா; விற்ற சாமானுக்குக் கல்லாப்

பெட்டியிலே காசு வந்து சேருகிறதா, கையிருப் பும் கணக்குப் புஸ்தகமும் சரியா யிருக்கிறதா— இதெல்லாந்தானே சார், இவனுக்கு முக்கியம்! அதை விட்டு விட்டு, தராசு சரியில்லே, படிக்கல் சரியில்லே என்று புகார் செய்வதா இவன் வேலே! கேளுங்கள், ஐயா! தீனதயாளுவின் கடையி லிருந்த தராசு சரியில்லேயாம். படி, மரக்கால், ஆழாக்கு, எடைக் கற்கள் எல்லாம் ஒவ்வொன்றி லும் இரண்டு இரண்டு இருந்தனவாம். விற் பனைக்கு ஒரு செட்; யாராவது அதிகாரிகள் வந்து கேட்டால் காண்பிப்பதற்கு ஒரு 'செட்' என்று இருந்ததாம். பிந்தியது சரியான எடை. அன்றாட விற்பனைக்கு உபயோகத்திலிருந்த கல் எல்லாம் எடை குறைவாம்! எந்தக் கடையிலே இல்லே இப்படி! வியாபாரமென்றால் நாலுந் தான் இருக்கும். முப்பது வருஷங்களாக வியா பாரம் செய்து அநுபவப் பட்டவர்களாயிற்றே, நாங்கள்! எங்களுக்குத் தெரியாததா! எதையோ புதிசாகக் கண்டு பிடித்து விட்டவன் போல், வீசைக் கல்லே எடுத்துத் தராசுத் தட்டை நசுக்கி எறிந்து விட்டானும்! முத்திரையில்லாத படிக்கல்லேயெல்லாம் எடுத்துக் குப்பைத் தொட் டியில் போட்டு விட்டானும்! வியாபாரத்தைக் கவனிக்க இவன் கடைக்குப் போனுனு, அல்லது உலகத்தைச் சீர்திருத்தப் போனுனு! தீனதயாளு என்னைப் பார்த்து, 'உன் மகனுலே என் மானமே போச்சு! மரியாதையே போச்சு!' என்று பட படப்பாகப் பேசினுர். அவர் முகத்தை நிமிர்ந்து பார்க்கவே முடியாமல் திரும்பி வந்தேன்" என்று நிறுத்தினுர் ரங்க பாஷ்யம்.

அவர் கூறியது நியாயம் என்று நான் ஒப்புக் கொண்டால்தான் அவரிடம் எதுவும் பேச முடியும். மணவாளன் செய்த காரியம் தவ றில்லே என்பதுதான் என் அபிப் பிராயம். அதை அப்படியே அவரி டம் சொல்ல முடியாத நிலேமையில் ஒரு கணம் யோசனே செய்தேன்.

"அப்புறம் என்ன நடந்தது!" என்று அவரிடம் பொதுவாகக் கேட்டு வைத்தேன்.

"நடக்கிறது என்ன! என்னுல் முடிந்த வரையில் அவரைச் சமா தானப் படுத்தி விட்டுத் திரும்பி வந்தேன். வீடு தேடி வர விருந்த லட்சுமியைவிரட்டி விட்டு வந்திருக்கிறுன், இந் தப் பாவிப்பயல்! உறவு விட்டுப் போகாமலிருந் தால் அதுவே பெரிய காரியம்! ஒருகால் இவனே அவரிடம் போய் மன்னிப்புக் கேட்டுக் கொண் டால் அவர் மனசு மாறுமோ, என்னவோ!" என்று சொல்லும்போது ரங்க பாஷ்யத்துக்குக் கண்ணீர் வராததுதான் குறை.



"மணவாளன் என்ன சொல்லுகிறுன்!" என் றேன். "ஒரே பிடிவாதமா யிருக்கிறுன். அவன் செய்ய வேண்டியதைத்தான் செய்தானும். தவறு எதுவும் செய்யவில்லேயாம்! எவ்வளவு சொத்து! கிடைக்கக் கூடிய சம்பந்தமா! உறவுக்காரன் என்பதைத் தவிர நமக்கும் அவர்களுக்கும் அந் தஸ்தைப் பொறுத்தவரையில் ஏணி வைத்தால் கூட எட்டாதே! கடை மட்டும் அரை 'லகாரம்' பெறும். பத்தாயிரத்துக்கு மேல் வெளியில் நிலுவை இருக்கும். ஆடுதுறைக்கருகில் நாலு வேலி நன்செய். வீரசோழன் பாய்ச்சல். எப்படிப் பட்ட நிலம்! எல்லாம் கை நழுவிப் போய்விடும் போலிருக்கிறதே, சார்!" என்று ரங்க பாஷ்யம் கூறும்போது அவருடைய ஏக்கம் எனக்குத் தெற் றென விளங்கியது.

"கவலேப் படாதீர்கள். கடவுள் இருக்கிறுர்!" என்று சொல்லி விட்டு எழுந்தேன்.

"யார் இருந்து என்ன சார்! பணம் போச்சே! இனிமேல் கடவுளேக் கட்டிக்கொண்டு அழுவதைத் தவிர வேறு வழி!" என்றுர் ரங்கபாஷ்யம், சோகம் நிறைந்த குரலில். அவர் வியாபாரி. அவர் மனப்போக்கு வேறு எப்படியிருக்கும்!

"மணவாளனுக்குத் தீனதயாளுவின் மகளேக் கட்டிக் கொள்ள இஷ்டந்தானே! அதில் சந்தேக மில்லேயே!" என்றேன்.

"சந்தேகமேயில்லே. தினம் ஒரு" தடவை அவ ளேப் பார்க்கா விட்டால் பயலுக்குத் தூக்கமே வராது! இனிமேல்தான் அந்த வீட்டில் அடி யெடுத்து வைக்கவே இவனுக்கு யோக்கியதை இல்லேயே!" என்றுர் ரங்கபாஷ்யம்.

"அந்தப் பெண்ணுக்கும் இவனிடம்......!" என்று நான் முடிப்பதற்குள் அவரே புரிந்து கொண்டு பதில் கூறினுர்.

"சீதைதானே! மணவாளன் என்றுல் அவளுக்கு உயிர். சொப்பனத்திலே கூட வேறு யாரையும் நினேக்காது, அது. இனிமேல் எப்படியோ!" என்று நீண்ட பெருமூச்சு விட்டார் ரங்கபாஷ்யம். நான் கிளம்பி விட்டேன்.

*    *    *

**எ**ண்ணெய்க் கடை ரங்கபாஷ்யம் என்றுல் கும்பகோணத்தில் பிரசித்தம். அநாவசியமான வம்பு, தும்புகளுக்குப் போக மாட்டார். தம் கடை உண்டு, தாமுண்டு என்று இருப்பார். கடை தவிர எண்ணெய் வித்துக்களே அரைக்கும் ஒரு மில்லும் அவருக்குச் சொந்தமாயிருந்தது. இது தவிர டவுனுக்குள் மூன்று வீடுகள். அவர் வீடு ஒன்றில்தான் நான் வெகு நாட்களாகக் குடி யிருந்து வருகிறேன். பல வருடங்களாக நெருங்கிய பழக்கம். மணவாளனுக்கும் என்னிடம் வெகுவாக மதிப்பு உண்டு.

ரங்கபாஷ்யத்துக்கு இரண்டு பிள்ளேகள். மூத்தவன் மணவா ளன்; பி. ஏ. தேறிப் பட்டம் பெற் றிருந்தான். இரண்டாவது பையன் உயர்பள்ளியில் படித்து வந்தான்.

ரங்கபாஷ்யத்தின் தமக்கையைக் கொடுத்திருந்த இடம் வேற்று இடமில்லே. அவர் மனைவியி ன் உடன் பிறந்த சகோதரனுக்குத்

தான் கொடுத்திருந்தது. அப்போது அந்தக் குடும்பம் சுமாராகத்தான் இருந்தது. ஆனால் காலடைவில் அதிர்ஷ்ட தேவதையின் கண்வீச்சுக்குப் பாத்திரமாகி விட்டார், அவர் மைத்துனர் தீனதயாளு. சோலையப்பன் தெருக்கோடியிலே சில வருஷங்களுக்கு முன்பு ஒரு சாதாரண மளிகைக்கடை முதலாளியா யிருந்த தீனதயாளு இன்று ஒரு லட்சாதிபதி! எக்ஸ்டென்ஷனில் ஒரு பங்களா; கார் முதலிய வசதிகளுடன் பிரபலஸ்தராக விளங்கி வருகிறார். சென்ற வருடம் நடந்த நகராட்சித் தேர்தலில் பத்தாயிரம் ரூபாய் செலவில், கௌன்ஸிலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார், தீனதயாளு. இவ்வளவு பாக்கியங்களுமிருந்தும் அவருக்கு ஆண் குழந்தையில்லை! சீதைதான் அவருடைய ஒரே மகள். அவள் விருப்பத்தைப் பொறுத்தமட்டில் அவர் விவேகத்துடன் தான் நடந்து கொண்டார். தமது மைத்துனரின் மகன் மணவாளன் நன்றாகப் படித்திருக்கிறான், நல்ல குணசாலி என்றுணர்ந்த தீனதயாளு அவனுக்கே தம் பெண்ணைக் கொடுத்து விடுவதாகப் பல வருடங்களுக்கு முன்பே தீர்மானித்திருந்தார். இது ரங்கபாஷ்யத்தின் குடும்பத்துக்கும் தெரியும். செல்வமெல்லாம் வெளியில் போய் விடாமல் குடும்பத்துக்குள்ளேயே இருக்கும் அல்லவா! சீதைக்கும் மணவாளனுக்குங்கூட இந்த ஏற்பாட்டில் பூரண சம்மதம். ரங்கபாஷ்யத்தின் மனைவிக்கு எப்போதும் இதே நினைவு. லட்ச ரூபாய் சொத்துடன் வரும் முறைப் பெண், அதுவும் லட்சணமான பெண் என்றால் அவளுடைய மகிழ்ச்சிக்குக் கேட்க வேண்டுமா!

அப்படிப்பட்ட சம்பந்தம் தன் பையனின் அவசர புத்தியின், சீர்திருத்த மனப்பான்மையின் விளைவாக ஒரே நிமிஷத்தில் தவிடு பொடியாகி விட்டதே என்றுதான் ரங்கபாஷ்யம் ஏங்கினார். ஆனால் மணவாளன் சிறிதும் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. நியாயம், தர்மம் என்ற வார்த்தைகளுக்கு அர்த்தமுண்டு என்றால் அந்த உணர்ச்சிகள் மணவாளனிடம் பூரணமாக இருந்தபடியால்தான் என்பது கருத்து. தீனதயாளுவின் வியாபார ரகசியம் கடல் போன்றது. அதன் ஒரு நிலை அப்போதுதான் மணவாளனுக்கு விளங்கியது. அதைச் சீர்திருத்துவதில் முனைந்து விட்டான் மணவாளன். ஊர், உலகத்தை யெல்லாம் சீர்திருத்த விரும்புகிறவர்கள் அந்தச் சீர்திருத்தத்தைத் தன் வீட்டிலிருந்து தானே தொடங்க வேண்டும்! தீனதயாளுவின் செல்வாக்குக்கு அஞ்சி அவருடைய வாடிக்கைக்காரர்கள் செய்யத் துணியாத காரியத்தை, மணவாளன் ஒரு கொடியில் செய்து முடித்து விட்டான். அதன் விளைவுதான் அவ்விரு குடும்பங்களுக்குள் ஏற்பட்ட மனஸ்தாபம்!

மணவாளனின் மனப்போக்கை எண்ணி வியந்தவாறு வீடு திரும்புகையில் அவனே வழியில் எதிர்ப்பட்டான்.

"என்னப்பா! தீனதயாளுவின் கடையிலே கலாட்டா செய்து விட்டாயா! எப்போது அவரிடம் மன்னிப்புக் கேட்கப் போகிறாய்!" என்றேன்.

"அப்பாவைப் பார்த்தீர்களா நீங்கள்! விஷயம் பூராவும் உங்களுக்குத் தெரியுமில்லையா! நான் எந்தக் குற்றத்துக்காக அவரிடம் போய் மன்னிப்புக் கேட்க வேண்டும்!" என்றான் மணவாளன்.

"அதையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்தால் உனக்குத்தான் நஷ்டம், தம்பி! லட்ச ரூபாய் சொத்தும் அழகான பெண்ணும் உன்னைத் தேடி வரும் போது வேண்டாமென்று உதறித் தள்ளுகிறாயே! சீதையிடம் உனக்கு ஆசை குன்றி விட்டதா!"



மாமனார்:—மாப்பிள்ளை ஸார், ரேடியோ வாங்கித் தந்தாக வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறீர்களே, இது நன்றா யிருக்கிறதா? இப்போ மூனுதானே நிறையச் செலவு செய்து உங்கள் கல்யாணத்தை நடத்தினேன்!

மாப்பிள்ளை:—அது சரிதான், மாமா! நீங்கள் ரேடியோ மாசத்தில் அல்லவா கல்யாணம் நடத்தி யிருக்கிறீர்கள்! அதனால்தான் ரேடியோ வேண்டுமென்று கேட்டேன்!

---

"சீதையிடம் ஆசையில்லாமலில்லை, சார்! ஆனால் பதினெட்டுப் பலத்தை இருபதாக நிறுத்துக் கொள்ளையடிப்பதற்கு நான் உடந்தையாக இருக்க விரும்பவில்லை. இதே ரீதியில் இவ்வளவு வருடங்கள் சம்பாதித்துச் சேர்த்து வைத்தது போதுமே! இவ்வளவையும் அநுபவிக்க ஒரு பிள்ளைகூட இல்லையே!" என்றான் மணவாளன்.

"அப்படியானால் உன் அத்தை மகளை இழக்கத் தயார்தானா நீ!" என்றேன்.

அதற்கு அவன், "நீங்களாவது என் கருத்தைப் புரிந்து கொள்ளுவீர்கள் என்று எதிர்பார்த்தேன். கோர்ட்டுக்குப் போய்ச் சந்தி சிரிக்க வேண்டிய எவ்வளவோ வழக்குகளைச் சௌஜன்யமாகத் தீர்த்து வைத்து நல்ல பெயர் வாங்கி யிருக்கிறீர்கள். இந்தச் சின்ன விஷயத்தில் ஏனோ நீங்களும் என் செய்கை தவறு என்று நினைக்கிறீர்கள். மனச் சாட்சிக்கு விரோதமாக நான் நடந்து கொள்வேனென்று சீதை கூட எதிர் பார்க்க மாட்டாளே! விதிப்படி நடக்கட்டும், சார்! அதற்காக நான் அக்கிரமத்துக்கு உடந்தையாக இருக்கப் போவதில்லை" என்று தீர்மானமாகக் கூறி விட்டான்.

அவன் மன உறுதி எனக்குப் புலனாயிற்று. மனதார ஒரு நாளும் அவன் தவறு செய்ய மாட்டான், என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். "தம்பி! உன் தகப்பனாரின் அபிப்பிராயத்தைத்தான் கூறினேன். இருக்கிற நிலைமையும் அதுதான். மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்று நான் ஏதோ உன்னை வற்புறுத்துவதாக நீ எண்ணிக் கொள்ள வேண்டாம். கஷ்டப்பட்டுச் சம்பாதித்த சொத்து கைநழுவிப் போகிறதே என்பதுதான் உன் தகப்பனாரின் கவலை!" என்று என் அபிப்பிராயத்தையும் வெளியிட்டேன்.

"சந்தோஷம், சார்! நீங்கள் கண்டிப்பாக என் செய்கையை ஆமோதிப்பீர்கள் என்று நான் எதிர்

பார்த்தது வீண் போகவில்லை. நியாயம் உங்கள் கண்களுக்குத் தப்பாது என்பது எனக்கு நிச்சயம் தெரியும். வருகிறேன், சார்!" என்று விடை பெற்றுக் கொண்டான், மணவாளன்.

இரண்டு தினங்களுக்குப் பின் தீனதயாளு நாயுடுவைக் கடைத் தெருவில் சந்தித்த போது அவராகவே வலுவில் மேற்படி சம்பவத்தைப் பற்றிக் கூறினார். தம் பெண்ணுக்கு வேறிடத்தில் மாப்பிள்ளை தேடுவதாகவும் கூறினார்.

"அவன்தான் சிறுபிள்ளைத் தனமாக நடந்து கொண்டு விட்டான் என்பதற்காக நீங்களும் அதைப் பாராட்டலாமா! முறைப் பையன் மணவாளன். நெடுநாளைய நெருங்கிய உறவு. அவசரப்பட்டுக் கோபத்தில் ஒரு முடிவுக்கு வரக் கூடாது. யோசித்துச் செய்யுங்கள்" என்றேன்.

"வக்கீல் ஐயா! என்னையே அயோக்கியன் என்று நினைப்பவனுக்கு என் பெண்ணைக் கொடுக்க வேண்டுமென்று சொல்லுகிறீர்களா! சீதைக்கு வரன் கிடைப்பது தானா கஷ்டம்! விட்டுத் தள்ளுங்கள் அவன் பேச்சை!" என்றார் தீனதயாளு. இது விஷயமாக ஏற்கனவேயே அவர் ஒரு முடிவுக்கு வந்து விட்டார் என்பது அவருடைய வார்த்தைகளில் தொனித்த உறுதியின் மூலம் நன்கு வெளிப்பட்டது.

"என் கட்சிக்காரர் என்ற முறையில் உங்களுக்கு நான் ஆலோசனை கூறவில்லை. இது உங்கள் குடும்ப விஷயம். நான் தலையிடுவதும் சரியில்லை. நெடு நாளையப் பழக்கத்தால் ஏற்பட்ட உரிமையுடன்தான் கூறினேன். அநுசிதம் என்று பட்டால் விட்டு விடுங்கள்" என்றேன்.

"நீங்கள் தவறாக எண்ணிக் கொள்ளக் கூடாது. என் மனசு அவ்வளவு தூரம் புண்பட்டுப் போயிருக்கிறது. வேறு வித்தியாசமாக நினைக்காதீர்கள்" என்று கூறினார் தீனதயாளு. பதட்டத்தில் ஏதோ பேசி விட்டோமென்பதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவது போலிருந்தது, அவர் சமாதானம்.

* * *

இது நடந்து சரியாக ஒரு வாரம் கழித்துப் பிற்பகல் மூன்று மணிக்கு ஒரு நாள் தீனதயாளுவின் கார் என் வீட்டு வாசலில் வந்து நின்றது. தீனதயாளுவே இறங்கி வந்தார். அவரை வரவேற்று உட்காரச்செய்தேன். மலர்ந்தமுகத்துடன் அவர் கூறினார்: "அடுத்த வெள்ளிக் கிழமை குழந்தைக்குக் கல்யாணம் ஆடுதுறையில்தான் நடக்கவிருக்கிறது. தாங்கள் அவசியம் வரவேண்டும்" என்று கேட்டுக் கொண்டதுடன் ஒரு கல்யாண அழைப்பிதழையும் என் மேஜையின் மீது வைத்து விட்டுக் கிளம்பினார். புழுதியைக் கிளப்பிக் கொண்டு ஓடி மறைந்தது அவர் கார். அந்தப் புழுதிப் படலம் கூட சில வினாடிகளில் மறைந்து விட்டது. என் மனம் மணவாளன், சீதை இருவருக்காகவும் இரங்கியது.

ரங்கபாஷ்யம் வந்திருப்பதாக அறிவித்தான், பையன். என் சிந்தனை கலைந்தது.

"வக்கீல் ஐயா! நான் எதிர்பார்த்தபடியே ஆகிவிட்டது, பார்த்தீர்களா! என்னைக் கூட மரியாதைக்கு ஒரு வார்த்தை கேட்கவில்லை, அந்த மனுஷன்! வேறிடத்தில் கல்யாணத்தை நிச்சயம் செய்துவிட்டு வந்து என்னிடம் பத்திரிகையைக் கொடுக்கிறார், ஐயா! என்ன திமிர் பார்த்தீர்களா! அவன்தான் சிறுசு. ஏதோ செய்துவிட்டானென்றால் அதற்காக இவரும் இப்படியா செய்வது!" என்று அங்கலாய்ப்புடன் கூறினார், ரங்கபாஷ்யம்.

"மணவாளன் என்ன சொல்லுகிறான்?" என்று வினவினேன்.

"ஓரேயடியாக ஏங்கிப் போய்விட்டான், சீதை தனக்கில்லையே என்ற வருத்தத்தில். ஆனால், இப்போது கூடத் தான் செய்தது சரிதான் என்றே சாதிக்கிறான்" என்றார் ரங்கபாஷ்யம்.

"சொத்து கைவிட்டுப் போகிறதே என்ற வருத்தந்தானே உங்களுக்கு! மனத்தை அலட்டிக் கொள்ளுவதில் பயனில்லை. சொத்தைப் பற்றிக் கவலையில்லை உங்கள் பையனுக்கு. பணத்துக்கு ஆசைப்பட்டு, நேர்மையைக் கைவிடத் தயாராயில்லை, மணவாளன். பூர்வ ஜன்ம பலன், நீங்கள் அவனைப் பிள்ளையாக அடைந்தது. எல்லாம் நல்லதிற்குத்தான். கவலைப்படாதீர்கள்" என்றேன். என் பதில் அவருக்கு எவ்வளவு தூரம் திருப்தியளித்தது என்பது எனக்குத் தெரியாது. அதைப் பற்றி நான் கவலைப்படவுமில்லை.

* * *

அன்று புதன் கிழமை. இரவு ஒன்பது மணிக்குமேலிருக்கும். வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. தீனதயாளுவின் வேலைக்காரன் குடல் தெறிக்க ஓடிவந்தான். "முதலாளி உங்களை உடனே கூட்டிவரச் சொன்னாரு" என்றான்.

"இந்த வேளையிலா! என்ன அவசரம் அப்படி! காலையில் வந்தால் போதாதா!" என்றேன்.

"ரொம்ப முக்கியமான சமாசாரமாம். கையோடு அழைத்துக் கொண்டுவரச் சொன்னார்" என்றான். நான் அவர் காரிலேயே ஏறிக்கொண்டு கிளம்பினேன். தீனதயாளுவின் வீட்டுக்குப் போகாமல், கார் டாக்டர் ராமராவின் வீட்டில் நின்றது. வாசலிலேயே என்னை எதிர்பார்த்துத் தயாராய் நின்றார், தீனதயாளு.

"என்ன விசேஷம்?" என்றேன்.

"விஷயம் முற்றிப் போய் விட்டது. அசட்டுப் பெண்! என்ன காரியம் செய்து விட்டாள், தெரியுமா! இந்தக் கல்யாணம் நிச்சயமானது முதலே மணவாளனைத் தவிர வேறு யாரையும் தான் கல்யாணம் செய்துகொள்ள முடியாது என்று அடம்பிடித்து வந்தாள். 'சிறுபெண்; அப்படித்தான் பேசுவாள்; கல்யாணம் ஆகிவிட்டால் சரியாகி விடும்' என்று அலட்சியமாய் இருந்து விட்டேன். மோசம் போய்விட இருந்தேன், சார்! இன்று எட்டுமணி முதலே அவளை வீட்டில் காணோமாம். நான் வெளியில் போய்விட்டு வந்த போது வீடே திமிலோகப்பட்டது. 'சீதையைக் காணோமே! மோசம் செய்து விட்டாள்' என்று அலறிக் கொண்டு என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தாள் என் மனைவி. 'மணவாளனைத் தவிர வேறு எனக்கு மணாளனே இல்லை. உங்கள் கௌரவம்தான் உங்களுக்குப் பெரிது என்று நினைத்தீர்கள். எனக்கு மணவாளன்தான் வேண்டும். அவரை அடைய முடியாமல் உயிர் வாழ்வதைவிட இறப்பதேமேல் என்று துணிந்து விட்டேன். என்னைத் தேட வேண்டாம்' என்று எழுதி வைத்துவிட்டுக் காவேரியில் போய் விழுந்து விட்டாள். பாலத்தின் மீது போய்க் கொண்டிருந்த இருவர் தற்செயலாக அவள் ஆற்றில் விழுந்ததைக் கவனித்துக் கரையேற்றி இங்கே டாக்டர் வீட்டில் கொண்டு வந்து சேர்த்து விட்டார்கள். டாக்டர் ஆள் அனுப்பியதும் நான் ஓடோடி வந்தேன்" என்றார்.

"இப்போது அவள் நிலைமை எப்படியிருக்கிறது! கல்யாணத்துக்கு இன்னும் இரண்டு நாட்கள் தானே இருக்கிறது!" என்றேன்.

"கல்யாணம் கிடக்கிறது, சார்! குழந்தை உயிர் பிழைத்தால் போதும். இந்தக் கல்யாணம் நடக்குமென்று தோன்றவில்லை எனக்கு" என்றார்.

"சிகிச்சைக்குத்தான் டாக்டர் இருக்கிறாரே! நான் என்ன செய்யப் போகிறேன்!" என்று கூறிய வண்ணம் உள்ளே நுழைந்தேன். சீதையைப் பார்ப்பதற்குத் தீனதயாளுவும் என்னைத் தொடர்ந்து வந்தார்.

"உங்களால்தான் குழந்தை பிழைத்தெழ முடியும். மணவாளனைத்தான் பார்க்க வேண்டுமென்று ஆசைப்படுகிறாள் அவள். என்னை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. மணவாளனைக் கூட்டி வர ஆள் அனுப்பினேன். 'நானே வேண்டாதவனாகி விட்டேன்; என் மகன் உறவு மாத்திரம் தேவையோ!' என்று மகனை அனுப்ப மறுத்து விட்டார், மைத்துனர்" என்றார்.

உயரமான ஒரு மேஜையின்மீது சீதை துவண்டு கிடந்தாள். நினைவிழந்த நிலையிலிருந்தாள். டாக்டரை விசாரித்தேன். அவர் சொன்னார்: "சிகிச்சையின் மூலம் செய்ய வேண்டியதைச் செய்தாகி விட்டது. மணவாளன், மணவாளன் என்று பிதற்றிய வண்ணமிருக்கிறாள், இவள். ஏதோ ஒரு நம்பிக்கையில் ஊசலாடுகிறது இவள் உயிர். அதைக் காப்பாற்ற வேண்டுமானால் அவள் நினைப்பதெல்லாம் நடந்தேற வேண்டும்." இவ்விதம் டாக்டர் கூறியதும் தீனதயாளு என் முகத்தைப் பார்த்தார். அவர் தோற்றம் பரிதாபமாயிருந்தது.

"நான் போய் மணவாளனை அழைத்துவர முயல்கிறேன். ஆனால் ஒரு விஷயம். இந்தக் கல்யாணத்தை நீங்கள் நிறுத்திவிட வேண்டும். மணவாளனுக்கே உங்கள் பெண்ணைக் கொடுப்பதாக நீங்கள் அவனுக்கு உறுதி கூற வேண்டும். அந்த நம்பிக்கையால்தான் சீதை பிழைக்க முடியும். என்ன சொல்லுகிறீர்கள்!" என்றேன்.

"நான் சொல்ல என்னவிருக்கிறது! எனக்கு இருப்பதெல்லாம் இந்தக் குழந்தை ஒன்றுதான். எப்படியாவது நீங்கள்தான் இதையும் முடித்து வைக்க வேண்டும்" என்று குழைந்தார், தீனதயாளு. நான் உடனே ரங்கபாஷ்யத்தின் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனேன்.

* * *

வெள்ளிக்கிழமை அதே முகூர்த்தத்தில் சிரஞ்சீவி மணவாளன் சௌபாக்கியவதி சீதையின் கழுத்தில் தாலியைக் கட்டினான். அடுத்த கணம் சீதையின் கையைப் பற்றி அழைத்து வந்து என்னைத்தான் முதலில் வணங்கினான், மணவாளன். "தெய்வம் உங்கள் உருவத்தில் வந்ததா அல்லது நீங்களேதான் தெய்வத்தின் உருவமா என்பது



சென்னை பாரத சங்கீத வித்யாலயத்தின் ஏழாவது ஆண்டு விழா அக்டோபர் மாதம் 5-ந் தேதி சௌந்தர்யமகாலில் நடைபெற்றது. விழாவுக்குக் கனம் மாணிக்கவேலு நாயகர் தலைமை வகித்துச் சிறப்பித்தார். விழாவை ஒட்டி வித்யாலய மாணவிகளால் நடிக்கப்பட்ட ராமதாஸ் நாடகமும் மாணவிகள் சாந்தாலக்ஷ்மி, ஜி. ரங்கநாயகி ஆகியவர்களின் பரத நாட்டியமும் நடைபெற்றன. வித்யாலயத்தின் சேவையையும் அதன் பிரின்ஸ்பால் ஸ்ரீ ஆர். எஸ். சீனிவாசனின் சலியாத உழைப்பையும் கனம் மந்திரி பாராட்டிப் பேசினார்.

தெரியவில்லை, சார்! வக்கீல் தொழிலில் நுழைந்து விட்டவர் நீங்கள்! அப்பாவைப் போலவோ அல்லது என் அம்மானைப் போலவோ பணம் சம்பாதிக்கும் வழியே தெரியவில்லையே உங்களுக்கு! இன்னொரு வக்கீலாயிருந்தால் இந்தமாதிரி சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு, ஒரு பங்களாவே கட்டியிருப்பார்! ஆனால் நீங்களோ, ஒரு கல்யாணத்தை நிறுத்தி அதே முகூர்த்தத்தில் வேறொரு கல்யாணத்தை நடத்தி விட்டீர்கள்!" என்றான் மணவாளன்.

"அதற்குள் எல்லாவற்றையும் உன் அம்மான் அளித்த செல்வம் உன்னிடம் ஒப்புவித்து விட்டானா!" என்றேன். அவன் இலேசாகச் சிரித்தான். மெதுவாக எழுந்து வாசற்பக்கம் வந்தேன்.

உள்ளே நடந்த சம்பாஷணை தெளிவாக என் காதில் விழுந்தது. "என்னடா, அசட்டுப் பட்டம் கட்டுகிறாய் வக்கீலுக்கு!" என்றார் ரங்கபாஷ்யம்.

"அவரா அப்பா, அசடு! மற்றவர்களைத்தான் அசடாக்கி விட்டார் அவர். மாமா சீதைக்கு வேறு இடத்தில் கல்யாணம் செய்து விட்டு வந்து பத்திரிகை அச்சடித்தாரே, அது நடந்த மறு நாளே நம் வக்கீல் ஐயா அந்தக் கல்யாணம் நடக்காதபடி ஏற்பாடு செய்து விட்டார். சீதையிடம் தனிமையில் பேசி, அவளைக் கடிதம் எழுதி விட்டில் வைத்து விட்டுக் காவேரியில் விழச் செய்ததும் அவர் ஏற்பாடுதான். தன் மனைவியையே சீதைக்குத் துணையாகத் தன் காரில் காவேரிக்கு அனுப்பி வைத்ததுடன் பாலக்கரையிலும் முன்னேற்பாடாக இரண்டு ஆட்களை நிறுத்தி வைத்திருக்கிறார். டாக்டரிடமும் முன் எச்சரிக்கையாக விஷயத்தைக் கூறியிருக்கிறார். இவ்வளவும் செய்து விட்டு ஒன்றுமே தெரியாதவர் போல் இருக்கிறார்" என்று கூறினான் மணவாளன் கணீரென்ற குரலில்.

சீதை 'களுக்' கென்று சிரித்த குரல் கேட்டது. தீனதயாளுவின் முகத்தில் அசடு வழிந்ததைத் தான் என்னால் காண முடியாமல் போய் விட்டது. நான் தான் வாசலில் வந்து விட்டேனே!

# "மனிதன்" வாழ்க!

தமிழர் பண்பாட்டின் உயிர்நிலை எந்த ஒரு பாடல் வரியிலாவது இருக்கிறது என்றால், அது "யாதும் ஊரே; யாவரும் கேளிர்" என்னும் கவிதை வரிதான். இந்த அமுத வாக்கை இலட்சியமாக அமைத்துக் கொண்டு தோன்றி யிருக்கும் "மனிதன்" மாதப் பத்திரிகைக்கு வரவேற்பு அளித்து வாழ்த்துக் கூறுகிறோம்.

"மனிதன் எதனால் உயர்கிறான்!" என்ற கேள்வியைத் தலைப்பாகக் கொண்டு இப் பத்திரிகையில் வெளியான கட்டுரை ஒன்று நேயர்களின் கவனத்தில் இருக்கலாம்.

"மனிதன் உழைப்பினால் உயர்கிறான்; ஊக்கத்தினால் உயர்கிறான்; ஒழுக்கத்தினால் உயர்கிறான்; அன்பினால் உயர்கிறான்; அறிவினால் உயர்கிறான்..." என்றெல்லாம் பதிலும் தரப்பட்டிருக்கிறது.

மனிதன் உயர்வதற்கு உரிய இந்த நற்பண்புகளை யெல்லாம் "மனிதன்" பத்திரிகை பெற்று வெளி வந்திருக்கிறது என்பதைப் பார்க்க மிக்க மகிழ்ச்சி உண்டாகிறது.

உழைப்பினாலும் ஊக்கத்தினாலும் உயர்ந்தவரான ஸ்ரீ வி. கோவிந்தன் ("விந்தன்") இந்தப் பத்திரிகையின் ஆசிரியர் ஆவர்.

ஆசிரியருடைய பண்புகள் பத்திரிகையிலும் மலர்ந்து திகழ்கின்றன.

ஏதேனும் ஒரு துறையில் ஒருவர் புதிய பாதை வகுத்து அதில் வெற்றி கண்டால், அதேபாதையில் இன்னும் பலர் போக முயற்சிப்பது உலக இயல்பு. அது தமிழ் நாட்டிலும் இருக்கத்தானே செய்யும்!

ஆனால் ஆசிரியர் "விந்தன்" ஆரம்பித்து நடத்தும் இந்தப் பத்திரிகை பழைய பாதை எதையும் பின்பற்றாமல் தனக்கென்று புதிய பாதை ஒன்றை வகுத்துக் கொண்டிருக்கிறது.

கட்டுரைகள், கதைகள், குறிப்புக்கள், படங்கள் முதலிய எல்லா அம்சங்களிலும் தனிச் சிறப்புக் காணப்படுகிறது.

முக்கியமாக, "இதோ ஒரு சுயமரியாதைக் காரர்" என்னும் தலைப்பை உடைய பகுதி பத்திரிகை உலகத்துக்கே ஒரு புதுமை என்று சொல்லும்படி இருக்கிறது.

இளம் பிராயத்தில் ஒரு காலை இழந்து விட்ட ஒரு மனிதர் வாழ்க்கையில் நிராசை அடைந்து விடாமலும், பிறரை அண்டிப் பிழைக்காமலும், சுயமாகத் தொழில் செய்து சுயமரியாதையை நிலை நாட்டிக் கொண்டு வாழ்க்கை நடத்தி வருகிறார். இந்த உண்மை வாழ்க்கைக் குறிப்பு மிக்க உயர் தரமான பத்திரிகை அம்சமாகும். மனித குலத்தை எப்படி உயர்த்தலாம் என்பதற்கு மிகச் சிறந்த உதாரணமாகும்.

"மனிதன்" இரண்டாவது இதழின் அட்டையை ஒரு கண்ணாடிக்காரர் கையில் காகிதக் கட்டுடன் அலங்கரிக்கிறார். இவரைப் பார்த்ததும், ஆசாமி யார் என்பது இனந் தெரிந்து விடுகிறது.

அன்னிய அதிகார வர்க்க சர்க்காரா யிருந்தாலும் சரி, சுதந்திர ஜனநாயக சர்க்காரா யிருந்தாலும் சரி, முதலாளி சர்க்காரா யிருந்தாலும் சரி, பொது உடைமை சர்க்காரா யிருந்தாலும், எந்த ஆட்சி முறையிலும் அரசாங்க இயந்திரத்தை இயங்கச் செய்யும் அடிப்படை உத்தியோகஸ்தர் இவர்; அதாவது ஆபீஸ் குமாஸ்தா!

உள்ளே ஒரு ஹாஸ்யத் துணுக்கில் இரண்டு ஆபீஸ் குமாஸ்தாக்கள் ஒரு பெரிய கட்டிடத்தைப் பார்த்துப் பேசிக் கொள்கிறார்கள். "இவ்வளவு பெரிய கட்டிடம் கட்டுவதற்கு எவ்வளவு ஆபீஸ் குமாஸ்தாக்களின் எலும்பை நொறுக்கி அஸ்திவாரம் போட்டிருக்க வேண்டும்!" என்று வியப்படைகிறார்கள்.

இதிலிருந்து பத்திரிகையின் கொள்கையும் போக்கும் எப்படி யிருக்கும் என்று ஒருவாறு ஊகிக்கலாம். உழைப்பாளிகளின் கட்சியை வன்மையாக எடுத்துச் சொல்வதற்கு "மனிதன்" ஒரு சிறந்த சாதனமாக விளங்குவான் என்று எதிர்பார்க்கலாம்.

இரண்டாவது இதழில் டாக்டர் மு. வரதராசனார், திரு நாரண துரைக்கண்ணன், நடாதூர் தேசிகன் முதலிய பிரபல எழுத்தாளர்களின் சொல்லோவியங்களும் வெளியாகி யிருக்கின்றன.

பாரதியாரின் அமுத மொழிகள் சிலவற்றைப் பொறுக்கி ஆங்காங்கு சேர்த்திருப்பது பத்திரிகைக்கு ஜீவ களையை அளிக்கிறது.

"மனிதன்" நீடூழி வாழ்ந்து தமிழ் மக்களுக்குத் தொண்டு செய்து சிறப்புற வேண்டுமென்று விரும்புகிறோம்.

விலாசம்:—"மனிதன்" காரியாலயம், கெ. 11, கந்தப்பிள்ளை தெரு, சேத்துப்பட்டு, சென்னை—30; வருட சந்தா: ரூ. 3—0—0.

V. 9245

# மோட்டார் கார் ஓட்டும் செலவைக் குறைக்க நீங்கள் உபயோகிக்க வேண்டியது

## மூன்று விதங்களில் பணி செய்யும் மோபிலாயில்

**1** மோட்டாரின் உறுப்புகள் விரையமாகாதபடி காப்பாற்றுகிறது. எப்படியென்றால் அது எல்லா வித சீதோஷ்ண நிலைக்கும் அனுசரித்து சரியான படி எண்ணெயைப் படியவைக்கிறது.

**2** பழுதுருவண்ணம் இஞ்சினைக் காப்பாற்றுகிறது. இஞ்சினில் கெடுதலை விளைவிக்கும் கார்பன் படிமானம் ஏற்படாதபடி உதவுகிறது.

**3** பெட்ரோலை சிக்கனமாய்ச் செலவழிக்க உதவுகிறது. உலோகங்களினுலான உறுப்புகளை அமிலங்கள் சாப்பிட்டு இஞ்சினில் சக்திக்குறைவு ஏற்படக் காரணமின்றி செய்கிறது.




# மோபிலாயில்




எங்கெல்லாம் பறக்கும் செங்குதிரையின் அடையாளத்தை பார்க்கிறீர்களோ அங்கு அசல் மூன்று விதங்களில் பணி செய்யும் மோபிலாயில் கிடைக்கும்.

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

# சக்கரவர்த்தித் திருமகள்

## 31. உயிர் நீத்தான்!

"அன்று அதற்குப் பிறகு நடந்ததையும் சொல்லுகிறேன், கேள்!" என்றான் தசரதன்.

"மகா பாவ காரியத்தைச் செய்து விட்டு ரிஷி குமாரர் உயிர் நீத்ததையும் பார்த்து விட்டு இனி என்ன செய்யலாம் என்று யோசித்தேன். சரி, இவர் சொன்னபடி செய்வதே கடமையும் நன்மையும் என்று தீர்மானித்தேன். அவருடைய குடத்தை எடுத்துச் சுத்தமான தண்ணீர் மொண்டு கொண்டு அவர் சொன்ன ஒற்றையடிப்பாதை வழியாகச் சென்று ஆசிரமத்தை யடைந்தேன். அங்கே வயது முதிர்ந்த தாயும் தந்தையும் தங்கள் மகனுடைய வருகைக்காகக் காத்திருப்பதைக் கண்டேன். சிறகிழந்த இரண்டு பட்சிகளைப் போல் சுருங்கிப் போன தேகங்களோடு இருந்த இடத்திலிருந்து நகர முடியாதவர்களாக ஆசிரமத்தில் உட்கார்ந்திருந்தார்கள். இருவரும் கண் பார்வை யிழந்தவர்கள். ஏன் தண்ணீர் கொண்டு வரப் போனவன் இத்தனை நேரமாகியும் இன்னும் வரவில்லை என்று தங்கள் மகனைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். 'ஐயோ! இவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பவனை நான் கொன்று விட்டு இவர்களை அநாதைகளாக்கி விட்டேனே!' என்று பயமும் துயரமும் அடைந்து மெள்ள நடந்து போனேன். என் காலடிச் சத்தத்தைக் கேட்டதும் தந்தையானவர், 'அப்பனே, ஏன் இவ்வளவு நேரம் செய்தாய்? சீக்கிரம் தாகத்துக்குத் தா. ஏன் இவ்வளவு நேரம்? ஆற்றில் விளையாடிக் கொண்டு காலம் கழித்தாயா? உன் தாயார் தாகத்துக்குத் தவிக்கிறாள். அப்பனே! ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? நானாவது உன் தாயாராவது ஏதாகிலும் குற்றம் செய்தோமா? நீ எங்கள் பேரில் கோபங் கொள்ளலாகாது. நீ ஒழுக்கம் குறையாத தரும சீலன். நீதான் எங்களுக்குக் கதி என்பதை நீ அறிவாய். பார்வை யிழந்த எங்களுக்கு நீதான் கண்ணாவாய். மகனே, எங்கள் இருவருடைய உயிரும் நீயேதான்! ஏன் பேசாமலிருக்கிறாய்? நான் இப்படிச் சொல்லுகிறேன் என்று கோபமா?' இப்படி அந்தப் பல்லில்லாத கிழவர் குழ குழவென்று பேசினார். நானோ சாப பயத்தால் நடுங்கினேன். மெள்ள தைரியம் செய்து கொண்டு பேச ஆரம்பித்தேன்:

'சுவாமி, நான் தசரதன்; உங்கள் ஆணைக்குக் கட்டுப்பட்ட க்ஷத்திரியன். உங்களுடைய குமாரன் அல்ல. என் பூர்வ ஜன்ம பாவத்தின் பயனாக யாவராலும் வெறுக்கத் தக்க பெரும் பாவச் செயலைச் செய்து விட்டு உங்கள் முன் வணங்கி நிற்கிறேன். பகவானே! நான் யானையோ புலியோ வேறு காட்டு மிருகம் ஏதேனும் வரும் என்று நதிக்கரையில் இரவில் வேட்டையாடப் போனவன், குடத்தில் தண்ணீர் மொள்ளும் சப்தத்தைக் கேட்டு, காட்டு யானை தண்ணீர் குடிக்கிறது என்று எண்ணி, இருட்டில் பாணத்தை எய்து உங்கள் அருமைக் குமாரனைத் தெரியாமல் கொன்று விட்

**ராஜாஜி**

டேன். நான் எய்த சரம் மார்பில் பாய்ந்து கீழே விழுந்து ரத்த வெள்ளத்தில் புரண்டு கொண்டிருந்ததை நான் போய்ப் பார்த்ததும், ஐயோ, என் அறியாமையால் நடந்து விட்டதே என்று துயரமும் திகிலும் அடைந்து இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்தேன். உங்களுடைய குமாரர் வேண்டுகோளின்படி அவருடைய வேதனை தீருவதற்காக மார்பில் பாய்ந்த அம்பை நான் இழுத்து எடுத்து விட்டேன். உங்கள் குமாரர் மேலுலகம் சென்று விட்டார். நான் அஞ்ஞானத்தில் செய்து விட்ட பாதகத்தைச் சொன்னேன். இனி உங்கள் திருவுள்ளம்எப்படியோ அப்படி.. அடியேன் சாபத்துக்குக் காத்திருக்கிறேன்' என்றேன்.

"நான் சொன்ன பயங்கர விருத்தாந்தத்தைக் கேட்ட கிழவர்கள் பேச்சிழந்தனர். கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று. பிறகு கிழவர் சொன்னார்: 'அரசனே, நீ செய்தது மிகப் பெரிய பாவம், ஆயினும் தெரியாமல் செய்தாய். நீயே வந்து சொல்லவும் செய்தாய். ஆதலினால் பிழைத்தாய். எங்களிருவரையும் அங்கே கொண்டுபோய்ச் சேர்ப்பாயாக. மகனைத் தொட்டுத் தடவி தருமராஜன் வசம் போய்ச் சேர அனுப்பி விடுவோம்' என்றார்.

"அப்படியே அவர்கள் இருவரையும் தூக்கிக் கொண்டு ஆற்றங்கரையில் ரிஷி குமாரர் விழுந்து கிடக்கும் இடத்துக்குச் சென்றேன். உயிர் நீத்த உடலைத் தடவி, அழுது, அவர்கள் தங்கள் துக்கத்தைத் தீர்த்துக் கொண்டு பிறகு குமாரனை ஆசிர்வதித்து, தகனக் கிரியைகள் செய்து முடித்தார்கள்.

"'எங்களுக்கு நீ விளைவித்த துக்கம் அரசனே நீயும் அனுபவிப்பாய். புத்திர சோகத்தால் நீயும் மாள்வாய்' என்று சொல்லி விட்டு இருவரும் சிதையிலேறித் தீக்கிரையாகிச் சுவர்க்கம் சென்றார்கள். நான் அன்று செய்த பெரும் பாவம் இன்று என்னைப் பற்றிக் கொண்டது."

"பத்தியமற்ற உணவை யுண்ட நோயாளியின் வியாதி அதிகரித்து அவனைக் கொல்லுவது போல அந்தப் பாவம் இப்போது என்னைக் கொல்லப் போகிறது. அந்தக் கண் தெரியாத கிழவர் தம் துக்கத்தைப் பொறுக்க மாட்டாமல் சொன்ன சொல் உண்மையாயிற்று. என்னாலேயே என் அருமை மகன் வனத்துக்குத் துரத்தப்பட்டு அந்தத் துக்கத்தில் இன்று யமாலயம் செல்லப் போகிறேன்.

"எதிர்பாராதபடியும் சுபாவத்துக்கு விரோதமாகவும் நிகழ்ச்சிகள் நிகழ்வதற்கு வேறு காரணமில்லை. நான் ஏன் இப்படி மோசம் போக வேண்டும்? நான் ராமனைக் காட்டுக்குப் போ என்றாலும் அவன் ஏன் என் வார்த்தையைச் சிரமேற்கொண்டு வனம் போக வேண்டும்? கௌசல்யே, பார்வையை இழந்தேன். நீ என் கண்களுக்குத் தெரியவில்லை. மரணம் நெருங்குகிறது. அருகில் வா. எல்லாம் முடிந்தது. யமதூதர்கள் புறப்படு என்கிறார்கள். ராமன் வருவானா? அவனைப் பார்த்துவிட்டு உயிர் நீப்பேனா! மார்பு அடைக்கிறது. இனி ஏதும் மிச்சம் இல்லை. விளக்கில் எண்ணெய் வற்றிப் போயிற்று, கௌசல்யே! சுமித்ரே!"



என்று சொல்லி, வர வரப் பேச்சு அடங்கிப் போய் அன்றிரவே உயிர் நீத்தான் அரசன்.

**வா**ல்மீகி முனிவர் ராமாயணத்தை ஆரம்பிக்கும்போது 'எல்லா வேதங்களையும் சாஸ்திரங்களையும் ஓதியவன், தீர்க்க தரிசி, தேஜஸ் அடைந்தவன், யுத்தங்களில் வெற்றி பெற்ற வீரன், யாகங்கள் செய்து முடித்தவன், தருமத்தில் ஈடுபட்டவன், ரிஷியைப் போன்றவன், மூவுலகங்களிலும் புகழ் பெற்றவன், பகைவர்களை யொழித்தவன், பல அரசர்களின் நட்பை அடைந்தவன், புலன்களை யடக்கி யாளும் திறமை கொண்டவன், பெருஞ் செல்வம் திரட்டியதில் இந்திரன் குபேரன் இவர்களுக்குச் சமானமானவன், ராஜ்ய பரிபாலனத்தில் மனுவைப் போன்றவன்' என்று சொல்லுகிறார், தசரதனைப் பற்றி. அந்தத் தசரதன் புத்திர சோகத்தால் கர்ம விதிப்படி தாங்க முடியாத துக்கத்தை யடைந்து உயிர் நீத்தான்.

**அ**டிக்கடி மூர்ச்சை போவதும் பிறகு பிரக்ஞை வருவதுமாக இருந்த தசரதன் உயிர் நீத்த விஷயம் பக்கத்திலிருந்த கௌசல்யை, சுமித்திரைக்குக் கூடத் தெரியவில்லை. அவர்களும் சோகத்தாலும் கண் விழித்த களைப்பாலும் அந்தப்புரத்தில் ஒரு மூலையில் அயர்ந்து கிடந்தார்கள். பொழுது விடியும் காலத்தில் சூத மாகத காயகர்கள் அந்தப்புர வாயிலில் வழக்கம் போல் கூடி அவரவர்களுடைய கிரமப்படி அரசனை யெழுப்ப சுப்பிரபாதம் பாடவும் வாத்தியம் வாசிக்கவும் செய்தார்கள். அரசன் எழுந்திருந்ததாகக் காண வில்லை. அரசன் எழுந்ததும் அவன் தேவைகளைக் கவனிக்க வேண்டிய பணியாட்கள் வெகு நேரம் காத்திருந்து விட்டு, 'இன்று அரசன் ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லை?' என்று சந்தேகத்துடன் உள்ளே பிரவேசித்தார்கள். அரசன் உயிரற்றுக் கிடப்பதைக் கண்டார்கள்.

பிறகு அரண்மனை முழுதும் விஷயம் தெரிந்து ஒரே துயரக் கடலாயிற்று. மூவுலகும் புகழ் பெற்ற தசரத மகாராஜாவின் மனைவிமார் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு துக்கம்தாங்காமல் அநாதைகள் போல் அழுதார்கள்.

## சொல்லும் செயலும்!



அழகி வீட்டில்
இருக்கும் பொழுதும்
அழகிய வாயிலையே
அணிகிருள்.

பிரிண்ட் செய்த, சாயம்
ஏற்றிய, மெர்ஸிரைஸ்
செய்த

கடாவ்
வாயில்



சிறந்ததையே வாங்
குங்கள். சுதேசியே
வாங்குங்கள்

தி கடாவ் மகன்ஜி ஸ்பின்னிங் அண்டு வீவிங் கம்பெனி லிமிடெட், லிம்: பைகுல்லா, பம்பாய்.

SISTA'S-KMS-104-TAMIL



# தங்க மாம்பழம்

ராஜி

## 5. தப்பி விட்டார்கள்!

சாமியாரின் குரலிலிருந்த அன்பு உமாவையும் பிரபாகரனையும் அவரிடம் பேசத் துணிவு கொள்ளச் செய்தது.

"ஐயா, உங்களைப் பார்த்தால் மிகவும் நல்லவர் போல் தோன்றுகிறது" என்றான் பிரபாகரன்.

"பார்வையை மாத்திரம் பார்த்து ஏமாந்து விடாதே. நீங்கள் இருவரும் வெள்ளைக் குதிரையைப் பார்த்து அழகாக இருக்கிறது என்று அதன் மீது ஏறி ஏமாந்து போக வில்லையா?" என்று கேட்டார் பெரியவர்.

இதைக் கேட்டதும் பிரபாகரனுக்கும் உமாவுக்கும் அதிசயமாய்ப் போய்விட்டது. 'நாம் வெள்ளைக் குதிரையில் ஏறி ஆகாசப் பிரயாணம் செய்தது இவருக்கு எப்படித் தெரிந்தது?' என்று இருவரும் அதிசயப் பட்டார்கள். உடனே சாமியாரிடம் அவர்களுக்கு மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டன.

பிறகு பிரபாகரன், தானும் உமாவும் கிழவியினிடமிருந்து தப்பியது முதல் தங்கள் வரலாற்றைச் சொன்னான்.

"ஏன், உங்களைக் கூண்டில் அடைக்க வேண்டும்? துஷ்ட மிருகங்களைப் போல நீங்களும் ஏதாவது விஷமங்கள் செய்தீர்களா?" என்று கேட்டார் சாமியார்.

"ஐயோ! அப்படி ஒன்றுமில்லை. நாங்கள் ஏன் இப்படி அடைக்கப்பட்டிருக்கிறோம் என்பது எங்களுக்கே விளங்கவில்லை."

"யார் உங்களை இந்தக் கூண்டில் அடைத்து விட்டுச் சென்றார்கள்?"

"அரண்மனைச் சேவகர்கள்."

"அவர்கள் அரண்மனைச் சேவகர்கள் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அவர்கள் அணிந்து கொண்டிருந்த உடுப்புகளினால்தான்."

"சரி அது போகட்டும். யாரோ கிழவியின் வீட்டில் இருந்து வந்தீர்கள் என்று சொன்னீர்களே, அந்தக் கிழவி உங்களை அன்புடன் நடத்தினாளா?"

சாமியார் இப்படிக் கேட்டதும் உமா உற்சாகத்துடன் சொல்ல ஆரம்பித்தாள்: "அந்தக் கிழவி ரொம்பவும் நல்லவள். தினந்தோறும் எனக்கு அவள் தான் தலையைப் பின்னி விடுவாள். வேளைக்கு வேளை எங்களுக்கு வேண்டிய உடை, சிற்றுண்டி, உணவு முதலியவைகளைக் கொடுத்து உதவி வந்தாள். எங்களை அன்புடன் நடத்தி வந்தாள். ஆனால் எங்களை மாத்திரம் அந்த இருட்டு அறையிலிருந்து வெளியே வராமல் பாதுகாத்து வந்தாள். அதுதான் எங்களுக்குப் பிடிக்கவில்லை. அதுவுமல்லாமல் கிழவி எங்களுடன் ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை. நாங்கள் ஏதாவது கேட்டாலும் பதில் சொல்லுவது கிடையாது. நாங்கள் இரண்டு மூன்று முறை அவள் பதில் சொல்லட்டும் என்று ஏதாவது கேள்வியைக் கேட்டால் எங்களைக் கோபத்துடன் விழித்துப் பார்ப்பாள். அப்பப்பா, அப்



பொழுது அவனைப் பார்த்தால் எங்களுக்குப் பயமாக இருக்கும்!'' என்றான் உமா.

"அப்படியா? நீங்கள் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள். நான் சென்று வருகிறேன்'' என்று திரும்பினார் துறவி.

"என்ன ஐயா, உங்களைக் கண்டவுடன் எங்களுக்கு ஏதாவது உதவி செய்வீர்கள் என்று நினைத்தோம். பேசாமல் போகிறீர்களே!'' என்றான் பிரபாகரன்.

"நான் என்ன அப்பா, உங்களுக்கு உதவி செய்வது? திக்கற்றவர்களுக்குத் தெய்வம்தான் துணை. கடவுளை நம்புங்கள். அவர் எப்பொழுதும் கைவிட மாட்டார்!''

"ஐயா, நீங்கள்தான் எங்களுக்கு இந்தச் சமயத்தில் கடவுளைப் போலத் தோற்றமளிக்கிறீர்கள். எங்களை எப்படியாவது இந்தக் கூண்டிலிருந்து வெளியேற உதவி செய்யுங்கள்'' என்றான் பிரபாகரன்.

"என்னால் உங்களை எப்படி விடுவிக்க முடியும்? குழந்தைகளே! அது முடியாது. அந்த மூன்று பேர்களும் யாரோ? உங்களை எதற்கு அடைத்து வைத்திருக்கிறார்களோ?'' என்றார் சாமியார்.

"நீங்கள் இப்படிச் சொல்லுவது சரியல்ல. ஆபத்தில் சிக்கிக் கொண்டிருக்கும் எங்களுக்கு நீங்கள் ஏதாவது உதவி செய்துவிட்டுத் தான் போகவேண்டும்'' என்று கெஞ்சினான் உமா.

"உமா, நீ மிகவும் புத்திசாலி. உனக்கு என்ன உதவி வேண்டும்?'' என்றார் துறவி.

அதற்கு உமா, "உங்களுக்கு மந்திரங்கள் ஏதாவது தெரியுமா?'' என்றான்.

"அப்படி ஒன்றும் பிரமாதமாகத் தெரியாது. ஏதோ கொஞ்சம் தெரியும்.''

"அப்படியானால் இந்தக் கூண்டை மாயமாக மறைந்து போகச் செய்யுங்களேன்!'' என்றான் உமா.

"மாயமாக மறைந்து போகச் செய்யும் மந்திர சக்தி என்னிடம் கிடையாது. அல்லது ஏதாவது வஸ்துவைப் புதியதாக உண்டாக்கவும் என்னால் முடியாது. ஆனால் இந்தக் கூண்டை ஓரளவுக்கு மாற்றி அமைக்க முடியும்.''

"அப்படி என்றால் யானையாகவோ, குதிரையாகவோ, பெரிய மாடாகவோ மாற்றுங்களேன்!'' என்றான் உமா.

"அதென்ன பிரயோசனம்? அப்படி மாற்றினால் நீங்களும் அதன் வயிற்றுக்குள் அல்லவா இருந்து விடுவீர்கள்?''

"ஆமாம், ஆமாம்! நீங்கள் சொல்லுவது உண்மைதான். ஏன் நீங்கள் இந்த இரும்புக் கூண்டை மரத்தினால் செய்யப்பட்ட கூண்டாக மாற்றக் கூடாது? நான் மரக் கம்பிகளை உடைத்து விட்டு வெளியே வந்து விடுவேன்!'' என்றான் பிரபாகரன்.

"இதோ பார்த்தாயா, இந்த இரும்புக் கம்பிகளின் கனத்தை? இதை மரமாக மாற்றினாலும் நீ எளிதில் உடைக்க முடியாது. உடைப்பதற்குத் தகுந்த ஆயுதங்களும் இல்லை. போதிய அவகாசமும் இல்லை. அதற்குள் உங்களை இங்கு அடைத்த மூன்று வீரர்களும் வந்து விட்டால் உங்களுடைய கதி அதோகதிதான்'' என்றார் சாமியார்.

பிறகு அங்கு நின்றபடியே சற்று யோசனை செய்தார். சில நிமிஷங்களுக்கெல்லாம் உமாவைப் பார்த்து, "உமா, உனக்குக் கற்கண்டு பிடிக்குமா?'' என்றார்.

கற்கண்டு என்ற வார்த்தையைக் கேட்ட உமா தானிருக்கும் நிலைமையையும் மறந்து "கற்கண்டு ரொம்பத் தித்திக்குமே! எனக்கு ரொம்பப் பிடிக்கும்; கொடுங்கள். எனக்கு ரொம்பத் தாகமாக இருக்கிறது. குடிக்கக் கொஞ்சம் தண்ணீரும் கொடுங்களேன்!'' என்றான்.



"என்னிடத்தில் சிறிய கூஜா இருக்கிறது. ஆனால் அதில் தண்ணீர் இல்லை. நான் குடித்து விட்டேன். இப்பொழுதே நான் சென்று கற்கண்டும், தண்ணீருடன் கூஜாவையும் கொண்டு வந்து தருகிறேன்'' என்று சொல்லி விட்டுத் துறவி அந்த இரும்புக் கூண்டை ஒரு முறை தடவினார். 'வருகிறேன். ஈசன் விட்ட வழி' என்று சொல்லி விட்டுக் கூஜாவை எடுத்துக் கொண்டு அவ்விடத்தை விட்டு அகன்றார். துறவி போய்ச் சற்று நேரம் ஆயிற்று.

உமாவும் பிரபாகரனும் அவர் திரும்பி வருகிறாரா என்று அவர் போன திசையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். போனவர் திரும்பி வருவதாகத் தெரியவில்லை. அலுத்துப் போய் இருவரும் தூங்குவதற்கு ஆரம்பித்தார்கள்.

அன்று இரவு அரசன் வீரவர்மன் தூங்கவே இல்லை. எப்பொழுது பொழுது விடியும் என்று கடிகாரத்தைப் பார்த்த வண்ணமாக இருந்தான். காலை மணி ஐந்து அடித்தது. 'என்ன வீரப்பதேவனைக் காணவில்லையே' என்று வாசற் பக்கம் எட்டிப் பார்த்தான். அப்பொழுது வீரப்ப தேவன் மாத்திரம் வழக்கப்படி குதிரையைப் பிரதான வாயிலுக்கு முன்பாகக் கட்டிவிட்டு அரண்மனைக்குள் வெகு அவசரமாக நுழைந்து கொண்டிருந்தான்.

"வா, வீரப்பா!" என்று மாடியிலிருந்தபடியே அரசன் வீரப்ப தேவனை வரவேற்றான். மாடிக்கு வந்த வீரப்ப தேவன், "அரசே! மன்னிக்கவேண்டும். சற்று நாமதமாகி விட்டது. வரும் வழியிலே குதிரை எதையோ கண்டு மிரண்டு விட்டதுபோல மேலே செல்லாமல் துள்ளிக் குதித்தது. நான் என்ன முயன்றும் பயனில்லை. நான் குதிரையிலிருந்து கீழே விழுந்ததுதான் மிச்சம்" என்று கூறிவிட்டு, முழங்காலிலும், முழங்கையிலும் பட்டிருந்த இலேசான காயங்களை அரசனிடம் காண்பித்தான்.

"பிறகு எப்படி, இங்கு வந்தாய்?" என்றான் வீரவர்மன்.

"குதிரையைக் கையில் பிடித்துக் கொண்டே நடந்து வந்தேன்! அவர்களை எங்கு அழைத்துச் சென்று போக வேண்டுமென்பதை நிச்சயப்படுத்தி விட்டீர்களா?" என்று கேட்டான் வீரப்பதேவன்.

"நான் பெரிய திட்டம்தான் போட்டிருந்தேன் அந்தத் திட்டத்தைப் பூர்த்தி செய்ய இன்று முடியாது. இன்னும் அரைமணி நேரத்தில் பொழுது விடிந்து விடும். வழியில் ஏற்பட்ட அசந்தர்ப்பங்களினால் என்னால் சீக்கிரம் வரமுடியாமல் போயிற்று. 'நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்' என்ற பழமொழி சரியாகப் போய் விட்டது. இருக்கட்டும்; இருட்டு பிரிவதற்குள் அவர்களைக் கூண்டினின்று அப்புறப்படுத்த ஏற்பாடு செய்."

"அப்புறப்படுத்தி அவர்களை எங்கே அழைத்துப் போவது?" என்று கேட்டான் வீரப்ப தேவன்.

"அவசரப் படாதே! சொல்லுகிறேன், கேள். இந்தத் தடவை அவர்களை ஜாக்கிரதையாக நடத்த வேண்டும்."

"மகாராஜா, உங்கள் உத்தரவுப்படியே நடந்து கொள்ளுகிறேன்!" என்றான் வீரப்பதேவன் பணிவுடன்.

## மாப்பிள்ளைக் கிராப்பு !



"நாம் இதுவரையிலும் பிரபாகரனையும் உமாவையும் கொடூரமாக நடத்தி வந்திருக்கிறோம். அதனால்தான் அவர்கள் நம்மிடமிருந்து தப்பித்துக் கொள்ளவே முயற்சி செய்திருக்கிறார்கள். இம்முறை அவர்கள் ஏமாற்றம் அடையும்படி அவர்களிடம் மிகவும் அன்பாகவும் மரியாதையாகவும் நடந்து கொள்ள வேண்டும். நம்முடைய பெரிய தோப்புக்கு அவர்கள் இருவரையும் அழைத்துக் கொண்டுபோய் நான் தங்குவதற்காக அமைக்கப்பட்டிருக்கும் கட்டிடத்தில் இருக்கச் செய்ய வேண்டும். கூண்டினின்று அவர்கள் வெளியே வந்தவுடன் உன்னுடன் கூட இருக்கும் இரண்டு சேவகர்களை மாத்திரம் அவர்களுடன் அனுப்பி அவர்கள் எங்கும் தப்பித்துக் கொள்ளாதபடி இன்று இரவு வரையில் பார்த்துக் கொள்ளவேண்டும். இன்று இரவு பன்னிரண்டு மணிக்குள் இங்கிருந்து ஆயிரம் மைலுக்கு அப்பால் அனுப்பி விடலாம். அதைப் பற்றிப் பிறகு சொல்லுகிறேன். நீ மாத்திரம் அவர்களுடன் செல்லாமல் குன்றிமணித் தோட்டத்திலிருந்து நேராக இங்கு வந்து விடு. நீ அங்கு போனால் சந்தேகத்துக்கு இடமுண்டாகும். அவர்களை மாத்திரம் மிகவும் மரியாதையாக நடத்தும்படி முதலிலேயே ஏற்பாடு செய்துவிடு. காவல்காரக் கரியனிடம்வேண்டிய பணம் அனுப்பிக் கொடுத்து அவர்களை நல்ல மரியாதையுடன் வரவேற்க ஏற்பாடு செய்துவிடு. அவர்களுக்கு அளிக்கும் மரியாதையிலிருந்து தோப்பில் இருப்பவர்களுக்கும் அக்கம் பக்கத்திலுள்ளவர்களுக்கும் அவ்விருவரும் நமக்கு விரோதிகள் என்று தெரிந்து கொள்ளாதபடி செய்யவேண்டும். தெரிகிறதா? நீ மாத்திரம் தோப்புக்கு இரவு போனால் போதும்" என்று கூறினான் அரசன்.

"சரி அரசே, உங்கள் உத்தரவுப்படியே நடந்து கொள்ளுகிறேன்" என்று சொல்லிவிட்டு வீரப்ப தேவன் மாடியிலிருந்து வெகு வேகமாகக் கீழே இறங்கினான். வீரப்ப தேவன் வாசற் பக்கம் சென்று தன் குதிரையை அவிழ்க்கப் போனான். அந்தச் சமயத்தில் குதிரைகள் வேகமாக வருவது போல் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தான் வீரப்பதேவன். அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. குன்றிமணித் தோட்டத்துக்கு அனுப்பப்பட்ட இரண்டு குதிரை வீரர்கள் வெகு வேகமாக அரண்மனையை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். வாசற் பக்கம் வீரப்ப தேவனைப் பார்த்தவுடன் அவனுக்கு அருகில் 'டக்' என்று குதிரையை நிறுத்தினார்கள்.

பெருமூச்சு விட்டுக் கொண்டே "அண்ணே, அண்ணே!" என்று கூப்பிட்டார்கள். உடனே வீரப்ப தேவன் "ஏன் திரும்பி வந்து விட்டீர்கள்? அவர்கள் தப்பி விட்டார்களா?" என்று பயந்த வண்ணமாகக் கேட்டான். அப்பொழுது அவன் உடம்பு படபடவென்று துடித்தது.

"ஆமாம். தப்பித்துக் கொண்டு விட்டார்கள்!" என்றார்கள் அவ்வீரர்களிருவரும். அந்த இரண்டு குதிரை வீரர்களுக்கும் சற்று நேரம் மூச்சுப் பேச்சு இல்லை.

"அவர்கள் எப்படித் தப்பித்துக் கொண்டு விட்டார்கள்?" என்று வியப்புடன் கேட்டான் வீரப்பதேவன்.

"கூண்டின் கம்பிகளை உடைத்துக் கொண்டுதான்" என்றார்கள்.

"என்ன ஆச்சரியம்! என்னால் இதை நம்பவே முடியவில்லை!" என்று அவமானத்தினால் தலையைக் குனிந்து கொண்டான் வீரப்ப தேவன். பிறகு, "நீங்கள் சற்று இங்கு இருங்கள். நான் அரசனிடம் போய் விஷயத்தைச் சொல்லி விட்டு வருகிறேன்" என்று கூறி விட்டு அவன் அரண்மனைக்குள் சென்றான். (தொடரும்)



# ஐந்நூறு ரூபாய்





ஹர்ஷன்

'கும்' மென்று மணக்கும் கதம்பத்துடனும் கனத்த டிபன் பொட்டலத்துடனும் உள்ளே புகுந்த கணவனை வியப்புடன் பார்த்தாள் கமலா.

"இருபத்தொன்பதாம் தேதியன்று உங்களுக்கு அப்படி என்ன சந்தோஷம் வந்து விட்டது? காலையில் காரியாலயத்துக்குப் போகும் போது பெட்டியைக் குடைந்து காலணா, அரையணாக்களாக எட்டணாவைச் சேர்த்துக் கொண்டு தொங்கிய முகத்துடன் போனவருக்கு ஆறு மணி நேரத்துக்குள் என்ன வந்து விட்டது?" என்றாள் கமலா.

சேகர் கண்களைச் சிமிட்டினான். "என்ன வந்திருக்கும்? சொல்லேன், பார்ப்போம்!"

"உங்கள் காரியாலயத்தில் வருஷாந்தரக் கணக்கு முடிந்திருக்கும். இரண்டு நாள் முன்னதாகவே சம்பளம் கொடுத்திருப்பார்கள். அப்படித்தானே?"

கல கல வென்று சிரித்தான் சேகர். "அதெல்லாம் ஒன்றுமில்லை. உன் அப்பா விட மிருந்து வந்திருக்கிறது!" என்றான்.

"கார்த்திகைப் பணம் அனுப்பி யிருப்பார். அதைச் செலவழித்து விட்டு நிற்கிறீர்களாக்கும்... உங்களுக்குத்தான் பணம் இருந்தால் பொறுக்காதே!"

"அடி அசடே! உன் அப்பா என் பழைய பாக்கி ஐந்நூறு ரூபாயை அனுப்பி யிருக்கிறார். இந்த வருஷம் நிலத்தில் நல்ல விளைச்சலாம். இத்தனை நாள் அனுப்ப முடியாததற்கு வருத்தப்பட்டுக் கொண்டு எழுதி இருக்கிறார்..." என்றான்.

துள்ளிக் குதித்த கமலா, "அப்படியானால் நாளைக்குச் சாமிப் பத்தரை வரச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

"உன் அப்பா சவரனாக அனுப்பவில்லை, பணமாகத்தான் அனுப்பி யிருக்கிறார். அதனால் தட்டானின் தயவு வேண்டாம்... கவலைப்படாதே!" என்றான் சேகர்.

கமலாவுக்குக் கோபம் கோபமாக வந்தது. "அடேயப்பா! இந்தப் புருஷர்களே இப்படித்தான். ஆசை காட்டி, அதை வளர்க்கவும் வளர்த்து விட்டுக் கடைசியில் செயலுக்கு வரும்போது எதுவுமே தெரியாது போல விலகிப் போவதில் நிபுணர்கள்..." என்று அலுத்துக் கொண்டாள்.

"பணம் வந்ததும் மாங்காய் மாலை பண்ணிப் போடுவதாகச் சொன்னீர்களே! இப்போது அந்த ஞாபகமே இல்லாமல் போய் விட்டதல்லவா?" என்று கேட்டாள் கமலா.

"அட அசடே! உனக்கு நான் பண்ணிப் போடாமல் வேறு யார் போடப் போகிறார்கள்? ஆனால், தற்சமயத்துக்கு இந்தப் பணம் வேறு ஒரு காரியத்துக்குத் தேவையாக இருக்கிறது. பொறுத்தது பொறுத்தாய். இன்னும் கொஞ்ச நாள் பொறுத்துக் கொள்ளக் கூடாதா? உனக்கு மாங்காய் மாலை மட்டும் அல்ல; அட்டிகையும் கூடச் செய்து போடுகிறேன்" என்றான் சேகர்.

கமலா அப்புறம் அங்கே நிற்க வில்லை. கோபத்தால் முகம் சிவக்கச் சமையலறையை நோக்கி விரைந்தாள்.

* *

சேகரன் கல்லூரிப் படிப்பை முடித்த உடனேயே அவனுக்குச் சென்னையில் வேலை கிடைத்தது. ஆனால் அவனுடைய தந்தையும் தாயும் கிராமத்தை விட்டு நகர விரும்பாத காரணத்தால், அவன் தனியாகவே சென்னைக்கு வர நேரிட்டது. அறை ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டு ஹோட்டலில் சாப்பிட்டு வந்தான்.

சேகரனின் அப்பா ஒரு குட்டி மிராசுதார். அவருக்குப் பெண் குழந்தைகளே கிடையாது. சேகரனும், இன்னொரு பையனும் தான் அவருக்கு. எனவே, அவருக்குச் செலவு அதிகமாக இல்லை. மகன், தந்தை என்ற பிணைப்புக்காகச் சேகரன் மாதம் கொஞ்சம் ரூபாயை அனுப்பினான். என்றாலும் சேகரனுக்குச் சம்பளமாக மாதம் நூற்றைம்பது ரூபாய் கிடைத்ததால், அவன் சொந்தச் செலவுகளுக்

கும், ஊருக்கு அனுப்பிய பணத்துக்கும் கண்டு சேமித்து வைக்கவும் அவனிடம் கொஞ்சம் பணம் சேர்ந்தது.

நாட்களின் போக்கில் கமலாவுக்குத் தாலியைக் கட்டினான் சேகரன். கமலாவின் தந்தையும் நிலச்சொந்தக்காரர்தான். ஆனால் நான்கு பெண்களுக்குக் கல்யாணம் செய்து, இரண்டு பையன்களைக் கல்லூரியிலும் படிக்க வைத்தவர்.

கண்களுக்கு நிறைந்த வனப்புடன், ஆறு மாதக் கீரைத் தண்டு போலத் 'தளதள' வென்று வளர்ந்து, கிராமத்துச் சூழ்நிலையில் மேனி அழகும் பருவக் கொழிப்புமாக இருந்த கமலா சேகரனை முழுக்க முழுக்கக் கவர்ந்தாள். அவனுக்கு அவள் தன் மனைவியாக வாய்த்ததில் ஒரே ஆனந்தம்.

பிள்ளை வீட்டாருக்கு எத்தனை தான் பணமும் அந்தஸ்தும் இருக்கட்டுமே! பெண் வீட்டாரிடமிருந்து குறிப்பிட்ட அளவுக்காவது சீர்வரிசைகளைச் சேர்க்கா விட்டால் பாந்தமாக இருப்பதில்லை. பேராசையின் விளைவாக இப்படிக் கேட்கிறார்கள் என்று கூறுவது சரியில்லை. நாலுபேரிடம், தாங்கள் வாங்கிய சீர்வரிசைகளைப் பெருமையாகக் காட்டிக் கொள்ளும் அளவுக்குச் சீர் வாங்கி ஆகவேண்டும் என்று எண்ணத்தில் தான் அப்படிச் செய்கிறார்கள்.

கமலாவோடு தனிக் குடித்தனம் போட வேண்டும் என்பதற்காகக் கால் தேய நடந்தும் சில்லறை செலவழியப் பஸ்ஸில் பிரயாணம் செய்தும் சென்னை முழுதும் வீடு தேடினான் சேகர். கடைசியில் மாம்பலத்தில் ஐம்பது ரூபாய் வாடகையில் ஒரு வீடு கிடைத்தது. வீடே கிடைக்காதோ என்று அஞ்சின அவனுக்கு மாதம் ஐம்பது ரூபாய் அதிகமாகத் தோன்ற வில்லை.

அவன் குடித்தனம் போக வேண்டும் என்று ஆனந்தமாக இருந்த சமயத்தில் இடியைப் போல அவன் அப்பாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

"சேகர்! பெண் வீட்டுக்காரருக்கு எந்த வகையிலும் நாம் தாழ்ந்தவர்களோ சோடை போனவர்களோ அல்ல என்பதை அவர்கள் உணர வேண்டும். கல்யாணத்தின் போதே தங்கச் சங்கிலியுடன் கடிகாரம் வாங்கித் தருவதாகச் சொன்னவர்கள் இதுவரை அப்படிச் செய்யாததோடு கமலாவை உன்னோடு சேர்த்து விட்டால் எல்லாம் சரியாகிவிடும் என்று நினைக்கிறார்களாம்.

"அதனால் தங்கச் சங்கிலி முதலில் பார்சலில் வந்தாக வேண்டும்! பிறகு தான் குடித்தனம் போடுவதைப் பற்றி யோசிக்க முடியும் என்று உன் மாமனாருக்கு நான் எழுதி விட்டேன். என்னிட மிருந்து மறுபடியும் கடிதம் வரும் வரை தனிக் குடித்தனம் போடுவது பற்றி நீ எதுவும் செய்ய வேண்டாம்..." என்று எழுதியிருந்தார்.

அதைப் படித்த சேகரன் பொறுமை இழந்து துடித்தான். மனத்தை எவ்வளவோ கட்டுப் படுத்தியும் அவனால் கமலாவைப் பார்க்காமல் இருக்க முடியாது என்று தோன்றியது. 'என்றைக் கிருந்தாலும், எப்படி இருந்தாலும் கமலா என்னுடையவள். அவளுக்கும் எனக்கும் இடையே நிற்க இவர்கள் யார்?' என்ற எண்ணத்தில் ஏற்பட்ட வீராவேசத்தில் காரியாலயத்துக்கு லீவு எழுதிப் போட்டு விட்டு மனைவியின் ஊர் போய்ச் சேர்ந்தான்.

அவனைக் கண்டதும் கமலா கதறினாள்; பெண் இதயம், அதிலும் கற்பனைக் கோட்டைகள் கட்டி இன்பக் கனவுகள் கண்டு கொண்டிருந்த இளம் நெஞ்சு. "உங்களுக்குத்தான் தெரியுமே! கல்யாணச் செலவுகளையும், அடுத்து வந்த தலை தீபாவளி முதலிய செலவுகளையும் சமாளிக்க முடியாமல் தவிக்கும் அப்பாவால் இப்போது தங்கச் சங்கிலியுடன் கூடிய கடிகாரத்தை எப்படி வாங்கிப் போட முடியும்?" என்று விம்மினாள் அவள்.

"கவலைப்படாதே, கமலா! நாளைக்கே நான் ஐந்நூறு ரூபாய் தருகிறேன். அதை வைத்துக் கொண்டு கடிகாரம் வாங்கி அப்பாவுக்கு அனுப்பச் சொல்லு. என் அப்பாவுக்கு இது விஷயம் தெரிய வேண்டாம்!" என்றான் அவன்.

கமலா மண்டி யிட்டு அவன் பாதங்களைக் கண்களில் ஒத்திக் கொண்டாள். உள்ளூற அவள் உள்ளம் தனக்கு இந்த அரிய குணம் படைத்த கணவன் வாய்த்ததற்காக ஆனந்தப் பட்டது. மறு நாள் இந்தச் செய்தியைக் கேட்ட கமலாவின் தந்தைக்கு ஏற்பட்ட ஆனந்தத்தை அளவிட்டுச்சொல்ல முடியாது.

* * *

சேகர் தன் மாமனாருக்குக் கொடுத்த அந்தப் பணம் தான் இரண்டு வருஷங்களுக்குப் பிறகு திரும்பி வந்திருந்தது. அந்தப் பணத்தைக் கொண்டு ஒரு மாங்காய் மாலை செய்து போட்டுக் கொள்ள வேண்டும் என்று கமலா ஆசைப்பட்டாள்.

ஆனால் சேகர் பிடி கொடுத்துப் பேசாமற் போகவே, கமலா விட்டேற்றியாக இருக்க ஆரம்பித்தாள். 'நம் கணவரும் ஒரு சுயநலக்காரர்தான். அன்றைக்கு என்னவோ தாராளமாகப் பணத்தைக் கொடுத்து விட்டாரே தவிர இன்றைக்கு அந்தப் பணத்தின் மூலம் எனக்கு மாங்காய் மாலை வாங்குவது என்றால் தான் அவருக்குக் கசக்கிறதே!' என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.

பெண்களுக்கு நகை ஆசை மட்டும் ஏற்படாமல் இருந்தால் குடும்பங்களில் சச்சரவுகளும், பூசல்களும் எவ்வளவு குறையும்?

கமலா, வெறும் கடமைக்காக மட்டுமே சமைத்தாள்; வெறும் இயந்திர கதியிலே கணவனுக்குப் பரிமாறினாள். சாயந்திர வேளைகளிலும் சரி, இரவு வேளைகளிலும் சரி அவனுடன் பேசக் கூடச் செய்யாமல் ஒதுங்கி இருக்கலானாள்.

மனைவியின் இந்த அசட்டுத்தனம் சேகரனை வருத்தத்தில் ஆழ்த்தியது. அதனால் அவன்




# போட்டோ தொழிலில் 60 வருஷ சிறந்த சேவை






## கேவாபான் 33

பகல் வெளிச்சத்திற்கும் செயற்கை வெளிச்சத்திற்கும் சிறந்தது இந்த மின்னல் வேக பாங்ரோமாடிக் பிலிம்.

## கேவாகுரோம் 30

பகல் வெளிச்சத்திற்கு மிக உகந்தது இந்த ஆர்தோகுரோமாடிக் பிலிம்.

இலவச விவரங்களுக்கும் "கேவார்ட்" எக்ஸ்போஷர் கால்குலேட்டருக்கும் மேற்கண்ட விலாசத்திற்கு எழுதவும் :

**Allied Photographics Limited**

**அல்லைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்**

(மெயிலிங் டிபார்ட்மெண்ட்) கஸ்தூர் பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜீ டாடா ரோடு, பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள் : பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - புது டில்லி

தன் மனத்திலிருந்த ஒன்றை அவளிடம் சொல்லி விட்டால் என்ன என்று எண்ணினான். ஆனால், அவன் மனம் அதற்கு இடம் தரவில்லை. "அவளுக்கு மாத்திரம் என்ன அத்தனை அடம்?" என்றுதான் எண்ணச் செய்தது.

அதனால் அத்தனை நாளையும் போல அன்றும் அவன் மௌனமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். கமலாவும் அன்னிய புருஷன் ஒருவனுக்கு உணவு படைப்பவளைப் போல் பரிமாறினாள். திடீரென்று சேகரன் தலையை உயர்த்தி, "உன் தம்பி நாளைக் காலையில் இங்கே வருகிறான்.." என்றான்.

கமலா தன்னையும் அறியாமல் "திடீரென்று அவனுக்கு இங்கே வரஎன்ன வந்து விட்டதாம்?" என்று கேட்டாள்.

"அவனுக்குப் பத்திரிகை நிருபர் வேலை ஆகியிருக்கிறது!" என்றான். ஆனால் பேச்சு அதற்கு மேல் வளரவில்லை.

பொழுது 'பொலபொல'வென்று விடிந்தது. வாசற் கதவைத் தட்டும் ஓசை கேட்டு வாசலுக்கு ஓடினாள் கமலா.

அவள் தம்பி சங்கரன் நின்று கொண்டிருந்தான். "அட! தோளில் இதென்ன பெட்டி?" என்று கேட்டவாறே அவனுடன் உள்ளே வந்தாள் கமலா.

"இதுவா? புகைப் படப் பெட்டி!" என்றான் சங்கரன். "இந்தப் பெட்டியால் தான் எனக்குப் பத்திரிகை நிருபர் வேலை கிடைத்தது. சம்பளம் கணையாக மாதம் முந்நூறு ரூபாய்!" என்றான்.

கமலா பேசாமல் இருந்தாள்.

"முதல் மூன்று மாதச் சம்பளம் அத்திம்பேருடைய கடனை அடைக்கச் சரியாகப் போகும். நான்காவது மாதச் சம்பளத்தில் உனக்கு மாங்காய் மாலை வாங்கித் தருவேன். அக்கா, சின்ன வயதிலிருந்தே நீ கேட்டுக் கொண்டிருந்தாய் அல்லவா?" என்றான் சங்கரன்.

கமலா குறுக்கிட்டு, "எந்த அத்திம்பேருக்குக் கடன்? அத்தனை ரூபாய் எதற்காகடா வாங்கினாய்?" என்று கேட்டாள்.

"என்ன அக்கா, ஒன்றும் தெரியாதவள் போலக் கதைக்கிறாய்? எல்லாம் உன் அகத்துக்காரர்தான் கடன் தந்தார். கொஞ்சம்கூட முன் யோசனை இல்லாமல் அப்பா எனக்குப் புகைப்படப் பெட்டி வாங்கித் தரமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தார். சேகருக்குப் பட்ட கடனைத் தீர்ப்பதுதான் முதல் வேலை என்று பழைய பாக்கி ஐந்நூறு ரூபாயை அவருக்கு அனுப்பினார். புகைப்படப் பெட்டி இல்லாமல் எனக்கு இந்த வேலை கிடைக்காது. நானாகவே அத்திம்பேருக்குக் கடிதம் எழுதினேன். அப்பா அனுப்பிய ஐந்நூறோடு இன்னும் இருநூற்றைம்பதையும் சேர்த்து எழுநூற்றைம்பதாக அனுப்பி விட்டார்!" என்றான் சங்கரன்.

கமலாவின் இரு கண்களிலும் நீர் துளித்தது.

'இந்த மனிதருள் மாணிக்கத்தைப் போய்ச் சுயநலப் புலி என்று நினைத்தேனே! அதோடு இத்தனை நாட்களாக எவ்வளவு ஹிம்சைப் படுத்தினேன்? சாதாரண நிலையில் நூறு ரூபாய் சம்பளத்தில் கிடைக்கக் கூடிய வேலைக்குப் பதிலாக, தம்முடைய பணத்தின் மூலம், முந்நூறு ரூபாய் சம்பளமாகக் கிடைக்கும் வேலைக்கு அல்லவா வழி செய்திருக்கிறார்...!"

இப்படிச் சிந்தனை ஓடவே அவள் சங்கரன் இருப்பதையும் பொருட்படுத்தாமல் வேகமாகச் சேகரன் இருக்கும் அறைக்குள் சென்றாள். அப்பொழுதுதான் சங்கரன் படுக்கையை விட்டு எழுந்து கொண்டிருந்தான். கமலா அவன் காலடியில் சாஷ்டாங்கமாக விழுந்து, "சங்கரன் எல்லாவற்றையும் சொன்னான். நீசத் தனமான பெண் புத்தியினால் உங்கள் உயர்ந்த நெஞ்சைப் புண்படுத்தி விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்!" என்று கண்ணீர் விட்டுக் கதறினாள்; விம்மி விம்மி அழுதாள்.

சேகரன் உள்ளன்போடு, "அசடு! வீணில் எதற்காக வேண்டாததற்கெல்லாம் அழுகிறாய்? மனிதன் தவறுதலே ஏற்படாமல் நடந்து கொள்ள வேண்டும் என்றால்... அது எங்கேயாவது முடிகிற காரியமா? ஒரு போதும் முடியாது. ஆனால் தான் செய்த தவறை மனிதன் உணர்ந்து விட்டானானால் அதுவே போதும்" என்று சொன்னான்.

கமலாவின் நெஞ்சு ஆனந்தத்தால் பூரித்தது. சேகரனைக் கணவனாக அடைந்த அவள் உண்மையிலேயே பாக்கியசாலிதானே?

## ரேடியோ பாடுகிறது!















# சுபாஷ் ஏன் தோல்வியுற்றான்




## செவன் ஓ'க்ளாக் பிளேடுகளால் உங்களுக்கு என்ன அனுகூலம்

பணம் மிச்சமாகிறது. டீக்கான தோற்றம். க்ஷவரசுகம். பரிசுத்தத்தன்மை. வெற்றிக்கான மார்க்கம்.

தினசரி செவன் ஓ'க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.

**7 o'clock BLADES**



# அதிசயம்

## மிகவும் குறைந்த விலைகள்
## உயர்ந்த ரக
## ரேடியோவுக்கு





மாடல் W-76 6-ட்யூப். 7 பாண்டுகள், ஷார்ட் வேவ் பாண்டுகளின் மேலுள்ள பாண்டு ஸ்ப்ரெடுடன். மிகச்சிறந்த ரக மஹாகனி மரப் பெட்டி.

ஏஸி - ரூ. **445/-**

ஏஸி/டீஸி - ரூ. **425/-**



**ரேடியோ மானுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா அங்கத்தினர்**

**வினியோகஸ்தர்கள்.**

**இண்டர்நேஷனல் ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட்**

**193, மவுண்ட் ரோடு, சென்னை :: ஸ்ரீ நரஸிம்ம ராஜா ரோடு, பெங்களூர்**

**நடராஜன் சன்ஸ், மெயின் ரோடு, திருவனந்தபுரம்**

**குமரன் வாட்ச் கம்பெனி, நேதாஜி ரோடு, ஈரோடு.**




## 24. குறும்பும் குழைவும்

குஸுமா தன் மனத்தைப் பற்பல சிந்தனைகளில் செலவிட்டிருந்தாள். அவள் மனம் ஒருவரையும் முடிவாகத் தேர்ந்தெடுக்கவில்லை. அதனால் அவள் தன் மனத்தை யாரிடமும் பறி கொடுத்து விடவில்லை.

ஆனால் அம்மூன்று வாலிபர்களும் அவளிடம் மனத்தைப் பறி கொடுத்திருந்தனர். அவர்கள் மட்டும் என்ன? இன்னும் எத்தனையோ வாலிபர்கள் அவளிடம் மனத்தைப் பறி கொடுத்திருந்தார்கள். காரணம், அவள் நன்கு படித்தவள்; அழகிலும் அறிவிலும் சிறந்தவள். பெரும் செல்வச் சீமானான ஸர் பிஹாரிலாலின் ஏகபுத்திரி. அப்படியிருக்கும் பொழுது அவளிடம் தங்கள் கவனத்தைச் செலுத்தாதவர்கள் யார்தான் இருக்க முடியும்? அவள் நம்மைக் கவனிக்கிறாளோ இல்லையோ, நாமாவது அவள் மனத்தில் இடம் பொத்திக் கொள்ள முயல்வோம் என்று யாருமே எண்ணுவது சகஜம்தானே?

குஸுமாவுக்குச் சுபாவமாகவே நாணம் அதிகம். ஆனால் சந்தர்ப்பம் நேர்ந்து விட்டால் தைரியமாகப் பேசிப் பழகும் தைரியமும் பெற்றவள். அதனால் தான் சுகபாலும் சாந்திப் பிரியனும் ஒருமுறை அவளுடன் கூடவே உட்கார்ந்து மோட்டார் சவாரி செய்ய முடிந்தது. ஆனால் அவள் உள்ளத்தில் தங்களுக்கென்று ஒரு நிரந்தரமான இடத்தைப் பெறும் முயற்சியில் அவர்களால் வெற்றி காண முடியவில்லை. காரணம் கூர்ந்து கவனித்தால்தானே புலனாகும்?

பொதுவாக ஒரு ஆடவனைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் ஒரு பெண்ணின் உள்ளத்தில் எழுவது இயல்பு. சிற்சிலரோடு அறிமுகம் செய்து கொண்டு நட்புரிமை பாராட்ட வேண்டும் என்ற எண்ணங்கூடச் சிற்சில சமயம் அவள் உள்ளத்திலே எழக்கூடும். ஆனால் அந்தப் பெண்ணின் உள்ளத்தைக் கடைந்து உணர்ச்சிகளைக் கிளர்ச்சி கொள்ளச் செய்து அவளைத் தன் வாழ்க்கை பயணத்தையும் தனக்கே அர்ப்பணிக்கத் தூண்டும் திறன் எத்தனை ஆடவர்களிடம் எழக் கூடும் என்பதுதான் யோசிக்க வேண்டிய விஷயம். சொல்வதன் கருத்து என்னவென்றால் இதுவரை குஸுமாவின் மனத்தில் அப்படி எந்த ஆடவனுமே குடி கொண்டதாகத் தெரியவில்லை.

ஸர் பிஹாரிலால் இதையெல்லாம் நன்கு அறிந்திருந்தார். உலகத்தில் நான்தோறும்

எத்தனையோ திருமணத் தொடர்புகள் நடக்கின்றனவே, இப்படி உள்ளத்தைப் பறிகொடுத்த பின்தான் நடக்கின்றனவா? பைத்தியக்காரத்தனம் தோய்ந்த பல மோகாந்தகாரமான செயல்களில் ஈடுபட்ட பின்னரும் கூடப் பல திருமணத்தொடர்புகள் இடையூறின்றியே நிறைவேறி விடுகின்றனவே! பார்க்கப் போனால் இத்தகைய திருமணங்கள் தான் இந்த உலகத்தில் ஏராளமாக நடைபெற்றிருக்கின்றன, நடைபெற்று வருகின்றன என்பதும் தெரிய வரும். அப்படி நிகழ்ந்து விட்ட தொடர்புகளை எதிர்த்துக் கொதித்தெழுந்து இந்த உலகம் ஏகமாக விரோதம் பாராட்டியதாக யாரும் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை. அதனால் ஸர் பிஹாரிலால் இதுபோன்ற திருமணத் தொடர்புகள் ஏற்பட்டாலும் இந்த உலகத்தில் ஆணும் பெண்ணும் ஆனந்தமாக வாழ்க்கை நடத்துகிறார்கள் என்றே நினைத்தார். அதன் பலனாகப் பல தடவைகள் குஸுமாவின் கல்யாணத்துக்குத் தாம் ஏற்பாடு செய்ய உத்தேசித்திருப்பதாகவும் கூறினார். ஆனால் குஸுமா அவ்விஷயத்தில் தனக்கு அதிக ஆர்வமோ உற்சாகமோ இருப்பதாகக்காட்டிக்கொள்ளவில்லை.

ஒரு நாள் ஸர் பிஹாரிலால் திருமணத் தொடர்பு பற்றிய ஆங்கிலப் புத்தகம் ஒன்றை எடுத்துக் கொடுத்து ரமேஷைப் படிக்கச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருந்தார். அதில் 'திருமணத்துக்குத் தகுதி வேண்டும்' என்று ஒரு அத்தியாயம் இருந்தது. ரமேஷ் கொஞ்ச தூரம் அதைப் படித்ததும் இடைமறித்து, "ஏன், ரமேஷ்! உனக்குக் கல்யாணம் ஆகி விட்டதா, இல்லையா?" என்றார்.

"இல்லை!" என்று ரமேஷ் மிகவும் தயக்கத்துடன் நாணிக் கொண்டு பதில் சொன்னான்.

"ஏன்?"

பிறர் விஷயத்தில் அதிகமாகத் தலையிடாத ஸர் பிஹாரி லால் அன்று ஏனோ அந்தக் கேள்வியைக் கேட்டு ரமேஷைக் கொஞ்சம் திக்குமுக்காட வைத்து விட்டார்.

"ஸார்! நானோ பரம ஏழை. தரித்திரம் பிடுங்கித் தின்னும் இந்த நிலையில் கல்யாணம் செய்து கொண்டு நான் என்ன செய்வேன்?" என்றான்.



"ஆமாம், ஒருவன் ஏழையாக இருந்தால் அவன் கல்யாணம் செய்து கொண்டு காலங் கழிக்க முடியாதோ?"

"முடியாது என்று நான் எங்கே சொன்னேன்? என் கண்களெதிரிலேயே என் நண்பர் ஒருவர் அப்படிக் கல்யாணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்துகிறார். அவர் பரம ஏழை. அவ்வளவு ஏழ்மையிலும் அவரைப்போல் ஆனந்த வாழ்க்கை நடத்துபவர்களை நான் இதுவரை என் கண்களால் கண்டதில்லை. ஆனால் அவருடைய அவ்வளவு ஆனந்தத்துக்கும் இன்பத்துக்கும் காரணம் யார், தெரியுமா? அவருடைய மனைவிதான்!" என்றான் ரமேஷ்.

"அவருடைய பெயர் என்னவோ?"

"அவருடைய பெயரா?.........ஜகதீஷ்! அவருடைய மனைவியின் பெயர் கோகிலா. இருவரும் என் வணக்கத்துக்கும் வழி பாட்டுக்கும் உரிய ஆதரிச தம்பதிகள்; எனக்கு நெருங்கிய நண்பர்கள்!"

"தேசியப் போராட்டத்தில் ஈடுபட்டுத் தன் பெரிய உத்தியோகத்தைக்கூட உதறித் தள்ளி விட்டாரே, அந்த ஜகதீசைத் தானே சொல்கிறாய்!"

"ஆம், அவரேதான்!"

"அவர் இங்கே எப்பொழுதாவது வருவது உண்டோ?"

"சில சமயம் அவர் வருவார். சில சமயம் நானே அவர் வீட்டுக்குப் போய் வருவேன்!" என்றான் ரமேஷ்.

ஸர் பிஹாரிலால் சிறிது நேரம் ஏதோ யோசனை செய்தார். பிறகு, "உம். இன்னும் சில நாட்களில் ஆலை வேலை நிறுத்தம் பற்றிய முடிவு தெரிந்து விடும். நீயும் பிராணலாலும் ஒரு பத்திரிகை ஆரம்பித்தால் நல்லது என்று அபிப்பிராயப் பட்டீர்கள் அல்லவா? உன் நண்பர் ஜகதீசைக் கேட்டுப் பார். சம்மதமானால் அவர் பிராணலாலைப் போய்ப் பார்க்கட்டும்!" என்றார்.

அவர்கள் இருவருக்கும் நடந்த அந்தச் சம்பாஷணையைக் குஸுமா கொஞ்ச தூரத்தில் உட்கார்ந்து கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஏழ்மை காரணமாக ரமேஷ் கல்யாணம்

செய்து கொள்ளவில்லை என்பதை அவன் பேச்சிலிருந்து அறிந்த அவள் தன் கவனம் முழுவதையும் அவன் மீது லயிக்கச் செய்தாள். அதோடு அவன் பேச்சி லிருந்து ஏழையாக இருந்த பொழுதிலும் ஆனந்தமாக ஆதரிச வாழ்வு வாழும் ஒரு இளந் தம்பதியின் வாழ்க்கையைப் பற்றியும் அவள் கேட்க நேர்ந்தது. அதனால் தாம்பத்திய வாழ்க்கைக்கு ஏழைமை இடையூறாக நிற்காது என்றும் முடிவு கட்டத் தோன்றியது.

கொஞ்ச நாட்களாகவே அவள் ரமேஷுடன் முன்னைக் காட்டிலும் அதிகக் கலகலப்பாகவும் சுதந்திரமாகவும் சுமுகமாகவும் பேசிப் பழகி வந்தாள். பெண்களுக்கெதிரே பேசிப் பழக ரமேஷ் மிகவும் சங்கோசப்படுகிறான், வெட்கப்படுகிறான் என்பதைப் புரிந்து கொள்ளாமலேயே குஸுமா அவனுடன் சமத்துவ நோக்கோடு பழக முற்பட்டிருந்தாள்; தன்னை யறியாமலே அவனை ஆட்கொண்டிருந்த சங்கோசத்தை விரட்டியடிக்கவும் முனைந்திருந்தாள்.

எத்தனையோ தடவைகள் அவனுடைய படிப்பையும் பண்பையும் பற்றி ஸர் பிஹாரிலால் அவனுக்கெதிரே வாயார வாழ்த்திப் புகழ்ந்திருக்கிறார். பக்கத்திலேயே இருக்கும் அவனைப் பலமுறைகள் பார்த்துப் பழகும் வாய்ப்பும் அவளுக்குக் கிட்டியிருந்தது. குஸுமா அவனை மற்ற இளைஞர்களைப் போல் எண்ணவில்லை. ஏன்? பக்கத்தில் இருப்பவன் பிரமாதமானவனாகப் படவில்லையோ? அல்லது அவனை இக்கரைக்கு அக்கரை பச்சை என்ற கதையாகப் பார்த்திருப்பாளோ? இல்லை, அதுதான் இல்லை! சாந்திப்பிரியனையும் சுகபாலையும் பற்றிய நினைவு எழும் பொழுதெல்லாம் ரமேஷும் அவள் மனக் கண் முன்னே தோன்றியிருக்கிறான். அதுவும் அவர்களிருவரையும் காட்டிலும் ஒரு படி மேலாக.

குஸுமாவுக்கும் பத்திரிகை ஒன்று ஆரம்பிக்க வேண்டும் என்ற ஆசையிருந்தது. அத் திட்டத்தைச் செயலாக்க வேண்டி அவள் ரமேஷுடன் பல தடவைகள் பேசியிருக்கிறாள். அவள் ஆசை அத்தனை நாட்களும் நிறைவேறாமல் இருந்ததற்குக் காரணம், பத்திரிகை ஆரம்பிப்பது சம்பந்தமாக ஸர் பிஹாரிலால் தம்முடைய சம்மதத்தைத் தெரிவிக்காமல் காலந் தாழ்த்தி வந்ததுதான்.

கர்ஜனைப் பத்திரிகையில் வெளியாகும் கட்டுரைகளைப் படித்து எல்லோரும் மனம் வெதும்பிக் கொண்டிருந்தனர். ஆலை வேலை நிறுத்தத்தைப் பற்றி அதில் வெளியாகிக் கொண்டிருந்த அரைப் புளுகு, முழுப் புளுகுக் கட்டுரைகளுக்குச் சரியான முறையில் சூடு கொடுத்து உண்மையை வெளியிடுவது அவசியமாயிருந்தது. சாந்திப்பிரியனுங்கூட, ஏனோ தெரியவில்லை, கடுநிலைமை தாங்கும் பத்திரிகை ஒன்று ஆரம்பிக்க வேண்டியதன் அவசியத்தை அழுத்தமாக வற்புறுத்திக் கொண்டிருந்தான். "தீவிர வாதக் கொள்கைகள் கொண்ட தாங்கள் இத்தகைய ஆலோசனையை எதற்காகக் கூறுகிறீர்கள்?" என்று கூடக் குஸுமா ஒரு முறை அவனைக் கேட்டிருக்கிறாள்.

"கர்ஜனைப் பத்திரிகை இப்பொழுதெல்லாம் தீவிரவாத நோக்கம் கொண்ட பத்திரிகையாக எங்கே இருக்கிறது? மனோஹர், சுகபால் இவ்விருவருடைய முட்டாள்தனத்தையும் பறை சாற்றும் பத்திரிகையாக அல்லவா ஆகிவிட்டது!" என்று அதற்குச் சாந்திப்பிரியன் பதில் சொல்லியிருக்கிறான். அதோடு மட்டும் அவன் நிறுத்திக் கொண்டால்தான் நன்றாயிருக்குமே! ஆக்கச் செயல்களுக்கு உருப்படியான யோசனை கூறும் பத்திரிகை ஏதாவது இருந்தால் அதற்குத் தன் ஒத்துழைப்பு முழுவதையும் அளிக்கத் தான் தயாராயிருப்பதாகக் கூட அவன் சொன்னான். அவன் சொன்னதைக் கேட்ட குஸுமா அவன் சொற்களை நம்பியோ நம்பாமலோ, தன் தந்தையிடம்



சென்று அவன் கூறியது முழுவதையும் ஒன்றுகூட ஒளிக்காமல் சொல்லியிருக்கிறான்.

வேலை நிறுத்தப் போராட்டத்தைச் சமாதானமாகத் தீர்த்துக் கொள்ள வேண்டிப் பிராணலால் ஆலை அலுவலகத்திலேயே பிரமுகர்களின் கூட்டம் ஒன்றைக் கூட்டத் திட்டமிட்டிருந்தார். அதற்கான அழைப்புகளையும் அனுப்பியிருந்தார்.

அன்றே குஸுமாவுக்கும் பிறந்த நாள். தமது ஏகபுத்திரியான குஸுமாவின் பிறந்த நாள் கொண்டாட்டத்தை ஸர் பிஹாரிலால் வருஷா வருஷம் வெகு விமரிசையாகக் கொண்டாடுவது வழக்கம். அன்று பிரமுகர்கள், நண்பர்கள், உற்றார் உறவினர்கள் எல்லோருக்கும் மிக நேர்த்தியான விருந்து அளிப்பதோடு தம் மகளுக்கும் மாபெரும் தொகையொன்றை அன்பளிப்பாகக் கொடுப்பதும் அவருடைய வழக்கம்.

இம்மாதிரி கொந்தளிப்பான நிலைமையில் விருந்தளிப்பது வீண் என்று குஸுமா கருதினாள். அழைப்புகள் அச்சிட்டு அனுப்புவது, விருந்துக்கான ஏற்பாடுகள் செய்வது முதலிய காரியங்களைக் கவனித்துக் கொள்ளும்படி ஸர் பிஹாரிலால் ரமேஷுக்கு முன்கூட்டியே அறிவித்து விட்டார். ரமேஷும் காலங் கடத்தாமல் அழைப்பிதழ்கள் அனுப்புவதற்கான வேலையைக் கவனிப்பதற்குத் தொடங்கி விட்டான்.

குஸுமாவின் காதுகளில் இந்தச் செய்தி விழுந்ததும் அவள் ரமேஷைப் பார்க்கச் சென்றாள். இம்மாதிரி அழைப்பிதழ்கள் இந்தத் தடவை அனுப்ப வேண்டாம் என்று அவனை மிகவும் வேண்டினாள்.



"போய் விட்டு வருகிறேன். ரொம்ப நேரம் ஆகி விட்டது. நீங்கள், வாசல் வரையிலும் வந்து அனுப்ப வேண்டாம். உங்களுக்கு என்னத்துக்கு அந்தச் சிரமம்?"
"சிரமமா? யார் சொன்னார்கள்? அதிலே எனக்கும் பரம சந்தோஷம் ஆகிறதே!"

"எசமானர் விருந்தளிக்க வேண்டும் என்று கூறியிருக்கிறாரே! அழைப்பிதழ்கள் அனுப்பாமல் எப்படி இருப்பது?" என்று ரமேஷ் சற்று வியப்புடன் கேட்டான்.

"எனக்கு இந்தக் காரியங்கள் எல்லாம் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. பிறந்த நாள் கொண்டாட்டத்துக்கு விருந்து வைக்கிறேன் என்று சொல்லி எதற்காகப் பணத்தை வீணில் கரியாக்க வேண்டும்? இந்த உலகத்தில் எனக்கு மட்டுந்தான் பிறந்த நாள் அதிசயமா?" என்று கேட்டாள் குஸுமா.

"நீங்களோ இப்படிச் சொல்கிறீர்கள்; உங்கள் தகப்பனாரோ அப்படிச் சொல்கிறார். உங்கள் இருவருக்குமே இப்படி அபிப்பிராய வேற்றுமையிருந்தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்? உங்களுக்குப் பிறந்தநாள் கொண்டாடுவது பெரிதாகத் தோன்றவில்லை. ஆனால் உங்கள் தந்தைக்கோ இதைக் காட்டிலும் ஆனந்தம் அளிக்கும் நாள் வேறு இருப்பதாகத் தோன்றவில்லை. நான் யாருக்கென்று பதில் சொல்வது?"

"அதற்காக நான் சொல்லவில்லை. அன்றைக்கு அநாவசியமாக இவ்வளவு கூட்டம் கூட்டுவானேன்? யார் யார் முக்கியமோ, எவர் எவர் வந்தால் நமக்கு இன்பமாக இருக்குமோ, அப்படிப் பட்ட நபர்களை மட்டும் பொறுக்கிக் கூப்பிட்டால் போதாதா?"

"போதும். நீங்கள் சொல்வதும் நியாயமாகத்தான் தோன்றுகிறது. இருந்தாலும் எசமானரை ஒரு வார்த்தை கேட்காமல் செய்யலாமா?" என்று கேட்டான் ரமேஷ்.

"இதில் அவரைப் போய்க் கேட்பதற்கு என்ன இருக்கிறது? நான் சொல்கிறவர்களுக்கு மட்டும் அழைப்பிதழ்கள் அனுப்புங்கள், போதும்! நான் அப்பாவிடம் சொல்லிக் கொள்கிறேன்!" என்றாள் குஸுமா.

ரமேஷ் நிமிர்ந்து ஒருமுறை குஸுமாவைப் பார்த்தான். இதுவரை பிஹாரிலால் இடும் கட்டளைகளுக்குக் கீழ்ப் படிந்து மட்டுமே தான் அவன் பழக்கப்பட்டிருந்தான். ஆனால் அன்று குஸுமாவின் பேச்சில் கட்டளையிடும் பாவம் தொனிப்பதாகத் தோன்றவே, அவனுக்குத் தன் மனத்தைச் சுமை அழுத்துவது போலிருந்தது. ஆனால் குஸுமாவைப் பார்த்தபின், தான் எசமானி என்ற அகம்பாவம் அவன் முகத்தில் தொனிப்பதாக ரமேஷுக்குத் தோன்றவில்லை. சிறியவர்கள் பெரியவர்கள் என்று பாராமல் புருவங்களை நெரித்து வேலைக்கார வேலைக்காரிகளை அதட்டி மிரட்டி வேலை வாங்கும் பணச் செருக்குப் படைத்த பெண்ணின் முகமாகவும் அவனுக்குத் தோன்றவில்லை. அவன் முகத்தில் அமைதியும் எழிலும் ஒன்றையொன்று மேவியவாறு தாண்டவமாடிக் கொண்டிருந்தன. அதைக் கண்ட பின்தான் அவனுக்குச் சற்று மன நிம்மதி பிறந்தது. "சரி, உங்கள் உத்தரவுப்படியே நான்



தாயார் மிகவும் மனக்கிலேசமுற்றாள். அவளது குழந்தை, எதிர்பார்த்த அளவுக்குப் புஷ்டி பெறவில்லை-இரவெல்லாம் குழந்தை நிம்மதியின்றியும், பகல் வேளைகளில் சதா சிணுங்கிய வண்ணமுமிருந்தது.



பிறகு.....அவள் சகோதரி 'க்ளாக்ஸோ'வைச் சிபாரிசு செய்தாள்-' குழந்தையும் 'க்ளாக்ஸோ' வினால் கிரமமாகத் தேறிவந்ததுமின்றி எப்போதும் சந்தோஷமாயும் இருந்து வந்தது.




திடமான எலும்புகளும் பற்களும் வளர்வதற்கென விடமின் டி யும் நல்ல ரத்தம் உண்டாவதற்காக இரும்புச்சத்தும் சேர்த்துத்தயாரிக்கப்பட்ட 'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.



அன்னையின் கவலைகள் அகன்று விட்டன. குழந்தையும் நன்கு உண்டு, உறங்கி, கிரமமாக புஷ்டியும் பெற்று வளர்கிறது. குழந்தையை 'க்ளாக்ஸோ' போஷாக்கில் இருத்திய பின்னர் எத்தகைய ஆச்சரியகரமான மாறுதல்!

# Glaxo

"க்ளாக்ஸோ" ஒரு சிறந்த சுத்தமான
போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.

'க்ளாக்ஸோ' லேபரடரீஸ் (இந்தியா) லிமிடெட்
பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

# உங்கள் குழந்தையின் இருமலின் காரணத்தை அகற்றுங்கள்—அதை கட்டுப்படுத்தினால் மட்டும் போதாது

**இருமுவதை நிறுத்தினால் மட்டும் பயனில்லை. ஸிரோலின் நோய்க் கிருமிகளை தொற்றவிடாமல் தடுத்து, அந்தக் கிருமிகளை ஒழிக்கவும் உதவி புரிகிறது.**

உங்கள் குழந்தை இருமத்தொடங்கினால், அது அபாயத்தின் அறிகுறியென்று தெரிந்துகொள்ளவும். தொண்டையிலும் சுவாசப்பைகளிலுமுள்ள மெல்லிய தசைநார்கள் புண்ணாகி வீங்குவதால்தான் அவன் இருமுகிறான். ஸிரோலின் கொடுங்கள். அது நோயை சௌமியமான முறையில், யாதொரு அபாயமுமின்றி வேகம் வேரறுக்கும்.

### மயக்க மருந்துகளே கிடையாது

ஸிரோலின் மயக்க மருந்துகளின் உதவியில்லாமலேயே வேலைசெய்கிறது. அதில் எபிட்ரின் கிடையாது. அதன் விஷநாசக குணம் நோய் தொற்ற விடாமல் தடுக்கிறது. தவிர, கபம் மற்றும் கோழை சுலபமாக வெளியேற அது உதவி புரிகிறது.

ஸிரோலின் ஜீரண சக்தியை ஊக்கி, தெம்பும் உற்சாகமும் ஊட்டுகிறது. குழந்தைகளுக்கு இருமல், ஜலதோஷங்கள் அணுகாதபடி அவர்களது நோய் எதிர்ப்பு சக்தியை வளர்க்கவும் செய்கிறது. வீட்டில் எப்பொழுதும் ஒரு புட்டி வைத்திருங்கள்.




# ஸிரோலின்

'ரோஷ்'

VD. 9854

அழைப்பிதழ்கள் அனுப்புகிறேன். யார் யாருக்கு அனுப்ப வேண்டும் என்று எனக்குப் பெயரைச் சொல்லுங்கள்!" என்றாள்.

'உத்தரவு' என்று ரமேஷின் வாயிலிருந்து வந்த சொற்களைக் கேட்டதும், படிப்பும் பண்பும் நிறைந்த யுவதியான குஸுமாவுக்கு மனத்தை முள்ளாக உறுத்தியது. எனவே, "இல்லை, இல்லை! நான் உத்தரவிடுவதாக எண்ணாதீர்கள். நான் உங்களை ஆலோசனை தான் கேட்கிறேன். நீங்கள் யார் யாரைக் கூப்பிடலாம் என்கிறீர்கள்?" என்று கேட்டாள் குஸுமா.

ரமேஷுக்கு அவள் காட்டிய அந்த வினயம் மிகவும் உசிதமானதாகவே பட்டது. 'அடடா! இவ்வளவு நல்ல பெண்ணை முதலாகப் பேசும் இந்த நீண்ட பேச்சில் இப்படி விட்டேற்றியாகப் பேசி வெட்கப்படச் செய்து விட்டோமே! இது அசட்டுத்தனமான காரியம் அல்லவா?' என்று மிகவும் மனம் நொந்தான். அவன் செயல் அவனையே நாணமுறச் செய்தது. சில விநாடிகளுக்கெல்லாம் அவன் தன்னை ஒருவிதமாகச் சமாளித்துக் கொண்டு அடக்கத்துடனும் ஆர்வத்துடனும் ஸர் பிஹாரி லாலின் நண்பர்கள், குஸுமாவின் தோழிகள், அவர்கள் வீட்டுக்கு வரும் பிரமுகர்கள், பொதுப்பணியில் ஈடுபட்டிருக்கும் பல பிரபலப் பெண்மணிகள் ஆகியவர்களின் பெயரைக் கூறினான், அவர்களைக் கூப்பிடாமல் இருக்கமுடியாது என்ற எண்ணத்தில். ஆனால் குஸுமா அவர்களில் ஏறக்குறைய பதினைந்து பேர்களைத் தான் பொறுக்கினாள். ரமேஷ் மறுபடியும் முக்கியமாகச் சுகபால், சாந்திப்பிரியன், மனோஹர் மூவர் பெயரையும் விட்டுப் போகாமல் இருப்பதற்காக ஞாபகப்படுத்தினான். ஆனால் வேலை நிறுத்தத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வர அவர்கள் மூவரும் இன்றியமையாதவர்கள் என்பதே அதற்கு முக்கிய காரணம். விருந்து முடிந்ததும் அவர்களுடன் கூடி ஆலோசனை நடத்தச் சௌகரியமாயிருக்கும் என்று ரமேஷ் அபிப்பிராயம் தெரிவிக்கவே, குஸுமா அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டாள். பிறகு ரமேஷைப் பார்த்து, "உங்கள் நண்பர்களில் சிலர் பெயரையும் சொல்லுங்கள். அவர்களுக்கும் அழைப்பிதழ் அனுப்புவோம்!" என்றாள்.

"என் நண்பர்களா? எதற்கு?"

குஸுமாவின் பிறந்த நாள் விழாவுக்கும் நம் நண்பர்களுக்கும் என்ன சம்பந்தம் என்பதைப் புரிந்துகொள்ள இயலாத ரமேஷ் ஆச்சரியத்துடன் கேட்டான்.

"ஆமாம், அதனால் என்ன? நீங்களும் நம் வீட்டு மனுஷ்யர்தானே? உங்கள் நண்பர்களைக் கூப்பிடாவிட்டால் நன்றாயிருக்குமா?" என்று கேட்டாள் குஸுமா.

"அதற்காகச் சொல்லவில்லை. எனக்கு அதிகமாக நண்பர்களே கிடையாது!"

"ஆமாம், அன்றைக்கு ஒரு நாள் அப்பாவிடம் யாரோ ஒரு நண்பரைப் பற்றிப்












அவன் மாத்திரம் என்ன ஒசத்தி? அவ னுக்கு என்ன, கொம்பு முளைச்சிருக்கோ?

பேசிக் கொண்டிருந்தீர்களே, அவரையும் அவர் மனைவியையும் மட்டுமாவது கூப்பிட லாம் அல்லவா?''

"ஓகோ! ஜகதீஷைச் சொல்கிறீர்களா? அவன் ஒரு விசித்திரப் பிறவி. வந்தாலும் வருவான்; வரா விட்டாலும் மாட்டான். அவனைப் பற்றி ஒன்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாது!''

"அது சரி! நாமோ ஒரு பத்திரிகை ஆரம் பித்தாக வேண்டும். அப்பாவும் அவரை அழைத்து வருமாறு சொல்லி யிருக்கிறார். இந்த அழைப்பைச் சாக்காகக் கொண்டு அவர் வந்தால், அவருடன் கூடிப் பேசிப் பத்திரிகை ஆரம்பிப்பதைப் பற்றி ஒரு திட்டம் வகுக்கலாம் அல்லவா?''

"வாஸ்தவம். நான் அவரிடம் சொல்லிப் பார்க்கிறேன்!'' என்றான் ரமேஷ். ஜக தீஷைக் கூப்பிடுவதில் அவனுக்கும் ஒரு தன்னலம் இருந்ததல்லவா? நண்பனுக்கு உதவி செய்தோம் என்ற பெயர் வாங்கிக் கொள்ளலாமே! அதனால் ரமேஷ் அந்த விஷயத்தை முடி போட்டு நன்றாக நினைவில் பதித்துக் கொண்டான்.

குஸுமாவுக்கு அவனுடன் பேசிக் கொண்டே இருக்க வேண்டும் என்று ஆசை. என்ன என்ன வெல்லாமோ கேள்விகள் கேட்டு அவனைத் துளைத்தாள். அடக்கமே உருவான ரமேஷ் சிறிதும் அலுத்துக் கொள்ளாமல் சலித்துக் கொள்ளாமல் ரத்னச் சுருக்கமாகப் பண்பு தொனிக்கப் பதில் அளித்து அவள் மனத்தைக் கவர்ந்தான்.

வாலிபப் பருவத்தை அடைந்த பெண்ணும் ஆணும் தனிமையில் சந்திக்க நேரும்பொழுது, வாலிபனின் கண்களில் ஒருவிதச் சஞ்சலம் குதித்தோடுவது இயல்பு அல்லவா? அதை ரமேஷின் கண்களில் காண முடியவில்லை. குஸுமாவை நேருக்கு நேர் நிமிர்ந்து பார்க்க முடியாவிட்டால் அவன் தன் விழி களைக் கவிழ்த்துக் கொண்டு விடுவான். அல்லது வேறு புறம் திருப்பிக் கொண்டு விடுவான். பேசும் பொழுது சிரிப்பை வர வழைக்கக்கூடிய பரிகாச வார்த்தை ஒன் றைக் கூட அவன் சொல்லவில்லை. குஸுமா தன்னைத் தாழ்ந்த நோக்கம் படைத்தவன் என்று தப்பர்த்தம் செய்துகொண்டு விடா மல் இருக்க வேண்டுமே என்பதற்காக வார்த்தைகளை நிறுத்து அளந்து உபயோகித் தான். குஸுமாவுக்கு அவனுடைய அந்தக் குணம் மிகவும் பிடித்துப் போயிற்று. "உங்க ளிடம் நான் ஒரு விஷயம் கேட்கணும்!'' என்று ஆரம்பித்தாள்.

"ஓ! தாராளமாகக் கேளுங்கள்!'' என்றான் ரமேஷ் மேலுக்கு. ஆனால் உள்ளூறக் குஸுமா என்ன கேட்பாளோ, யார் கண்டார்கள் என்ற கவலை அவனை வாட்டியது.

"ஒவ்வொரு வருஷமும் பிறந்த நாள் கொண்டாட்டத்தின் பொழுது அப்பா எனக்கு ஒரு நல்ல தொகை அன்பளிப்பாகக் கொடுக்கிறாரே, தெரியும் அல்லவா?''

"ஆமாம், இந்தத் தடவை கூடத்தான் கொடுக்கப் போகிறார்!''

"எத்தனை கொடுக்கப் போகிறார் என்று உங்களுக்குத் தெரியுமோ?''

"என்னிடம் 'செக்' எழுதச் சொல்லி யிருக் கிறார். வருஷா வருஷம் கொடுப்பதைக் காட் டிலும் இந்த வருஷம் தரப் போகும் தொகை அதிகமாயிருக்கும். இப்போதைக்கு இவ்வளவு தான் சொல்ல முடியும்!'' என்றான் ரமேஷ்.

"நீங்கள் சொல்வதி லிருந்து தொகை என்னவென்று சொல்லாமல் அதிசயத்தில் ஆழ்த்தப் போகிறீர்கள் என்று தெரிகிறது. அதனால் நீங்கள் சொல்லவும் வேண்டாம். நானும் கேட்கவில்லை. ஆனால் அவர் கொடுக் கும் அந்தப் பெரிய தொகையை நான் எப்படி நல்ல முறையில் உபயோகிப்பது என்று உங்களை அபிப்பிராயமாவது கேட்கலாம் அல்லவா?'' என்றாள் குஸுமா.

"உங்களுக்கு எது நல்லது என்று தோன்று கிறதோ, அப்படி உபயோகப்படுத்திக் கொள் ளுங்களேன்! உங்களுக்கு அன்பளிப்பாகக் கிடைக்கும் அந்தத் தொகையைப் பாங்கி யிலோ, ஆலையிலோ போட்டு வைத்தால் நல்ல வட்டி கிடைக்கும். மூலதனமும் பன் மடங்காக உயர்ந்து குவிந்து விடும்!'' என் றான் ரமேஷ்.

"எனக்கு இது தெரிந்த விஷயம்தான். ஆனால் நான் பணத்தை வட்டி மூலமோ வேறு விதமாகவோ பெருக்க விரும்ப வில்லை. முதலில், கிடைக்க விருக்கும் அந்தப் பணத் தைக் கொண்டு பத்திரிகை ஒன்று ஆரம் பிக்கலாம் என்று எண்ணி யிருந்தேன். ஆனால் இப்பொழுதோ அப்பாவே பத்திரிகை ஆரம்பிப்பது சம்பந்தமாகத் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறார் என்று தெரி கிறது. அதனால் எனக்குக் கிடைக்க விருக் கும் அந்தப் பணத்தை நல்ல வழியில் உப யோகப்படுத்த விரும்புகிறேன். முடியுமா னால் நீங்கள் ஒரு நல்ல வழி சொல்லுங்கள்!''

"எங்கு பார்த்தாலும் இப்பொழுது வேலை நிறுத்தப் பேச்சாக இருப்பதனால், தாங்கள்



"இன்றைக்குள்ளே அந்த வேலையைச் செய்து முடிக்கவில்லையானால் வேறு ஒரு ஆளை அழைத்துக் கொண்டு வந்துவிடுவேன்! நான் கடைசி முறையாகச் சொல்லி விட்டேன்."

"அழைத்துக் கொண்டு வந்திடுங்க, எசமான்! வேலை செய்ய எனக்கு உதவியா யிருக்கும்!"

---

தங்கள் சார்பில் ஆலைத் தொழிலாளிகளின் நலனுக்காக அந்தப் பணத்தைச் செலவிட்டால் நன்றாயிருக்கும் என்பது என் அபிப்பிராயம். இதனால் வேலை நிறுத்தப் புயல் கூடச் சீக்கிரமாக ஓய்ந்து விடக்கூடும் என்று எண்ணுகிறேன். அப்புறம் உங்களிஷ்டம்!"

"என் இஷ்டம் என்ன? தங்களுடைய இந்த யோசனை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. என் சார்பில் இந்தத் தொகை ஆலைத் தொழிலாளிகளின் நலனுக்காக நன்கொடையாக அளிக்கப்படுகிறது என்னும் செய்தியைத் தாங்கள் என் பிறந்த நாள் செய்தியாக அறிவித்து விடுகிறீர்கள் அல்லவா?"

"ஓ, தாராளமாக. தாங்கள் ஒரு காகிதத்தில் இதை எழுதி வைத்துக் கொள்ளுங்கள். நான் சரியான தருணத்தில் இதை அறிவித்து விடுகிறேன்!" என்றான் ரமேஷ்.

* * *

குஸுமா எழுந்து அறைக்கு வெளியே சென்றாள். ரமேஷும் அவளை வழியனுப்புவதற்காக அறையின் வாசல் வரையில் வந்தான். கொஞ்சதூரத்தில் இரண்டு மூன்று வேலையாட்கள் உட்கார்ந்திருந்தார்கள். ரமேஷ் வாசற்படியைத் தாண்டியதும் நின்று விட்டான். குஸுமா திரும்பி ரமேஷைப் பார்த்தாள். வினயமே வடிவமாக நின்று கொண்டிருக்கும் ரமேஷைப் பார்த்துக் குஸுமா இளநகை புரிந்தாள். பிறகு, "ஏன், ரமேஷ்! எதற்காக இவ்வளவு அடக்கமாகவும் வணக்கமாகவும் நடந்து கொள்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"யாருடன் பேசிக் கொண்டிருக்கிறேன் என்பதைத் தெரிந்து கொண்டு அதற்கேற்ற முறையில் நடந்து கொள்வதுதானே என் போன்ற ஊழியர்களுக்கு அழகு?"

சட்டென்று வேறு பதில் ஒன்றும் தோன்றாமற் போகவே, ரமேஷ் இந்தப் பதிலைச் சொல்லி வைத்தான்.

"ஆமாம், இப்பொழுது நீங்கள் யாருடன் பேசிக் கொண்டிருக்கிறீர்களாம்?" என்று குறும்பாகக் கேட்டாள் குஸுமா. வாலிபர்களோடு குறும்பாகப் பேசுவதில் சிற்சில சமயம் யுவதிகளுக்கும் அலாதி இன்பம் ஏற்படுவது இயல்புதானே?

"நான் என் எசமானருடைய பெண்ணுடன் பேசிக் கொண்டிருக்கிறேன்!"

"ஓகோ! உங்களுக்கு எசமானரின் பெண்ணைத்தான் தெரியும். குஸுமாவைத் தெரியாது. அப்படித் தானே?" என்று கேட்டாள் குஸுமா.

என்ன பதில் தேடியும் ரமேஷுக்கு அகப்படவில்லை. எனவே குழைவான குரலில், "தாங்கள் ரொம்பவும் உதாரகுணம் படைத்தவர்கள். இருந்தாலும் நான் என் நிலையறிந்து பழக வேண்டாமா?" என்றான்.

"உங்கள் நிலையா? என்ன அது?"

"நான் எங்கே? தாங்கள் எங்கே? என்னையும் தங்களையும் ஒரே தராசில் வைத்துப் பார்க்க முடியுமா? தாங்கள் என்னுடன் நட்புரிமை பாராட்டுவது என்பதை நான் கனவிலும் கருதிப் பார்க்க முடியுமா?" என்று கேட்டான் ரமேஷ்.

"தாங்கள் ஏழை என்பதுதானே, தாங்கள் சொல்வதன் பொருள்? கொஞ்சம் பாடத்தை மாற்றி வாசித்துப் பாருங்கள். தாங்கள் பணக்காரராக இருக்கிறீர்கள். நான் தங்களைப் போல் ஏழையாக இருக்கிறேன். அப்பொழுது......?" என்று குறுநகை புரிந்தவாறே கேட்டாள் குஸுமா.

அந்த ஹாஸ்யத்தில் இருதயத்தை ஈர்க்கும் மந்திர சக்தி ஊடுருவி ஓடிக் கொண்டிருப்பதை ரமேஷ் முதன் முதலாகக் கண்டான். அதற்குப் பதில் அளிக்காமல் அவன் மௌனம் சாதித்தான். அவனுடைய அந்த மௌனம் குஸுமாவுக்கு மிகவும் ஆறுதலா யிருந்தது.

"ரமேஷ்! நீங்கள் இம்மாதிரி உங்களை ஏழையாக எண்ணுகிறீர்கள். நீங்கள் இப்படி எண்ணுவது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை!" என்று கூறிய குஸுமா அதற்கு மேல் அங்கே ஒரு கணங்கூட நிற்கவில்லை. முகத்தைத் திருப்பிக் கொண்டு வெகு வேகமாக வெளியேறி விட்டாள். திகைப் பூண்டை மிதித்து விட்டவன் போல் ஒன்றும் புரியாமல் ரமேஷ் வியப்பும் பிரமிப்பும் தாண்டவமாடக் கல்லாய்ச் சமைந்து குஸுமா போவதையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றான். (தொடரும்)

# சுத்தம் சுகம் தரும்..



உற்சாக மூட்டும், புத்துணர்வு அளிக்கும், ஆனந்தமான ஸ்னானத்திற்கும் சரும சுத்தத்திற்கும் மேட்டூர் சந்தன சோப்பிற்கு ஈடெதுவுமில்லை.

பரிசுத்தமான, சீராகக் கலவை செய்யப்பட்ட அந்த சந்தன மணம் ஸ்னானத்தின் போது மட்டுமின்றி, நாள் முழுவதும் நீடித்து மனோஹரமளிக்கும்.

இன்றே உபயோகித்துப் பாருங்கள்!



## மேட்டூர்
## சந்தன சோப்

தயாரிப்பவர்: மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S. :: சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்டுகள்: சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்



## நீங்கள் இன்று

## உங்கள் பற்களை

# மக்ளீன்

## செய்தீர்களா?



ஆம் நான் இன்று என் பற்களை மக்ளீன்ஸ் பற்பசையைக் கொண்டு சுத்தம் செய்தேன்.

வசீகரம் வாய்ந்த புன்னகைக்கு ஆரோக்கியமான பற்கள் அத்தியாவசியம் ஆகையால் தான் நான் பிரிதி தினமும் இரு முறை எனது பற்களை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக்கொண்டு சுத்தம் செய்கிறேன். மக்ளீன்ஸிலுள்ள ஒரு தனிப்பட்ட பொருள் பற்களின் மேல் படிந்துள்ள மங்கலான பூச்சை நீக்கி பற்களுக்கு இயற்கையாக ஒளிரும் வெண்மையைக் கொணர்கிறது. அதிக வெண்மையான பற்கள், கெட்டியான ஈரு மற்றும் நறுமணமுள்ள சுவாசத்திற்கு மக்ளீன்ஸ் பற்பசையையே உபயோகியுங்கள்.

"...மக்ளீன்ஸ் பற்பசை இப்பொழுது கடைகளில் விற்கப்படும் எல்லா பேஸ்ட்களை விட மிக உயர்ந்தது."




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்

MTY-39-TAM



# சேவிகாராணி

பரதன்

“இன்று இங்கு திரள் திரளாகக் கூடி இருக்கும் ஆயிரக்கணக்கான சகோதர சகோதரிகள் முன்னிலையில், நமது ஒப்பற்ற தலைவியும், ஓய்விலாத் தொண்டருமான ஸ்ரீமதி பர்வதம் தேவி அம்மையாருக்கு “சேவிகா ராணி” என்ற பட்டத்தை உங்கள் சார்பாக மகிழ்ச்சியுடன் நான் வழங்குகிறேன்” என்று தலைமை தாங்கிய திருவாளர் தாண்டவராயர் கூறியதும் அங்கு குழுமிப் புழுங்கி யிருந்த ஐம்பத்தாறு ஆண்களின் பலத்த கைகளும், இருபத்துமூன்று பெண்ணரசிகளின் கோமளமான கரங்களும், எழுபத்து நாலு பால ரத்தினங்கள் (கைக் குழந்தைகள் உள்பட) மிருதுவான விரல்களும்—ஆக மொத்தம் 153 ஜதை கரதலங்கள்-ஒரே ஆரவாரத்துடன் கோஷித்தன.

“சேவிகா ராணி பர்வத தேவி மாதாஜிக்கு ஜே”, “வாழ்க நமது சேவிகா ராணி!” என்று அந்த 153 குரல்கள் அடங்கிய ஜன சமுத்திரத்தின் அலைகள் எழும்பி ஒலித்து, விண்ணையும் வானையும் பிளந்தன.

பத்திரிகைகளில் இத்தகைய செய்திக் குறிப்பு வெளி வந்ததில் ஆச்சரியம் இல்லை. வெளி வராவிட்டால்தான் ஆச்சரியம். “சேவிகா ராணி” பர்வதம் தேவி அம்மையார் எது செய்தாலும், அவருக்கு எது நேரிட்டாலும் (கடவுள் புண்ணியத்தில் எல்லாம் நலம்தான் நேரிடும் என்பதில் சந்தேகமில்லை) அது பத்திரிகைகளில் வந்தே தீர வேண்டும். அப்படிப் பத்திரிகையில் வராவிட்டால் அந்தப் பத்திராசிரியர் ஸ்ரீமதி பர்வதம் தேவியம்மையின் மின் தாக்குதலுக்கு இலக்காவார் என்ற பயம் பத்திரிகை உலகில் நிலவி யிருந்தது.

• • •

மேற்கூறிய பட்டமளிப்பு விழா ஆட்டுப் பேட்டை ஆலமரத்தா கோவில் தெருக்கோடியில் தீபாவளி யன்று இனிது நடந்தேறியது. இது ஏன் நடந்தேறியது! எப்படி நடந்தேறியது! என்பதை யெல்லாம் ஆராய்வது இப்போது அவசியமில்லை. “சேவிகா ராணி” பட்டத்துக்குப் பர்வதம் தேவி எப்படித் தகுதி யடைந்தார் என்பது ஒரு தனிக் கதை. ஒவ்வொரு பெண்ணரசியும், மாதர் மகாதேவியும், ஆண் சிங்கமும், சிங்கக் குட்டிகளும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியது; அவர்கள் எதிர்கால வாழ்க்கைக்கு அவசியம்.

“சேவிகா ராணி” என்ற பட்டம் பெறுவதற்கு வேறு யாருக்கும் தகுதியில்லையா! ஏன் பர்வதம் தேவியைப் பொறுக்கி எடுத்தீர்கள்!” என்று என்னைக் கேட்டால், நான் என்ன சொல்வது? இருக்கலாம்; ஆயிரம் “சேவிகா ராணிகள்” ஊரெங்கும் இருக்கலாம்; ஆனால் அந்தப் பட்டத்துக்குத் தகுதியானவர் தாம் தான் என்று பர்வதம் தேவியைத் தவிர வேறு யார் முன் வந்திருக்க முடியும்! பெண்களுக்கு இயற்கை என்று சொல்லப்பட்ட சங்கோசம், நாணம், தன்னடக்கம் என்ற குணங்களைச் சாக்கிட்டுக் கொண்டு மற்றவர்கள் பின் தங்கினால் அதற்குப் பர்வதம் தேவியா பொறுப்பாளி! அல்லது அந்தப் பட்டம் கிடைத்த பிறகு தங்களுக்குக் கிடைக்கவில்லையே என்று பொறுமைப் பட்டால் அதற்குப் பர்வதம் தேவி என்ன செய்ய முடியும், பாவம்!

சுயமுயற்சி, சுயதேவைப் பூர்த்தி என்ற உன்னத இலட்சியங்களை நடைமுறையில் அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடித்து வருபவர் நமது கதாநாயகி. ஆகவே அவர் தமது சொந்த முயற்சித் திறனால் “சேவிகா ராணி” என்ற பட்டம் பெற்றதில் ஒன்றும் அதிசயமில்லை.

• • •

பர்வதம் தேவி குழந்தைப் பருவ முதலே ஒரு தனிப் பிறவியாக விளங்கினார். ஒரு வயதிலேயே குழந்தை மழலையை விட்டு அப்பாவை அம்மா அருமையாக அழைக்கும் வசை மொழிகளையும், அந்த அம்மா பரதேவதையைக் குறித்து அப்பா பாடும் தோத்திரப் பாடல்களையும் தங்கு தடையின்றிப் பளிச்சென்று பிடித்துக் கொண்டது என்றால் குழந்தையின் அசாமான்யமான வாக்கு வன்மையைப் பற்றிக் கூற வேண்டியதில்லை. ஐந்து வயதுக்குள் பர்வதக் குஞ்சு அபூர்வக் குழவியாகத் தவழ்ந்தது.

ஆகாரத்தில் கூட மற்ற மற்ற குழந்தைகளைப் போல் அசட்டுப் பிசட்டென்று, தாய்ப் பாலையும் பசும் பாலையும் கிளாக்ஸோவையும் நம்பி வளரவில்லை. வீட்டுக்கு வருகிறவர்கள் தின்பண்டங்களாக எது கொண்டு வந்தாலும் அதை ஜீரணிக்கும் சக்தி பர்வதத்துக்கு அந்த வயதிலேயே இருந்தது. ஒருவரும் ஒன்றும் கொண்டு வராதபோது அடுக்களையில் எது அகப்பட்டாலும் திருப்தியடையும் சக்தியும் இருந்தது. ஒரு சமயம், நவராத்திரியின்போது, பக்கத்து வீட்டுக் கொலுவுக்குக் குழந்தை பர்வதத்தை

அழைத்துச் சென்றார் அவள் தாயார். பர்வதத்துக்கு, குழந்தைப் பருவத்திலிருந்தே, வீட்டை விட்டு வெளியே கிளம்பினால் அகோரப் பசியும் கூடவே கிளம்பி விடும். அன்றும் அப்படியே கிளம்பவே, பக்கத்து வீட்டுக் கொலுவில், ஒரு முழு வாழைப்பழத்தை விழுங்கி ஏப்பம் விட்டாள். அடுத்தபடி மாம்பழத்துக்குப் பாய்ந்ததும்தான் அந்த வீட்டு மாமி, கொலுவில் வைத்திருந்த பண்ணுருட்டி மண் வாழைப்பழச் சீப்பில் ஒரு பழத்தைக் காணுமற் போனதைக் கவனித்தார்.

“ஐயையோ! குழந்தை மண் பொம்மையைத் தின்று விட்டதே!” என்று அலறினாள்.

ஆனால் சொந்தத் தாயார் கவலைப்படவில்லை.

“அது சரி, அப்படித்தான்! கண்டதைத் தின்று விடும்” என்று பெருமையாகச் சொல்லிக் கொண்டாள் அவள் தாயார்.

குழந்தைப் பருவத்தில் தோன்றிய இந்தக் கபளீகர சக்தி, பர்வதத்தின் பிற்காலத்திலும் எவ்வளவோ உபயோகமாக இருந்தது. எதையும் ஜீரணிக்கும் சக்தி வயிற்றுக்கு மட்டும் இருந்தால் போதுமா? மனதிற்கும் வேண்டும்; முக்கியமாகப் பொது சேவையில் ஈடுபட்டவர்களுக்கு இது எவ்வளவு அவசியம் என்பதற்குப் பர்வதமே பெரும் அத்தாட்சி.

பர்வதத்தின் பெற்றோர்கள், மற்ற பெற்றோர்களைப்போல் தங்கள் பெண்ணையும் படிக்க வைத்தார்கள். பள்ளிப் படிப்பு முடிந்ததும் கலாசாலைப் படிப்புக்கும் வசதியளித்தார்கள். எல்லா வகுப்புகளிலும், பரீட்சைகளிலும், பர்வதம் நல்ல மார்க் வாங்கிப் புத்திசாலிப் பெண் என்று பெயரெடுத்தாள்.

பர்வதத்துக்கு என்றைக்குமே, பிறர் ஏதாவது சொன்னாலோ, எழுதினாலோ, அதைக் கண்ட மாத்திரத்தில் தன்னுடையதாக மாற்றிக் கொள்ளும் அசாதாரணத் திறமை இருந்தது. ஆகவே ஒவ்வொரு பரீட்சையிலும், முன்னால் உட்கார்ந்திருந்த லோகாம்பாள், குசலாம்பாள், யாரா யிருந்தாலும், அவர்கள் எழுதுவதை அப்படியே கண்ணினால் பார்த்தபடியே காகிதத்தில் பதிய வைப்பதில் பர்வதத்தை யாரும் மிஞ்ச முடியாது. ஆனால் காப்பி அடித்ததாகக் கண்டு பிடித்து யாரும் அவளைக் குற்றம் சொல்லாதது அவள் குற்றமில்லை.

* * *

கலாசாலைப் படிப்பு முடியும் தறுவாயில் வந்து சேர்ந்தார் கதாநாயகிக்குக் கதாநாயகனார் பராங்குசம். காப்பியடிக்காமலே பி. ஏ. முதலில் பாஸ் செய்து பட்டம் பெற்றுச் சீமைக்குப் போய் பாரிஸ்டர் பட்டமும் பெற்று வந்தவர். பராங்குசம் வக்கீல் தொழில் ஆரம்பிப்பதற்கு முன்னரே பர்வதத்தைக் கிருஹலக்ஷ்மியாக ஏற்றுக்கொண்டார். பராங்குசம் தொழிலில் பிரபல மடைந்தது எல்லாம் அவர் சொந்த சாமர்த்தியத்தால் மட்டுமில்லை; ஸ்ரீமதி பர்வதம் பராங்குசத்தின் அதிர்ஷ்டமும் பக்க பலமும்தான் காரணம் என்று அந்த அம்மாளே பெருமையாக எல்லோரிடமும் சொல்லிக் கொள்வது உண்டு.

கணவன் செல்வாக்கினால் மனைவி முன்னுக்கு வந்தாளா, மனைவியின் அதிர்ஷ்டம் கணவனைத் தொத்திக் கொண்டதா என்பது விவாதத்துக்குரியது. ஆகையால் அதைப் பொதுஜன ஜூரி தீர்ப்புக்கு விட்டு விடலாம்.



விவாகமானதிலிருந்தே ஸ்ரீமதி பர்வதம் பராங்குசம் அம்மையார் உலகத்தில் உள்ள மக்களை உத்தாரணம் செய்வது என்ற உன்னத நோக்கத்தைக் கைக் கொண்டார். பொது சேவையில்—குறிப்பாகப் பொதுக் கூட்ட மேடையில் — ஆர்வம் படைத்த பர்வதம் தேவியார், தன் கடமையை யார் கேட்டாலும் கேட்கா விட்டாலும் தானே முன் வந்து செய்ததில் தவறு ஒன்றுமில்லை. பெண்மணிகள் முன்னணியில் வந்து பொது சேவை செய்ய வேண்டும் என்று வாயளவில் சொல்கிறார்களே யொழிய யார் காரியத்தில் செய்கிறார்கள்! ஸ்ரீமதி பர்வதம் பராங்குசம் பெண்களுக்கு இது விஷயத்திலோர் எடுத்துக் காட்டாகவும், குன்றின்மேல் விளக்காகவும் விளங்கினார் என்றால் மிகையாகாது. (குன்று எது, விளக்கு எது என்று இங்கு விளக்கத் தேவை யில்லை!)

எந்தப் பொது விஷயத்தைப் பற்றி எந்தப் பொதுக் கூட்டம் கூட்டினாலும், அழைத்தாலும் சரி, அழைக்காத போனாலும் சரி, கடமையே கண்ணாயினார் என்ற ஒரே நோக்கத்துடன் பர்வதம் தேவியார் பிரசன்னமாக இருப்பார். அவர் பேசும் கூட்டங்களில் அவர் மேடைக்கு வந்ததுமே, ஜனங்களிடையே ஒரு பரபரப்பு ஏற்படும்; ஒரு சில விநாடிகளில் அவர்கள் மாயமாக மறைந்து வீட்டில் பதுங்கி விடுவார்கள். பர்வதம் தேவியார் தனக்கும், (தலைவிதியை நினைத்து உட்கார்ந்து உறங்கிக் கொண்டிருக்கும்) தலைவருக்கும் “ஓரிரண்டு வார்த்தைகள் சுருக்கமாகச் சொல்லி” அரை மணிக்குக் குறையாமல் பிரசங்கமாரி பொழிவார். பள்ளிக்கூடத்திலேயே “வாயாடி” என்று பெயர் வாங்கி, கலாசாலையில் “அதிகப் பிரசங்கி” மெடல் பெற்ற பர்வதம் தேவிக்குப் பொது மேடையில் ஏறிப் பேசுவது ஒரு பிரமாதமா, என்ன!

ஆரம்பத்தில் குறிப்பிட்ட பட்டமளிப்பு விழாவிலும் ஸ்ரீமதி பர்வதம் தேவியார் தனக்கே சொந்தமான எளிய மணிப் பிரவாள நடையில் “சுருக்க”மாக அரை மணி நேரம் பதிலளித்தார்.

“இந்த ‘ஆனரு’க்கு நான் அவ்வளவு ‘டிசர்விங்’ இல்லை என்பதை ‘பீல்’ பண்ணுகிறேன். இந்த ‘லேடிகா ராணி’ என்ற டைட்டிலுக்கு சோஷல் சர்விஸில் ரொம்ப எக்ஸ்பீரியன்ஸ் உள்ள பல சகோதரிகள் இருக்கிறார்கள். ஆனால் எனக்கு இந்த புளிக் ஆனர் கிடைத்தது எனக்கே ஒண்டராக இருக்கிறது. (பலத்த கரகோஷம்) நம் கண்ட்ரியில் இம்மீடியேட்டாகச் செய்ய வேண்டிய ‘கன்ஸ்ட்ரக்டிவ் வர்க்’கள் எவ்வளவோ இருக்கின்றன. அதாவது கட்டிடவேலை...... ஐமீன்...வாட்டு கால் இட்!” என்று கேட்டதும் தாம் சொர்க்கலோகத்துக்கு ஜெட் பிளேனில் போய், பிரிஜிடேரில் வைத்த அமிர்தத்தைப் பானம் செய்து கொண்டிருப்பதாக இன்பக் கனவு கண்டு கொண்டிருந்த தலைவர் திடுக்கிட்டெழுந்து, “...இந்தக் கூட்டத்தில் இவ்வளவு அழகாகப் பேசின நமது ‘லேடிகாராணி’ அம்மையாருக்கும், பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த

# பிரசித்திபெற்ற பாண்ட்ஸ் க்ரீம்களின் உதவியால்
# உங்கள் வதனத்தை மென்மையாகவும்
# நிர்மலமாகவும் வைத்திருங்கள்



**ஒவ்வொருவருடைய சரும இயல்புக்கும் உகந்தவாறு இரண்டு மேன்மையான க்ரீம்கள்.**

எழிலரசியாகத்திகழ எந்தப் பெண்மணியும் ஆசைப்படுவது சகஜமே! அதை உத்தேசித்தே பாண்ட்ஸ் க்ரீம்களின் தயாரிப்பாளர்கள், உங்களுக்கு உதவியாக இதோ இரண்டு அழகு சாதனங்கள் வழங்குகின்றனர். பாண்ட்ஸ் க்ரீம்கள், வரட்சி அல்லது நசநசப்பு மிகுந்த பிரதேசங்களில் உங்கள் சருமத்தைப் பாதுகாப்பதற்கென்றே தயாரிக்கப்பட்டவை; உலர்ந்ததோ, இல்லை எண்ணைப்பசையுடையதோ ஆன எத்தகைய சருமத்திற்கும் பொருத்தமான வகையில் அமைந்தவை. உலகமுழுவதிலும் உள்ள எழில் நங்கையர்களைப் போல் நீங்களும் இந்த க்ரீம்களை பிரதிதினமும் உபயோகித்து, உங்கள் வதனத்தை புதுமலர்ப் புதுமையோங்க வைத்திருங்கள்!



உங்கள் முகப்பொலிவை பாழ்படுத்தும் வரட்சியான பிரதேசங்களில் — பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உங்களுக்கு தேவை. அதிலடங்கிய செழிப்பான எண்ணைகள் சருமத்திற்கு சமனூட்டி, கடுமையான வெயில் மற்றும் வரட்சிக்காற்றிலும் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.



வெப்பம், நசநசப்பு மிகுந்த பிரதேசங்களில் — அல்லது சருமம் இயற்கையாகவே எண்ணைப்பசையுடையதானாலும்—பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள். இம்மெல்லிய க்ரீம், சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் செத்த ஜீவாணுக்களையும் வெளியேற்றி உங்கள் மேனிக்கு செளமியமான பாதுகாப்பு அளிக்கின்றது.

உங்களுக்கிஷ்டமான பாண்ட்ஸ் க்ரீமை நாள்தோறும் உபயோகியுங்கள். சொற்ப தினங்களில் உங்கள் வதனம் அன்றலர்ந்த மலர்போல் மென்மையாக, புதுமைப் பொலிவுடன் விளங்குவதைக் காண்பீர்கள்—உணரவும் செய்வீர்கள்!

## உலகில் எழிலரசிகள்
## உபயோகிக்கும் க்ரீம்கள்

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்




P. 9945

உங்களுக்கும், என்னைக் கௌரவித்ததற்காக என் மனமார்ந்த வந்தனத்துடன் கூட்டத்தை முடிக்கிறேன்'' என்று முடிவுகட்டி விட்டார்.

ஸ்ரீமதி பர்வதம் பராங்குசத்திற்கு ஒரு தனித் திறமை உண்டு; அது பேச்சுத் திறமை மட்டுமல்ல; நாலு பேரை ஒன்று கூட்டி வேலை வாங்கும் திறமை. அது அவருக்கு அபரிமிதமாக இருந்தது. அதில் அவருடைய முதல் இலக்கு பாரிஸ்டர் பராங்குசம் தான். ஆகவே, ஸ்ரீமதி பர்வதம் எந்த மேடையில் பேசினாலும் அந்த மேடைக்கு முன்னால், வெளிச்சம் போடுபவர்கள், ஒலிபெருக்குபவர்கள், நாற்காலி மேஜை போடுகிறவர்கள், ஜமக்காளம் விரிப்பவர்கள், — இந்தத் தொழில் பிரதிநிதிகள் தவிர—கையிருப்பிலேயே கூப்பிட்ட குரலுக்குத் தயாராகஆஜராகும் 'ரெடிமேட் ஆடியன்ஸ்' ஆண் பெண் குழந்தை அடங்கலாக - ஆக மொத்தம் 153 மகா ஜனங்கள், ஆரம்பத்தில் குறிப்பிட்டபடி கூடி விடுவார்கள். பாரிஸ்டர் பராங்குசத்தின் சிநேகிதர்களில் தாட்சிண்யம் மிகுந்தவர்கள் சிலர், அவ்வப்போது அவர் வலையில் சிக்கும் கட்சிக்காரர்கள், ஆபீஸ் குமாஸ்தா, டைபிஸ்ட், பையன், பராங்குசத்தின் தமக்கை பிள்ளை, சகோதரர், சகோதரர் மைத்துனர், அதேபோல் பர்வதம் தேவியின் சொந்தக்காரர்கள், நண்பர்கள், தோழிகள் எல்லோரையும் சேர்த்தால் ஒரு சிறிய ஹால் நிறைவதற்கு வேண்டிய ஆட்கள் அகப்படுவார்கள். நாளடைவில் இந்தச் சொந்தக்காரர்களுக்கு, சொந்தக்காரர்களும் சேர்ந்து – இப்படி சங்கிலி கோர்த்தது போல்-கூட்டம் பெருகி, பிறகு ஒரு சமயம் "ஆயிரக் கணக்கில்" கூட ஜனங்கள் ஸ்ரீமதி பர்வதம் தேவியாரின் பொன்மொழி கேட்டு ஆனந்தித்து ஆர்ப்பரிக்கத் தொடங்கினார்கள்.

* * *

எந்தக் காரியத்தையும், வெற்றியுடன் உலகமறியச் செய்ய வேண்டுமானால் அதற்குத் தயக்கம் கூடாது; முன்னோக்கி முட்டிச் செல்லும் திறமை வேண்டும்; மனோ திடம் வேண்டும். தடைகள் தடங்கல்கள் ஏற்பட்டால் லட்சியம் செய்யாமல் அவற்றைத் தகர்த்துச் செல்லும் "தள்ளு சக்தி" வேண்டும். பரிபூரணமாக ஸ்ரீமதி பர்வதம் தேவிக்கு இந்தச் சக்தியைச் சக்தி தேவி அருளியிருந்தாள். மகாமேரு பர்வதமே எதிரில் நின்றாலும் அதை நகர்த்தித் தள்ளிவிட்டு முன்னேறும் திறன் பர்வதம் தேவியிடம் இருந்தது. அதுதான் அந்த அம்மாள் எடுத்த முயற்சிகளில் எல்லாம் வெற்றியளித்தது.

இல்லாவிட்டால் ஸ்ரீமதி பர்வதம் பராங்குசம் பல இயக்கங்களிலும், பொது சேவைகளிலும் ஈடுபட்டிருக்க முடியாது. கலாசாலையில் படிக்கும் போதே, குடும்ப வாழ்க்கை நடத்துவது எப்படி என்பதைப் பற்றிக் கலாசாலை மேடையிலும், பத்திரிகைகளிலும் விளாசித் தள்ளி இருக்கிறாள். அப்பொழுதே மாதர் நல சங்கங்களில் பெரும் பங்கெடுத்துக் கொண்டிருந்தாள். சுகாதார இயக்கப் போரில் இறங்கி, ஊர் சுத்தி ஊர்வலத்தின் முன்னணியில், பட்டுக் குஞ்சலம் கட்டிய துடைப்பத்துடன் குமாரி பர்வதம் காட்சியளிப்பதைப் பத்திரிகைகளில் வந்த படங்களில் பார்த்து அவளுடைய பெற்றோர்களும் மற்றோர்களும் மகிழ்ந்தார்கள்.

சிசு சம்ரக்ஷணை சங்கத்தின் உப தலைவியாக ஸ்ரீமதி பர்வதம் தேவியார் விளங்கி வருவது ஆச்சரியமில்லை. ஸ்ரீமதி பர்வதம் தேவியாருக்குச் சந்ததி சந்தானம் இன்னும் ஏற்படாததால் ஊர்க் குழந்தைகளைச் சம்ரக்ஷிப்பதற்குத் தருணமும் அவகாசமும் சம்பூரணமாக இருக்கிறது.

இப்பொறுப்பை ஸ்ரீமதி பர்வதம் தேவி வகிக்க ஆரம்பித்ததிலிருந்து குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாவதை நிறுத்தி விட்டன என்று ஒரு புகார் ஊரில் பரவி வந்தது. ஏனென்றால் அவர்கள் பெரியவர்கள் ஆகிவிட்டால் சிசு சம்ரக்ஷிணி அன்னை பர்வதம் தேவியின் ஆதரவும் கடாக்ஷமும் கிடைக்காதே என்ற பயம் ஏற்பட்டுக் குழந்தைகள் வளராமல் நின்று விட்டனவாம்!

ஸ்ரீமதி பர்வதம் தேவியின் சேவை, கேவலம் இரண்டு கால் மானிடப் பிராணிகளுடன் நின்று விடவில்லை. வாயில்லா நாலு கால் ஜந்துக்கள் மேலும் அவருடைய பரந்த உள்ளம் படர்ந்தோடியது.

''பசு சேவா சமிதி'', ''குதிரை பாதுகாப்புக் குழு'' முதலிய ஸ்தாபனங்களிலும் ஸ்ரீமதி பர்வதம் முக்கிய பங்கு எடுத்துக்கொண்டு வருகிறார்.

பசுக்களுக்கும் குதிரைகளுக்கும் அடிக்கும் தசையைக் கண்டு பொறாமை கொண்ட, குதிரைகளின் ஒன்று விட்ட சகோதரர்களான வெள்ளி மூக்கு அசுவங்கள் ஸ்ரீமதி பர்வதம் தேவியிடம் தூது போய்த் தங்களையும் அன்பு கூர்ந்து பராமரிக்கும்படி வேண்டிக் கொள்ளப் .போவதாகக் கூட ஒரு வதந்தி உலவுகிறது.

இம்மாதிரி பொது சேவையில் உழைத்து உழைத்து ஏற்படும் அலுப்பைப்போக்கிக் கொள்ள ஒரு சமயம், ஸ்ரீமதி பர்வதம் தேவியார் தம் கணவருடன் உதகமண்டலம் போயிருந்தார். பாரிஸ்டர் பராங்குசத்துக்கு நீலகிரி தோட்ட சொந்தக்காரர் ஒருவர் கட்சிக்காரர். அவருடைய அழைப்பின் பேரிலும் செலவிலும் தான் போனார்கள். அங்கு ஒருநாள் வேட்டை நாய்கள் வளர்க்கப்படும் விடுதியைப் பார்வையிடச் சென்றபோது அந்தப் பிராணிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் ஸ்ரீமதி பர்வதம் தேவிக்கு ஒரு ஆர்வம் ஏற்பட்டது. உதக மண்டலத்தில் ''வேட்டை நாய் வார''த்தை ஸ்ரீமதி பர்வதம் தேவி அந்த வருஷம் துவக்கி வைத்தார். அதைத் தொடர்ந்து வருஷா வருஷம், இந்த வாரத்தை விழாவாகக் கொண்டாடுவதற்குக் கோடை காலத்தில் ஸ்ரீமதி பர்வதம் தேவி, கணவருடன் உதக மண்டலத்தில் ஆஜராகிறார் என்றால் அதிசயமில்லை. அந்த விழாக் கமிட்டி அவர்கள் போக வருவதற்கும் தங்குவதற்கும் உள்ள வசதிகளை ஏற்றுக் கொண்டது பிரமாதமல்ல. வேட்டை நாய்கள் பாடும் வேட்டைதான் என்று சொல்லவேண்டுமா!

கலையும் இலக்கியமும்கூட திருமதி சேவிகாராணியின் திருவருளுக்குப் பாத்திரமாயின. ''நாட்டிய அபிவிருத்தி நிகேதனம்'' ''சங்கீத புனருத்தாரண நிலையம்,'' ''ஓவிய வளர்ச்சி சாதனம்'' ''காவியக் கிளர்ச்சி கழகம்,'' ''நாடக மறுமலர்ச்சி கேந்திரம்'' ''சினிமா பார்க்கும் கலை இயக்கம்,'' ''எழுத்தாளிகள் (பெண் எழுத்தாளர்) முன்னேற்றப் படை''-முதலிய ஸ்தாபனங்களை ஏற்படுத்தி நடத்துவதில் ஸ்ரீமதி பர்வதம்தான் முன்னின்று சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

* * *

சமீபத்தில் எனக்கு ஓர் அழைப்புக் கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தின் ஒரு பாதி பூராவும் ஒரே சங்கங்கள், சபைகள், சமிதிகள், சமாஜங்கள், சமாதிகள் பெயர்கள் நீல மையிலும், ஒவ்வொரு ஸ்தாபனத்தின் கீழும் ஸ்ரீமதி பர்வதம் தேவியின் பெயர் ஏதாவது ஒரு பொறுப்பாளர் ஹோதாவில் சிவப்பு மையிலும், அச்சிடப்பட்டிருந்தது. எல்லாவற்றிற்கும் மேல் ஸ்ரீமதி பர்வதம் தேவியின் திருமுகம் புன்முறுவலுடன் அச்சிடப்பட்டுக் காட்சி

யளித்தது. கடிதத்தில் சாக்ஷாத் பர்வதம் தேவி யாரே கையொப்பம் இட்டிருந்தார்கள் — "ஸேவிகா ராணி" என்ற மூகப்புடன்.

கடிதத்தில் மறுநாள் கூடப்போகும் கூட்டத்துக்கு என்னை அழைக்கப்பட்டிருந்தது. கூட்டம், "அநாமதேய எழுத்தாளர்கள் விமோசன சங்க"த்தை ஆரம்பித்து நடத்துவதற்காகக் கூட்டப்படுவதாகக் கண்டிருந்தது. அழைப்பு எனக்கு எதற்கு வந்தது என்ற காரணம் விளங்கிற்று. கூட்டத்துக்குப் போனேன். வழக்கத்தை விட அன்று அதிக ஜனங்கள் வந்திருந்தார்கள்.

*154 பேர்கள் கூடி இருந்தார்கள். (நான்தான் அந்த 154 வது பேர்வழி.)*

"ஸேவிகா ராணி" ஸ்ரீமதி பர்வதம் பராங்குசம் தேவிதான் எங்கள் சங்கத் தலைவர் என்பதை நான் பிரேரேபிக்காமலே நீங்கள் ஆமோதித்திருப்பீர்கள்.

என்னுடைய விமோசன தினத்தை எதிர்பார்த்து ஏங்கி நிற்கிறேன். பத்திரிகைகளாலும், பிரசுராலயங்களாலும் இதுவரை நிராகரிக்கப்பட்ட என்னுடைய அருமையான கட்டுரைக் குவியல்களைச் சமர்ப்பிக்கக் காத்துக் கொண்டிருக்கிறேன். "ஸேவிகா ராணி"யின் அருளை முன்னிட்டு இந்தக் கட்டுரையையும் "ஸேவிகா ராணி பர்வதம் தேவி"க்கே தீபாவளிக் காணிக்கையாகச் சமர்ப்பணம் செய்கிறேன்!

# மயிலையில் துர்க்கா பூஜை

**ஆர். சேஷாத்திரிநாதன்**

**து**ர்க்கா தேவியென்று உலக சக்தியைக் கொண்டாடுவது இயல்பே. அப்பொழுது பெண் ரூபமாகவே பரப்பிரம்மத்தை நினைக்கிறோம். துர்க்கா தேவியை வழிபடுவது வங்காளத்தில்தான் பிரபலமா யிருந்த போதிலும், சக்தி சொரூபத்தை வழிபடுவது தென்னாட்டிலும் வெகு காலமாக நடைபெற்று வருகிறது.

துர்க்கை பூஜை வங்க தேசத்தில் பெரும் விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. சென்னையில் சென்ற மூன்று வருஷங்களாக துர்க்கை பூஜை கொண்டாடப்பட்டு வருகிறது. இருபது வருஷங்களுக்கு முன்னர் இப்படிக் கொண்டாடப் பட்டு வந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ பகவானுடைய வழிபாடெல்லாம் துர்க்கா தேவிக்கே



யாகையால் சென்னை, மயிலாப்பூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் இந்த விழா நடைபெற்றது மிகப் பொருத்தமா யிருந்தது. பக்தர்கள் இந்த விழாவைச் சிரத்தையுடன் நடத்த முற்பட்டார்கள். வெற்றிகரமாக நடத்தி விட்டார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், அன்னை சாரதாமணி தேவியார் இவர்களுடைய அருளினால் துர்க்கை பூஜை மிகவும் விமரிசையாக நடைபெற்றது. பரமஹம்ஸரின் சீடர்களான மடத்தைச் சேர்ந்த சந்நியாசிகள் மிகவும் பக்தி சிரத்தையோடு பூஜையைக் கவனித்துக் கொண்டனர். மகா புனிதமான இந்தத் துர்க்கை பூஜையைத் தரிசிக்க மக்கள் பெருந் திரளாகக் குவிந்து விட்டனர்.

அன்னை சாரதாமணி தேவி அவதரித்து நூறு வருஷங்களாகின்றன. இந்த நூற்றாண்டு விழாவும் கொண்டாடப்படப் போகிறது. அதற்கு முன் துர்க்கா பூஜை நடைபெறுவது மிகவும் விசேஷமான நிகழ்ச்சியாகும்.

துர்க்கா தேவி பூஜை நடைபெற்ற ஐந்து நாளும் (அக்டோபர் 3உ முதல் 7உ வரை) பஜனைகளும், பூஜைகளும், உபந்நியாசங்களும், சங்கீதக் கச்சேரிகளும், கதாகாலக்ஷேபங்களும், மற்றும் ஆராதனைகளும், முடிவில் தேவியின் உருவ ஊர்வலமும் எல்லாம் கோலாகலமாய் நடந்தன. மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து தரிசனம் செய்து போனார்கள். அந்த வைபவம் பார்க்கக் கண்கொள்ளாக் காட்சியா யிருந்தது.

ஏழை மக்களுக்கு விருந்துபசாரம் விழா நாளில் நடைபெற்ற மகிமையும் வியக்கத் தக்கது. சுமார் நாலாயிரம் ஏழைகளுக்கு விருந்தளிக்கப் பட்டது. இந்த விழாவை ஒழுங்காக நடத்தப் போலீஸ் உதவியைத் தேடவில்லை. மாணவ மாணவிகள் நூற்றுக் கணக்கில் வந்து உதவிக் கொண்டனர்.

ஐந்தாம் நாள் குறிப்பிட்ட நேரத்தில் ஊர்வலம் ஆரம்பித்தது. ஜனங்கள் மூன்றரை மணிக்குக் குவிந்து விட்டார்கள். தொண்டர்கள் இருபுறமும் மக்களை ஒழுங்கு படுத்தினார்கள். வாத்திய கோஷம் முழங்கியது. அலங்கரிக்கப்பட்ட துர்க்கையின் அழகிய பிம்பம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப் பட்டது. ஜனங்கள் திரள் திரளாக வந்து ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

**து**ர்க்கையின் பிம்பத்தைக் கடலில் முழுகச் செய்ய ஒரு கட்டு மரம் கொண்டு வந்தார்கள். அதில் அம்மனை வைத்துக் கொண்டு வெகு தூரம் சென்ற பின் கடலில் துர்க்கை அம்மனை இறக்கினார்கள். சந்நியாசிகளும் பிரம்மச்சாரிகளும் மற்றும் பக்தர்களும் கடலில் நீராடினார்கள்.

பகுத்தறிவும் கல்விப் பயிற்சியும் முக்கியத்துவம் பெற்றிருக்கும் இந்த நாளிலே விஞ்ஞானத்துக்கு இசைந்த சமயக் கொள்கைகளைத் தேடுகின்றனர் மக்கள். இத்தகைய மக்களுக்கு உள்ளம் திருப்தியடையும்படி திருவிழாக் கொண்டாட்டமும் சமய உணர்ச்சியை எழுப்பும் வசதியும் இருக்க வேண்டியது மிகவும் அவசிய மல்லவா!



## கடினமான வேலை

## கடினமான விளையாட்டு



சுறுசுறுப்பான வேலைகளுக்கு (சுறு சுறுப்பான விளையாட்டுகளுக்கும்) உடலில் ஏராளமான தேக்க சக்தி தேவை. இது சாதாரண உணவில் எப்போதுமே கிடைக்காது. இந்த சந்தர்ப்பங்களில் 'ஓவல்டின்' அதிகப்படி சக்தி அளித்து, உடலையும், மூளையையும், நரம்பையும் பலப்படுத்துகிறது.

சுறுசுறுப்பான, சந்தோஷமான அன்றாட வாழ்க்கைக்கு ஓவல்டின் இன்றியமையாத பதில் கொடுக்கிறது!

விநியோகஸ்தர்கள்:
கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ.,
(இந்தியா) லிமிட்.

# -அருந்துங்கள் ருசிகரமான

# ஓவல்டின்




**... ஊக்கத்திற்கும்**
**உற்சாகத்திற்கும்!**

ரேடியோ சிலோனிலிருந்து ஓவல்டின் அமெச்சூர் நேரங்களை கேளுங்கள்:
(ஹிந்தி-41.72 மீட்டர்கள்), சனிக்கிழமைகள் இரவு 8 முதல் 8-30 மணி.
(இங்கிலீஷ் 9520 கிலோசைகிள்ஸ் 31 மீட்டர்கள்)
ஞாயிறுகள் இரவு 8 முதல் 8-30 வரை

IV.459




# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## உங்களுக்கு விசையின் வேகத்தை ... துரிதமாக அளிக்கிறது!



கடுமையான டென்னிஸ் விளையாட்டைக் காட்டிலும் தினசரி அலுவல்களுக்கு அதிகச் சக்தி வேண்டும். ஆகையால் தான் ஒவ்வொரு ஸ்திரீக்கும் தினசரி ஆகாரத்தோடுகூட வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் அளிக்கும் அதிகப்படி போஷணை தேவையாயிருக்கிறது. அது உங்களுடைய தினசரி வாழ்க்கைக்குத் தேவையான விசை வேகத்தை யளிக்கிறது.

தினசரி உட்கொண்டால், நாவிற்கினிய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் ஓர் ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும். அது உங்களுடைய தேகம் முழுவதிலும் அதிகப்படி சக்தி உண்டாகச் செய்கிறது. களைப்பு, இருமல், ஜலதோஷம் முதலியவைகளை எதிர்க்கும் வன்மையை யளிக்கிறது. புதிய தாய்மார்களுக்கும், நோயிலிருந்து சொஸ்தமடைபவர்களுக்கும் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நல்ல ஆரோக்யத்தை யளிக்கிறது.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உட்கொண்டு புதிய, மகிழ்வுறும் ஸ்திரீயாயிருங்கள்...உங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் ஒரு ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும்!




## ஆரோக்கியத்தைத் தரும் வாடடர்பரீஸ் காம்பவுணடை உங்களை சௌக்யமாகவைக்க உட்கொள்ளுங்கள்

NAS 267




காமினியின் உள்ளம் குமுறிக் கொந்தளித்தது. கடந்த பத்து வருட காலமாக உண்டாகாத ஏக்கம் இப்போது மட்டும் ஏற்படுவானேன்? மனித உள்ளமே ஒரு விசித்திரமான அமைப்புடையது. மனத்துக்கு நிறைவு எதனால் தான் ஏற்படுகிறது என்பதை யார்தான் அறுதியிட்டுக் கூற முடியும்? அல்லது இன்னின்ன விஷயங்களில் மட்டும்தான் மனக்குறை ஏற்படும் என்று யாரால்தான் எல்லை வகுக்க முடியும்?

இன்று எதை நினைத்து அவள் உள்ளம் இடிந்து கிடக்கிறதோ, அதே சம்பவம் இன்று மட்டும் புதிதல்லவே! கடந்த பத்து வருட காலமாக இல்லாத நிகழ்ச்சி எதுவும் இன்று மட்டும் ஏற்பட்டுவிடவில்லையே! பத்து வருடங்களுக்கு முன்பு இதே சம்பவம் இலேசாக அவள் உள்ளத்தில் நிழலாடியது மட்டும் உண்மைதான். ஆனால் அன்றிருந்த சூழ்நிலையில் அவளால் எதையும் எளிதில் துடைக்க முடிந்தது.

அப்போது மணமான புதிது. தலை தீபாவளி. 'புது மணத் தம்பதிகளுக்கு வாழ்க்கையிலேயே நிகரில்லா இன்பமளிக்கும் நாள். கேளிக்கையும் குதூகலமும் நிறைந்த அந்த இன்பத் திருநாளை எதிர்பார்த்து ஏங்கி நிற்கும், புது மணம் புரிந்த இளம் உள்ளங்கள். அந்த ஒரு நாளையே தனது கணவனுக்காகத் தியாகஞ் செய்ததில் கொஞ்சம் கூடத் துன்பத்தை யனுபவிக்கவில்லை காமினியின் இளம் உள்ளம். ஆனால் இன்று?

காமினி நடராஜனைக் கரம் பிடித்து இல்வாழ்வை ஏற்றுக் கொண்டு பத்து வருடங்கள் ஆகிவிட்டன. இருவரும் ஒருவரையொருவர் நன்கறிந்து கொண்டே தங்கள் தங்கள் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொண்டனர். அதாவது இருவரும் காதலித்து மணந்து கொண்டனர்.

சாதாரணமாக, பெற்றோர்கள் பார்த்து 'இவன்தான் உன் கணவன், இவள்தான் உன் மனைவி' என்று கூறுவதுதான் சம்பிரதாயம். அப்படித்தான் நம் நாட்டில் கல்யாணங்கள் நடைபெறுவது. அதுதான் நமது சமூகங்களில் ஊறிப் போன பழக்கம். அப்படி நடைபெறும் திருமணங்களில் எங்கோ ஒன்றில் தகராறு, கோளாறு ஏற்படுவதைப் பார்த்திருக்கிறோம். பெரும்பாலோருடைய வாழ்க்கை நன்றாக, மிக நன்றாக அமைந்துள்ளதையும் பார்த்து வருகிறோம்.

அப்படி நடைபெறும் விவாகங்களில்கூட புதுத் தம்பதிகள், மணமான புதிதில் அநுபவிக்கும் இன்பத்துக்கு இணையே இராது. காதல் மணம் புரிந்து கொண்ட நடராஜனும் காமினியும் வையந்தனில் வாழும் சொர்க்கம் வேறில்லை என்பதாக வாழ்ந்தார்கள். அப்போதுதான் தலை தீபாவளி நெருங்கிக் கொண்டே வந்தது.

தீபாவளிக்கு அழைப்பதற்காகக் காமினியின் தந்தை வந்திருந்தார். அன்று நடராஜன் நடந்து கொண்ட விதம் காமினியினால் சகிக்க முடியவில்லை. மாமனாரிடம் தத்துவம் பேசினான் நடராஜன்.

'தீபாவளிப் பண்டிகைக்கு என்ன அர்த்தம் இருக்கிறது. இதில் ஒரு கொண்டாட்டமா? மேலும் இது தமிழ் நாட்டுப் பண்டிகை இல்லையே! தமிழர்கள் இதைக் கொண்டாடுவது எந்த வகையில் பொருத்தம்? அதற்குப் பொங்கல் பண்டிகையைச் சொல்லுங்கள். அது தமிழர் பண்டிகை. அதைக் கொண்டாடுங்கள், அப்போது நாங்கள் வருகிறோம்!' என்று தீர்மானமாகக் கூறி விட்டான் நடராஜன், தனது மாமனாரிடம்.

மாமனார் உள்ளூறச் சிரித்துக் கொண்டார். அவர் உலகம் தெரிந்தவர். இளைஞர்களின் உள்ளங்களில் இன்றைய நாளில் எப்படியெல்லாம் விஷ வித்துக்கள் நாட்டப்படுகின்றன என்பதை அறிந்தவர். புதுமையை நாடித் துடித்துக் கொண்டிருக்கும் இளம் உள்ளத்திற்கு, யாராவது புதுமை என்ற பெயரோடு எதையாவது கூறி வைத்தால், அந்த உள்ளம் அதை உடனே பற்றிக் கொள்வதுண்டு. அது எந்த தர்க்க வாதங்களையும் கேட்காது. நியாயத்தை, உண்மையை உணரக்கூட மறுக்கும். ஆனால் காலந்தான் அதை மாற்றும். நாம் கூறும் நியாயங்கள் அதை மாற்றாது என்பதை அநுபவ பூர்வமாக அறிந்து கொண்டவர்.

"மாப்பிள்ளை! பண்டிகை யென்பதெல்லாம் நாம் தான் ஏற்படுத்திக் கொண்டது. இதற்கு வேறு எந்தவித காரணமுமில்லை. வாழ்க்கையில் ஒருநாள் எல்லோரும் மகிழ்ச்சியுடன் விளங்க வேண்டும். கவலைகள், கஷ்டங்கள் இவைகளை யெல்லாம் மறந்து இன்புற வேண்டும் என்பதற்காகத் தான் பண்டிகைகள் சிருஷ்டிக்கப் பட்டன. இந்த மகிழ்ச்சியை நம்மை நிரந்தரமாக அநுபவிக்கச் செய்ய என்ன நியதியை உண்டாக்குவது என நம் மூதாதையர் சிந்தித்தனர். கதை ரூபமாக, தெய்விகத் தன்மையைக் கலந்து கொடுத்து விட்டுச் சென்றால் நமது மக்கள் வழி வழி வந்து பிற்காலத்திலும் இன்பம் அநுபவிக்கட்டுமே என முடிவுகட்டி இப்படி உண்டாக்கி யிருக்கிறார்களே தவிர வேறு எவ்வித நோக்கமும் இல்லை. இப்போது அதெல்லாம் என்னத்துக்கு? நீங்களும் காமினியும் வந்து நமது வீட்டில் சிலநாள் தங்கி வருவது என்பதாக வைத்துக் கொள்ளுங்களேன். காமினிக்கும் தாயாரைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை இருக்குமல்லவா?"

நடராஜன் இதையெல்லாம் ஏற்றுக்கொள்பவனாக இல்லை. அவன் மனம் தர்க்கம் செய்யத்தான் விரும்பியது. ஆனால் கூறுவது மரியாதைக்கு உகந்த மாமனா ராயிற்றே! எனவே, "நீங்கள் வேண்டுமானால் காமினியைக் கேட்டு அவள் விரும்பினால் அவளை மட்டும் அழைத்துச் செல்லுங்கள். நான் வரவில்லை யென்பதால் அதற்கு எவ்வித நோக்கமும் இருப்பதாக நினைத்து விடாதீர்கள். என் மனத்துக்குப் பிடிக்காத எதையும் என்னால் செய்ய முடியாது. பொங்கல் பண்டிகைக்கு நீங்கள் கூப்பிடா விட்டாலும் இருவரும் வருகிறோம். நன்றாகக் கொண்டாடுவோம். என்ன காமினி அப்பாவுடன் நீ மட்டும் போய் வருகிறாயா?" என்றான்.

மாமனார் குறுக்கிட்டு, "மாப்பிள்ளை! வருவதாக இருந்தால் இருவரும் சேர்ந்து வாருங்கள். காமினியை மட்டும் அவள் விரும்பினால்கூட அழைத்துப் போகும் உத்தேசம் எனக்கில்லை" என்றார்.

"அப்பா! அவரிஷ்டம்தான் என் இஷ்டமும். பொங்கலுக்கே வருகிறோமே, அப்பா!" என்றாள் காமினி.

"சரி அம்மா. உங்கள் இருவர் இஷ்டமே என் இஷ்டமும்" என்று கூறி அந்தப் பேச்சை அத்துடன் முடித்து விட்டார்.

பொதுவாக நடராஜன் மிகவும் நல்ல குணம் படைத்தவன். நன்கு படித்தவன். விவேகி. நாட்டில் நிலவி வரும் பலதரப்பட்ட கொள்கைகளில் எதையும் அவன் விரும்பியவனல்ல. அவன் தனக்கென்றே சில கொள்கைகளை வகுத்துக் கொண்டு அதன் படி வாழ வேண்டுமென்று முடிவு செய்து கொண்டான். சம்பிரதாயம் என்பதற்காக எதையும் செய்வதை அவன் விரும்புவதே இல்லை. பழைய பழக்கங்கள் என்பதற்காக மட்டும் எதையும் கைக்கொள்ளுவதில்லை. எதைப் பற்றியும் நன்கு சிந்திப்பான். காரண காரியங்களைப் பற்றி ஆராய்வான். அவசியமா என்பதை நினைப்பான். நல்லவை எதையும் தள்ளுவதில்லை. அவன் ஆராய்ச்சிக்குள் அடங்காததை, அப்பாற்பட்டதை ஒதுக்கி விடுவான். அநுபவக் குறைவினாலும், வயதுக் குறைவினாலும் சில விஷயங்கள் அவனுக்குப் பிடிபடாமல் போவதுண்டு. நடராஜன் பேரில் ஏதாவது குற்றம் சுமத்தலாமென்றால் இது ஒன்றுதான். அவனைப் பற்றி நன்கு தெரிந்து கொண்ட அவனுடைய மாமனார் வருத்தப் படவில்லை; கவலைப்படவு மில்லை. காலந்தான் இப்படிப் பட்டவர்கள் பிடிவாதத்தை மாற்ற வேண்டும் என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

காமினி அப்படி யெல்லாம் நினைக்கவில்லை. இந்த உலகத்தில் தன் கணவனைக் காட்டிலும் அறிவாளியோ, திறமைசாலிகளோ இல்லை யென்ற கருத்து அவள் உள்ளத்தில் ஆழப் பதிந்திருந்தது. அவன் கூறுவதுதான் அவளுக்குத் தேவ வாக்கு. முதலிலெல்லாம் தீபாவளிக்குச் செல்ல வேண்டு மென்று முடிவு கட்டி யிருந்தாள். தன் தந்தையின் வரவை எதிர் நோக்கி யிருந்தாள். தந்தை வந்தவுடனே பிரயாணத்துக்குத் தயார் செய்யவும் ஆரம்பித்து விட்டாள். தனக்கு எப்படிப் புடவை எடுக்கிறது, தனது கணவனுக்கு எந்த மாதிரி வேட்டி எடுக்கிறது

என்பதைப் பற்றி யெல்லாம் தந்தையிடம் விழுந்து விழுந்து விசாரித்துக் கொண்டிருந்தாள்.

தனது கணவனின் இந்தப் பதிலைக் கேட்டதும் திடுக்கிட்டாள். தனது ஆசை யெல்லாம் வீணாகி விட்டதை எண்ணினாள். ஒருகணந்தான். பிறகு வழக்கம் போல் தனது கணவனின் முடிவு தான் தன்னுடைய முடிவும் என்ற நிலைக்கு வந்து விட்டாள்.

இது அவளுக்குப் புதிதில்லை. இன்று வரையில் தனது கணவனிடம் எதைப்பற்றியும் பிடிவாதம் பிடித்ததில்லை. கணவனின் நினைப்புக்குத் தன்னைப் பக்குவப் படுத்திக் கொள்வாள்.



இப்படியாக அவர்களுடைய வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தது. கடந்த பத்து வருடங்களுக்குள் நான்கு மைல்களைத் தாண்டி விட்டார்கள். இரண்டு ஆண்டுகள். இரண்டு பெண்கள்.

இந்தக் காலத்துக்குள் எத்தனையோ தீபாவளிகள் அவர்களைத் தாண்டிச் சென்று விட்டன. ஒவ்வொரு தீபாவளியின் போதும் காமினிக்குத் தலை தீபாவளி உண்டாகிவிட்ட பின், பக்கத்து வீட்டுக்குழந்தைகள் பட்டாசு சுடுவதையும், புத்தாடை புனைவதையும், கண்டு அவள் குழந்தைகள் கண்ணைக் கசக்கிக் கொண்டு வந்து முன்னால் நிற்கும்போது அவள் உள்ளம் வேதனை அடையும். நடராஜனிடம் எப்படிக் கூறுவது? தன்னைச் சமாளித்துக் கொள்வாள். குழந்தைகளுக்கு மட்டும் ஏதாவது பட்சணங்கள் தயார் செய்து கொடுப்பாள். இதை நடராஜனும் பார்த்துக் கொண்டுதான் இருப்பான். ஆனால் வாளா இருந்து விடுவான்.

குழந்தைகளின் உள்ளங்களை ஏமாற்றாது அவர்களைச் சந்தோஷிக்கச் செய்யவாவது அவள் நடராஜனிடம் பேசலாம். அப்படிப் பேசிப் பழக்க மில்லையே இன்று வரையில். இந்த விஷயத்தில் அவனும் சடமாகி விட்டான். இத்தனைக்கும் அவர்கள் குடும்பத்தில் செலவில் ஒன்றும் குறைவே இடையாது. நடராஜன் எங்காவது செல்லும் போது கண்ணில் நல்ல துணி பட்டால் போதும். விலையைப் பற்றிக் கவலைப்பட மாட்டான். குழந்தைகளுக்கும் காமினிக்கும் ஏராளமாக வாங்கிக் கொண்டு கொட்டுவான். எத்தனை தான் கொண்டு வந்து கொட்டினாலும் குழந்தைகள் உள்ளமே அலாதி யல்லவா?

மற்றக் குழந்தைகள் எல்லாம் புதிய புதிய ஆடைகள் அணிந்து கொண்டு மகிழ்ச்சிகரமாக விளங்கும் நாளில் என்னதான் பட்டாடையானாலும், பழைய ஆடைகளைத் தாங்கள் மட்டும் உடுத்தித் திரிவதை எந்தக் குழந்தைகள் இருதயந்தான் தாங்கும்?

காமினியின் பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டல்லவா? குழந்தைகளுக்கும் வயதாகி விட்டன. அவர்களின் பிடிவாதமும் அதிகமாகத் தொடங்கின. இந்த வருடம் எப்படியும் கணவரிடம் பேசிவிட வேண்டியது தான் என்ற முடிவுக்கு வந்து விட்டாள்.

தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்தது. இன்னும் இரண்டே நாள்தான். இன்று பேசிவிட வேண்டியதுதான். பேசுவோம் என்று தன் கணவனின் அறைக்குச் சென்றாள்.

அங்கு அவள் கண்ட காட்சி? தனது கணவன் பிரயாணத்துக்குச் சித்தமாகி, அதற்கு வேண்டிய வேட்டி சட்டைகளைப் பெட்டிக்குள் அடைத்து வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

காமினி வந்ததை அறிந்த நடராஜன் "காமினி! அவசரமாக வெளியூர்கள் செல்கிறேன். திரும்பி வர ஒருவாரமாவது பிடிக்கும். குழந்தைகளை மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்!" என்றான்.

"ஏன் இப்படி வதைக்கிறீர்கள்? நல்ல நாளும் அதுவுமாக நீங்கள் ஊரிலில்லாமலிருந்தால்..." என்றாள். இதைக் கேட்ட நடராஜன் திடுக்கிட்டுத் திரும்பினான்.

"காமினி! என்ன இன்று? ஒருநாளும் இல்லாத விதமாக உனது நடத்தை விசித்திரமாக இருக்கிறது?"

"ஆமாம்! விசித்திரம்தான். ஊரில் உள்ள குழந்தைகள் எல்லாம் உற்சாகமாகத் திரியும் நாளில், நமது குழந்தைகள் மட்டும் ஒன்றும் இல்லாத குழந்தைகள் மாதிரி ஏங்கித் திரிவது விசித்திரந்தான். இத்தனை வருடகாலமாக உங்கள் பேச்சுக்கு மாறு கூறாத நான், இன்றுமட்டும் ஏன் இப்படிப் பேச



புரசைவாக்கம் இந்திய இளைஞர் சங்கத்தார் அக்டோபர் மாதம் 6-ந் தேதியன்று காந்தி ஜயந்தியை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். ஸர் எம். ஸிடி. முத்தைய செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்ற மேற்படி விழாவுக்கு ராஜாஜி அவர்கள் தலைமை தாங்கினார். காந்திஜியின் பிறந்த நாளைக் கொண்டாடுவதின் முக்கியத்துவத்தை ராஜாஜி அவர்கள் சிறப்பாக எடுத்துரைத்தார்கள். புரசை இந்திய இளைஞர் சங்கத்தின் சார்பாகக் காந்தி மகான் ஞாபகார்த்த மண்டப நிதிக்கு ரூ. 1569-11-0 பண முடிப்பை நகர சபை உறுப்பினரும் சங்கத்தின் உதவித் தலைவருமான திரு எம். ஆர். அப்பாதுரை ஸ்ரீ அவர்கள் ராஜாஜி அவர்களிடம் சமர்ப்பித்தார்.

கிறேன் என்பதைச் சற்று சிந்தியுங்கள். நாம் தான் பெரியவர்கள். ஏதாவது காரணங்களை மனத்துக்குள் கூறிக் கொள்கிறோம். இந்தக் குழந்தைகள் எப்படிச் சமாதானம் அடையும்? நமக்குப் பயந்து கொண்டு தங்கள் ஆசைகளை யெல்லாம் அடக்கிக் கொள்ளும். இது பாவமில்லையா? இந்தக் குழந்தைகளுக்காக வேண்டியாவது தீபாவளியன்று நீங்கள் இங்கிருங்கள். அவர்களின் சந்தோஷத்தைப் பார்த்து விட்டு மறுநாள் ஊருக்குப் போகக் கூடாதா? இந்த என்றே ஆசையை நிறைவேற்றுங்கள்"—காமினி எப்படியோ இவ்வளவையும் பேசி விட்டாள்.

நடராஜனுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனால் அவனுக்குக் கோபம் வரவில்லை. அன்புடன் "காமினி! நான் ஏதாவது தப்புச் செய்கிறேன் என்று கூறு. திருத்திக் கொள்கிறேன். ஊராரெல்லாம் அர்த்தமில்லாமல் ஏதாவது செய்கிறார்கள் என்பதற்காக நாமும் அதைச் செய்ய வேண்டுமா? அப்புறம் அவர்களுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம்? வாழ்க்கையில் மகிழ்ச்சி என்பது நமது மனப்பான்மையைப் பொறுத்தது. நல்லதைக் கூட நினைத்துத் துக்கப்பட முடியும். கெடுதியில் கூட நன்மையைக் கண்டு ஆனந்தப்பட முடியும். இத்தனை வருட காலம் என்னோடு பழகி இன்னும் என்னைப் பற்றிப் புரியாமல் பேசுகிறாயே. அசடே! அர்த்தமில்லாமல் எதையும் நினைத்து அலட்டிக் கொள்ளாதே. நமது குழந்தைகள் உன்னையும் என்னையும் போலத் தானே இருக்கும்! அவர்கள் துக்கப்பட மாட்டார்கள். நாம் பேசிக் கொள்வது குழந்தைகளின் காதுகளில் எட்ட வேண்டாம். நான் மிகவும் முக்கிய வேலையாகச் செல்கிறேன். இதைத் தடுக்காதே. மகிழ்ச்சியுடன் வாழக் கற்றுக் கொள்."

நடராஜன் இவ்வளவும் கூறிய பின் காமினி பேசப் போகிறாளா என்ன? நடராஜன் ரயிலேறி விட்டான்.

காமினியின் உள்ளம் குமுறிக் கொந்தளித்தது. எத்தனை சமாதானம் கூறினாலும் ஏற்க வில்லை. மீண்டும் மீண்டும் சிந்தனை. இத்தனை நாள் இல்லாது இன்று மட்டும் மனம் ஒரு நிலைக்கு வர மறுக்கிறதே! பல குறுக்கு மார்க்கங்கள் அவள் எண்ணத்துக்கு வராமல் இல்லை. ஆனால் காமினி ரொம்பவும் உயர்ந்த உள்ளம் படைத்தவள். மனத்தைக் கட்டுப் படுத்தினாள். வேகமாக ஓடிய சிந்தனையை இழுத்துப் பிடித்தாள். இத்தனை வருட இன்ப வாழ்வை யெல்லாம் ஒரு நொடியில் பாழடைத்து விட முடியும். அது பெரிதல்லவே! வேண்டியது பொறுமை. கஷ்டப்பட்டுப் பொறுமை யடைந்தாள்.

★

அன்று செங்கோட்டை பாசஞ்சரில் ஒரே கூட்டம். புது மணம் புரிந்த தம்பதிகள் நிறைய காணப்பட்டனர். இளம் பெண்கள், யுவர்கள். அவர்களைத் தீபாவளிக்கு அழைத்துச் செல்லும் மாமனார், மாமியார், மைத்துனர் கூட்டம் வண்டியில் நிறைந்திருந்தது. பணக்காரர், ஏழை என்ற வித்தியாசமில்லாமல் அனைவரையும் அந்த ரயில் சுமந்து கொண்டு ஓடிக் கொண்டிருந்தது.

வண்டிக்குள் எப்படியோ முண்டியடித்துக் கொண்டு நடராஜன் ஏறி விட்டான். உட்கார ஒரு இடம் கூடக் கிடைக்க வில்லை.



அக்டோபர் மாதம் 3-ந் தேதி சென்னை ஸ்ரீ திருவேங்கட முடையான் சபையின் நூற்று ஒன்பதாவது ஆண்டு விழா கருடோத்சவம் மிகச் சிறப்பாக நடை பெற்றது. விழாவை ஒட்டி மேற்படி சபையை நிறுவிய ஸ்ரீ ராகவ ராமானுஜ தாஸர் அவர்களின் திருவுருவப் படத் திறப்பு விழாவும் நடைபெற்றது. இந்த விழாவுக்குச் சென்னை சிவனடியார் திருக்கூட்டச் செயலாளரும் ஆர். நாஸன் ஸ்டூடியோவின் உரிமையாளருமான திரு எம். ஆர். சம்பந்த நாயகர் தலைமை வகித்தார். கல்கி உதவி ஆசிரியர் திரு பரதன் அவர்கள் ஸ்ரீராகவ ராமானுஜ தாஸரின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தார். ஸ்ரீ ராகவ ராமானுஜ தாஸர் ஆரம்பித்து வைத்த இத் திருப்பணியை அவருக்குப் பின் அவரது சந்ததியார்கள் திரு வி. எஸ். கோவிந்தராஜ நாயகர் அவர்களும், திரு வி. எஸ். கண்ணபிரான் நாயகர் அவர்களும் மிகுந்த சிரத்தையுடன் நடத்தி வருகின்றனர். ஸ்ரீ வி. எஸ். கோவிந்தராஜ நாயகர் கோயில் உற்சவ மூர்த்திகளுக்குச் சாத்துபடி செய்யும் கலைக்கு வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவர். அவருடைய கைத் திறமை அன்றைய கருடோத்சவத்தில் சுடர் விட்டுப் பிரகாசித்தது. கருட வாகனத்தின்மீது பெருமாள் எழுந்தருளிய கோலம் மனத்தில் பக்திப் பரவசத்தை ஊட்டிக் கொண்டிருந்தது. இந்த ஆஸ்திகப் பணியைப் பக்தி சிரத்தையுடன் செய்து வரும் ஸ்ரீ திருவேங்கட முடையான் சபை தர்மகர்த்தாக்களைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

---

வண்டி முழுதும் ஒரு கோட்டம் விட்டான். குழந்தைகள், வயோதிகர்கள், யுவர் யுவதிகள் நிறைந்து விளங்கின அவன் ஏறிய வண்டி. இவர்கள் யாருக்கும் தன்னால் இடைஞ்சல் வேண்டாமே என்று கருதியவனாய் ஒரு ஓரத்தில் நின்று கொண்டான். வண்டிக்குள் ஒரே இரைச்சல்; சந்தோஷ ஆரவாரம். இடையே ஒரு நாள். அதற்கு அடுத்த நாள் தீபாவளி. குழந்தைகள் பட்டாசு சுடப் போவதை நினைத்து ஆரவாரித்தனர். புதுத் தம்பதிகள் தங்கள் மனப் போக்கின்படி இன்ப நினைவுகளில் லயித்தனர். வயோதிகர்கள் பண்டிகைபற்றிய செலவைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்ததை விட்டு, இந்தக் குதூகலச் சம்பவங்களைப் பார்த்து மறக்க முயன்று கொண்டிருந்தனர்.

செங்கோட்டை பாசஞ்சர் மதுரையை விட்டுப் புறப்பட்டு ஒரு மணி நேரமாகி விட்டது. இரவு மணி பன்னிரண்டு. கொடைக்கானல் ரோடு ஸ்டேஷன் வந்தடைந்தது. எஞ்ஜினைத் தண்ணீர் விடுவதற்காகக் கழற்றிக் கொண்டு சென்று விட்டார்கள். நடராஜனுக்கு உட்கார இடம் கிடைத்தது. ஒரு ஓரமாக உட்கார்ந்தான். இன்று இரவு பூராவும் விழிப்புத்தான். தூங்க முடியாது என நினைத்துக் கையில் ஒரு புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டான்.

நடராஜனுக்கு எதிராக ஒரு வயோதிகர் உட்கார்ந்திருந்தார். அவருக்கு அடுத்தாற் போல் அவரது ஒரே மகன். மகனுக்கு வயது சுமார் இருபத்தெட்டு இருக்கும். இரண்டு பேரக் குழந்தைகள். ஒரே பேத்தி. அடுத்து அவரின் மருமகன். கல்யாணமாகி எத்தனை வருடம் ஆகி விட்டாலும் வருஷா வருஷம் தீபாவளிக்கு அழைப்பதை அவர் நிறுத்தியதில்லை. அந்தப் பெரியவரின் எல்லையற்ற மகிழ்ச்சி அவர் முகத்தில் விளையாடியது. விஷமம் செய்யும் பேரக் குழந்தைகளைச் சமாளிப்பதில் அவரின் ஆனந்தம் கரை கடந்து சென்றது. அவர் நடராஜனைப்

பார்த்தார். இந்தக் களேபரத்தில் அவன் நிம்மதியாகப் புத்தகம் படிப்பதில் ஆழ்ந்திருந்தது அவருக்கு வியப்பையளித்தது.

வண்டி புறப்பட்டது. பேரக் குழந்தை தாத்தாவிடம், "தாத்தா எனக்கு மத்தாப்பு வாங்கி விட்டீர்களா" என்றது. மூத்த பையன் "அணுகுண்டு வாங்கி யிருக்கிறதா" என்று வினவினான். "ஆமாண்டா கண்ணு" என்று பொக்கை வாயைத் திறந்து கூறினார். பெரியவரின் மகள், "காமினிக்கு என்ன வாங்கி யிருக்கிறீர்கள்?" என்றாள்.

"காமினிக்கு அகல ஜரிகையிட்ட பட்டுப் பாவாடையும், பட்டுச் சட்டையும் வாங்கி யிருக்கிறேன்" என்றார்.

ஏற்கெனவே அன்றையக் காமினியின் சொல் நடராஜன் உள்ளத்தை அரித்துக் கொண்டிருந்தது. "ஊரில் உள்ள குழந்தைகள் எல்லாம் உற்சாகமாகத் திரியும் நாளில். நமது குழந்தைகள் மட்டும் ஒன்றும் இல்லாத குழந்தைகள் மாதிரி ஏங்கித் திரிவது விசித்திரம்தான்" என்ற காமினியின் சொல் கூடுசரமெனத் தைத்திருந்தது. வாழ்க்கையில் என்றுமே காமினி, மனம் பொங்கிப் பேசியதே யில்லை. இன்று அவளை எவ்வளவு பெரிய வேதனை தாக்கி யிருந்தால் இப்படிப் பேசி யிருக்கக் கூடும்?

"தம்பி. எந்த ஊர் வரைக்கும்?" என்ற குரல் அவன் சிந்தனையை உடைத்தது. எதிரே இருந்தவர்தான் அவனிடம் அந்தக் கேள்வியைப் போட்டது.

"மாயவரம் செல்கிறேன்" என்று அத்துடன் முற்றுப்புள்ளி வைக்க விரும்பினான்.

பெரியவர் விடும் வழியா யில்லை. "தீபாவளிக்காகச் செல்கிறீர்களா?" என்று மறு கேள்வி போட்டார்.

நடராஜன் பாடு தர்ம சங்கடமாகிவிட்டது. ஒரே வார்த்தையில் "ஆமாம்" என்றான்.

பெரியவர் பேசாதிருந்து விட்டார். நல்ல வேளை இத்துடன் விட்டு விட்டார் என்று நிம்மதியாக இருந்தான் நடராஜன்.

பெரியவரின் பேரன் சற்று வெடி சுட்டி: "ஏன் மாமா உங்கள் பையனுக்கு அணுகுண்டு வாங்கி யிருக்கிறீர்களோ?' என்றான். நடராஜன் பதில் கூறவில்லை.

மற்றொரு பையன் "மாமாவுக்குப் பையனில்லை போலும். பெண் மட்டும்தான் இருக்கும்" என்றான். பையன்கள் பேச்சு நடராஜனுக்குச் சவுக்கால் அடிப்பது போலிருந்தது. பதிலே பேசவில்லை.

மூத்த பையன் விடுவதாயில்லை. "ஏன் மாமா, பெண்ணுக்குப் பட்டுப் பாவாடையா? எங்கள் ரோகிணிக்குத் தாத்தா எடுத்தது போலிருக்குமா?" என்றான்.

பெரியவர் "அட போக்கிரிப் பயலே! பேசாமல் வா" என்று அதட்டினார்.

"குழந்தைகளைக் கோபிக்காதீர்கள்" என்றான் நடராஜன். அவன்தான் குழந்தைகள் மனோதத்துவம் என்ற நூலை நன்றாகப் படித்துக் கொண்டிருந்தானே.

"மாயவரம்தான் உங்கள் சொந்த ஊரா? அல்லது மாமனார் வீடா?" என்றார் பெரியவர்.

"என்னப்பா கேள்வி இது! மாமனார் வீடா யிருந்தால், மாமனார் அழைக்க வந்திருப்பார். மனைவி கூட இருந்திருப்பாள். சொந்த ஊருக்குத்தான் திரும்புகிறார். இது கூடத் தெரியவில்லை" என்று இதுவரை பேசா திருந்த பெரியவரின் மகள் கூறினாள். நடராஜன் இலேசாகச் சிரித்துக் கொண்டான். பதில் பேசவில்லை.

பெரியவர்தான் கூறினார். 'அப்படி இல்லையம்மா. இந்தக் காலத்தில் தீபாவளியையே வெறுக்கும் இளம் பிள்ளைகள் நிறைய இருக்கிறார்கள். அவர்கள் இந்தத் தீபாவளி நாளில் ஊரைவிட்டு வேண்டுமென்றே எங்காவது கிளம்புவதை ஒரு நாகரிகமாகக் கருதுகிறார்கள். அதனால்தான் கேட்டேன்."

"இந்தக் காலத்தில் மட்டுமில்லை, அப்பா! அந்தக் காலத்தில் இவர்கூட தீபாவளியை வெறுத்தவர்தான். தலை தீபாவளியில் அது வேண்டும் இது வேண்டும் என்று உங்கள் உயிரை வாங்கிவிட வில்லையா? எல்லாம் கல்யாணம் ஆகும் வரைதான் தீபாவளியை வெறுப்பார்கள். ஆகிவிட்டதோ, மாமனார் வீட்டின் மேல் வேட்டையையும் ஆரம்பித்து விடுவார்கள்" என்றாள் அவள் கேலியாக.

இதுவரையும் அரை குறை தூக்கத்தில் இருந்த அவளுடைய கணவர் "என்னை வம்புக்கு இழுக்கா விட்டால் உனக்குத் தூக்கமே வராதோ?" என்றார்.

**வ**ண்டி திருச்சி வந்து நின்றது. இந்தக் குடும்பம் திருச்சியில் இறங்கி விட்டது. வண்டியே அநேகமாகக் காலியாகி விட்டது.

நடராஜன் நீட்டி நிமிர்ந்து படுத்தான். அவனுக்குத் தூக்கம் வரவில்லை. வண்டியில் வேறு யாரும் வந்து ஏறி விடுவதற்குள் படுத்துக் கொள்வோமே என்றுதான் படுத்தான். தூங்குவது போல அபிநயித்துக் கொண்டிருந்தான். வண்டியில் யாரோ ஏறி வருவது தெரிந்தது. அவர் ஒரு போலீஸ்காரர்.

அவர் நடராஜனைத் தட்டி எழுப்பி "தூங்கி விடாதீர்கள். வண்டியில் வேறு யாருமே இல்லை. திருட்டு அதிகம் நடக்கிறது" என்று எச்சரித்து விட்டுக் கீழே இறங்கினார்.

வண்டியில் யாருமே இல்லையா? நடராஜனுக்கு ஆச்சரியமாக இருந்தது. நாளை தீபாவளி இருக்கும் போது தன்னைத் தவிர வேறு யார்தான் பிரயாணத்தைத் துவக்குவார்கள்? அவன் தூக்கமெல்லாம் பறந்தோடி விட்டது. வண்டியில் ஆட்கள் நிறைந்து படுக்க இடமில்லாதிருந்த போது தூக்கம் தூக்கமாக வந்தது. இப்போதென்னடா வென்றால் தாராளமாக இடமிருக்கும் போது தூக்கமே வர மறுக்கிறது!

அவன் சிந்தனைகள் விரிவடைந்தன. வாண்டுப் பயல் பேசியது, பெரியவரின் பெண் பேசியது, அந்தப் பெண்ணின் கணவர் பேசிய பெருமிதம் இத்தனையும் மீண்டும் அவன் கண்முன் வந்தன. எல்லாவற்றிற்கும்

# இந்தியாவின் ரஸ்தாக்களுக்கு பிடுமென் !

பம்பாய் நகருக்கு அருகாமையிலுள்ள டிராம்பேயில் ஸ்தாபிக்கப்படும் பர்மா-ஷெல்லாரின் ரிபைனரி இந்தியாவிலேயே மிகப்பெரியது. இந்தியாவின் ரஸ்தாக்கள், நீர்ப்பாசன வாய்க்கால்கள், விமான நிலையங்கள், மற்றும் சமுதாய நலத்திட்டங்களுக்குத் தேவையான 'பிடுமென்' இந்தியாவிலேயே இந்த ஒரு ரிபைனரியில் மட்டும்தான் தயாரிக்கப்படும்.





காந்தி மகாத்மா பிறந்த தினத்தை அக்டோபர் மாதம் 2-ந் தேதி ஆ. தெக்கூர் ஸ்ரீ விசாலாட்சி கலாசாலை மாணவர்கள் சிறந்த முறையில் கொண்டாடினர். அன்று காந்தி சேவா சங்கத்தின் சார்பில் பொதுநலத் திருப்பணி ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. நெற்குப்பையிலிருந்து வேந்தன்பட்டிக்குச் செல்லும் சாலையை நெற்குப்பை பஞ்சாயத்துப் போர்டு தலைவர் திரு லெ. இராமநாதன் செட்டியார் தலைமையில் செப்பனிடத் தொடங்கினர். ஆசிரியர்களும், மாணவர்களும் சேர்ந்து அன்று ஒரு பர்லாங்கு தூரம்வரை சாலையைச் செப்பனிட்டனர்.

அன்று மாலை காந்தி மகான் பிறந்த நாள் விழா திரு லெ. இராமநாதன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. காந்தி மகானைப் பற்றித் திருவாளர்கள் மு. சொக்கலிங்கம் அவர்களும், லெ. இராமநாதன் அவர்களும் சொற்பொழிவாற்றினர். தலைமையாசிரியர் திரு என். எஸ். கிருஷ்ணமூர்த்தி நன்றி கூறினார். (மாணவர்கள் சாலையைச் செப்பனிடும் காட்சிகளைப் படத்தில் காணலாம்.)

---

மேலாக அந்தப் பெரியவரின் பெருமிதம் நிரம்பிய தோற்றம்; மகிழ்ச்சி நிறைந்த வதனம் அவனை எங்கோ இழுத்துச்சென்றது.

வண்டி ஓடிக் கொண்டிருந்தது. நடராஜனின் எண்ணமும் ஓடியது. தனது 'மாமனார் அடையும் எவ்வளவு பெரிய மகிழ்ச்சியை இத்தனைவருட காலமும் கெடுத்துக்கொண்டு வந்திருக்கிறோம்' என்ற எண்ணம் வந்து தாக்கியது. கடந்த பத்து வருட காலமும் தன்னையே தெய்வமெனக் கருதிய காமினி எத்தனை வருடம் அடக்கிய மனப்புயல் அன்று வீசியது என்பதையும் நினைத்தான். எல்லாவற்றிற்கும் மேலாகத் தான் இத்தனை வருட காலமும் காண மறுத்த தனது குழந்தைகளின் ஏங்கிய மன நிலை பற்றி எண்ணினான். பிரத்தியட்ச உலகில் தான் எவ்வளவு பெரிய குருடனாகி விட்டோம் என்ற எண்ணம் தன்னைத் தானே பலமாகத் தாக்கியது. அவன் உள்ளத்தின் மலின பாகம் தாக்குண்டது. 'இனி என்ன செய்வது?' என்ற கேள்வி முளைத்தது. காமினியிடம் தான் கூறி வந்த விருப்பு. இத்தனை நாட்களாக மாமனாரிடம் பேசி வந்த ஜம்பம் எல்லாம் எங்கே போவது? அன்றே மாமனார் கூறிய நியாயங்கள் எல்லாம் நினைத்தான். குடும்பத்தில் சந்தோஷம் நிலவ வேண்டும். வருஷத்தில் ஒரு நாள். ஊர் முழுதும் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கும் நாள். தன் குடும்பம் பத்து வருட காலம் அந்த மகிழ்ச்சியில் கலந்து கொள்ளவில்லை. தனக்கு எவ்வளவு பெரிய நஷ்டம்? உலகில் மகிழ்ச்சிக்காகத் தானே வாழ்வதெல்லாம். மகிழ்ச்சியைத் தேடித்தானே எல்லோரும் அலைவது. தான் மட்டும் மகிழ்ச்சியைப் புறக்கணித்திருப்பது அவன் நினைவில் குமிழியிட்டன.

வண்டி தஞ்சாவூரில் நின்றது. நடராஜன் ஒரு தீர்மானத்துடன் கீழே இறங்கினான். ரயில் தனது பிரயாணத்தைத் துவக்கியது.

★

அதிகாலை ஊரெல்லாம் தீபாவளிக் கொண்டாட்டம். கதவு தட்டப்படும் சத்தம் கேட்டதும் காமினி இந் நேரத்தில் யார் என்று கதவைத் திறந்தாள். நடராஜன் கையில் மூட்டைகளுடன் நின்றிருந்தான். அவள் கண்களையே அவளால் நம்ப முடியவில்லை. திகைத்துப் போய்விட்டாள்.

உள்ளே வந்து மூட்டைகளைப் பிரித்தான். பட்டுப் புடவை, பட்டுச் சட்டை, பட்டாசுக் கட்டுகள், மத்தாப்பு பெட்டிகள். காமினிக்கு ஒன்றும் விளங்கவில்லை. கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்த குழந்தைகள் காண்பதைக் கனவா நனவா எனச் சந்தேகித்தன.

அன்று காலை நடராஜன் வீடு மிகுந்த சோபையுடன் பிரகாசித்தது. காமினிக்கு அன்றுதானே தலைதீபாவளி!

---

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10.

"வெண்மையான, சுத்தமான

# லக்ஸ் டாய்லட் சோப்பின்

நுரை மிகவும் மிருதுவானது. நறுமணம் கமழ்வது . . ."

என்று கூறுகிறார்

## குமாரி கமலா




இந்தியாவில்
தயாரித்தது



லக்ஸ் டாய்லட் சோப் இவ்வளவு வெண்மையாயிருப்பதின் காரணம் என்ன? அதை தயாரிக்க மிகவும் சுத்தமான எண்ணெய்களையே உபயோகிக்கப்படுகிறது என்பதுதான். குமாரி கமலா கூறுவதாவது: "எனது பூரண அழகு பராமரிப்பும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகிப்பதுதான். அதன் சுறுசுறுப்பான, மென்மையான நுரை அழுக்குகளைச் சுத்தம்செய்து சருமத்தைப் பட்டுப்போல் மென்மையாகவும், தெளிவாகவும் வைத்திருக்கிறது. நீங்களும் அதை தினமும் உபயோகித்து உங்கள் வதனத்தையும் அழகாக வைத்துக்கொள்ளுங்கள். அதன் நறுமணத்தையும் நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்!"

"... அதனால்தான் என் வதனத்தை தெளிவாகவும் மலர்ச்சியோடும் வைத்திருக்க லக்ஸ் டாய்லட் சோப்பையே நம்பியிருக்கிறேன்!"

**முக்கிய செய்தி!**

தலைமுதல் கால்வரை
கவர்ச்சி அளிக்க

**புதிய பெரிய ஸைஸிலும்**

இப்பொழுது கிடைக்கிறது!
இன்றே வாங்கி உபயோகியுங்கள்!

**சினிமா நட்சத்திரங்களின் அழகுதரும் சோப்**

LTS. 428-50 TM

REGISTERED No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*